# ஜடாவல்லவ

ஆசிரியர்

வரகவி—திரு. அ. சுப்ரமணிய பாரதி

கும்பகோணம்

ஸ்ரீ கிருஷ்ணா அண்டு கம்பெனி

1939

உ

செந்திலாண்டவன்
திருவடி துணை.

# ஜடாவல்லவர்

வரகவி—திரு. அ. சுப்ரமணிய பாரதி
இயற்றியது.

(திருத்தமான—புதிய பதிப்பு)

ஸ்ரீ கிருஷ்ண அண்டு கம்பெனி,
புது டபீர் தெரு : கும்பகோணம்.



[விலை ரூ. 1—2—0.

உ

செந்திலாண்டவன் திருவடி துணை.

# முகவுரை



தமிழுலகத்திலே சென்ற பல வருஷங்களாக, ஆங்கில பாஷையிலுள்ள நாவல்களையும் நாடகங்களையும் அநுஸரித்தவைகளாய்த் தமிழில் வெளி வந்துலாவும் புத்தகங்கள் பல. அவற்றிற்கேற்ப நூலாசிரியரும் புத்தகங் களை வாங்கிப் படிப்போரும் பெருகிவருகின்றனர். ஒரு பாஷையிலுள்ள அரிய பெரிய கருத்துக்களை நம் தாய்ப் பாஷையிலே மொழி பெயர்த்து உலகுக்குபகரிப்பதுகாண, நாம் பெரிதும் களிப்படைகின்றோம். ஆனால் ஒரு பாஷையிலிருந்து பிறிதொரு பாஷையில் மொழி பெயர்ப்பதை வெகு சுளுவாகக்கருதி, இப்பொழுது பள்ளிச் சிறுநற் படிப்பை முடித்து உத்தி யோகத்திற்கு இடர்ப்படும் உலகஞானமிலாதாரும் தம்மனத்திற்கும் அறி வின் முதிர்ச்சிக்கும் ஏற்றபடி தாம் முதல் நூலாக எடுத்தாளும் ஆங்கில நூலை மொழி பெயர்க்கத் துணிந்து தமிழிற்குரிய சொற்பொருட் சுவை, வாக்கியத்தெளிவு, அதன் அமைப்பு முதலியன நன்கமையப் பெறாமல், நமது தேசத்தினர் அநுஷ்டிக்கவும் பயிலவும் தகாத பிறதேசத்து ஒழுக்கங் கள் விரவிய புத்தகங்களை வெளியிட்டுக் களிக்கின்றனர்.

இத்தகைய புத்தகங்களைப் பார்க்கும்போது, தமிழிலே கருத்தைச் செலுத்தி இம்மட்டேனும் பாடுபட முன்வந்திருக்கின்றனரே என்னும் மனச் சமாதான மொருபக்கமிருப்பினும் நம் தேயத்திற்கு வேண்டப்படாத விஷயங்கள் அடங்கிய புத்தகங்கள் தோன்றுவதிலும் தோன்றாமையே மேலெனஎண்ணவேண்டியதாகிறது.

ஆங்கில பாஷையிலே சிறந்த வித்பத்தியும் உலக ஞானமும் கைவரப் பெற்ற ஆங்கிலேய மேதாவிகளின் சுயவறிவிலிருந்து, படிப்பவர் மனத் திற்கு இன்பமும் அவாவும் கொடுத்து நல்லறிவை யூட்டத்தக்க நடையும் கருத்தும் நன்கமையப்பெற்று வெளிவந்து உலகமெல்லாம் கொண்டாட விளங்கும் நாவல்களை உலகமறியாதவரும் பிறர் கருத்தை யறியும் உணர் வில்லாதவருமாகிய சிறுவரெடுத்தாளப் புகுவது, விராடபூபனின் மகன் உத்தரன் யுத்தத்திற்குப் போகவிரும்பியதை நிகர்க்குமன்றோ?

நாவல்களும் நாடகங்களும் சரித்திரங்களும் சுயவறிவிலிருந்து அநு பவ வழியே தோன்றுமாயின் அவை உலகத்திலே, உயிர்பெற்று உலாவு வனவாகும்.

மேனாட்டு மேதாவிகளின் நூல்களைத் தழுவி யெழுதப்படும் நூல்களெல்லாம் இவ்வாறிருக்கின்றனவென்று நாம் குறைகூற வரவில்லை. இருபாஷை யறிவும் நிரம்பப்பெற்ற அநுபவமுடையார் எழுதியுள்ள நூல்கள் சகல லக்ஷணங்களும் நன்கமையப்பெற்று உலாவுவதைக் காண்கின்றோம். அப்பொழுது மேனாட்டு மேதாவிகளின் கருத்துக்களை நாம் படித்துணரும் பேறு வாய்த்ததேயெனக் கருதி மகிழ்கின்றோம். அப்படிக் காணப்படும் நூல்கள் மிகச் சிலவாயும் பொருந்தாதன பலவாயுமிருப்பது பற்றி வருந்தி இறைவன் திருவருளை முன்னிட்டு முதல்முதல் ஜடாவல்லவர் என்னும் இச் சரித்திரத்தை எமது அநுபவத்தைக்கொண்டு முதல் நூலாக எழுதி வெளியிட்டோம்.

இந்நூல் நம் தமிழ்நாட்டு ஜனசார சம்பந்தமானதாதலால், இது தற்காலத்தில் நம்மவரிடம் நல்ல மரத்திற் புல்லுருவி பாய்வதேபோல் பாய்ந்து பரவியிருப்பதும் நமக்கொரு சிறிதும் வேண்டாதனவுமான நவீன நாகரிகத்தினால் விளையும் விபரீதங்களை விவரித்துக் காட்டும் துறையினை மேற்கொண்ட வரலாறுகளின் மூலமாய் நம் தமிழ்நாட்டுப் பண்டைய லௌகிக வைதிக நாகரிக நெறிகளை யெல்லாம் விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

இறைவன் திருவருளால் இது மூன்று பிரசுரங்களை யடைந்து தமிழ்நாட்டி லுலவித் தன் கடமையைச் செய்தபடியால், இதனைக் கவனித்துப் படித்த தமிழபிமானிகளும் புலவர்களும் கதாப்பிரியர்களும் கலாசாலைத் தலைமை உபாத்தியாயர்களும் கலாசாலையிலே வைத்துப் பிள்ளைகட்குப் ஒரு வருஷகாலத்திற்குள் போதிக்கத் தக்கவாறு சுருக்கமான பதிப்பு ஒன்று வெளியிடும்படி நேரிலும் கடிதமூலமாகவும் தெரிவித்தனர். அன்னார் கருத்திற்கிணங்கி ஒரு பதிப்பு வெளியிடப்பட்டது. அதனைக் கவனித்த வித்தியா இலாகா அதிகாரிகள் பாட புத்தகமாக அங்கீகரித் தாதரவுகாட்டினர். இப்பொழுது இது பலர் விருப்பப்படி திருத்தமான புதிய பதிப்பென்னும் மகுடத்துடன் பிரசுரம்பெறத் திருவருள் துணை செய்ததுபற்றி மகிழ்கின்றோம்.

இந்நூலிலே காணப்படும் பெரியோர் திருவாக்குகளும் அரிய போதனைகளும் கலாசாலை மாணவர்களுள்ளந்தோறும் நிலைநின்று நல்ல பயனையளிக்குமாறு எம்மை யாட்கொண்டருளிய பரம கருணாநிதியாகிய செந்திலாண்டவன் திருவருள் புரிவானாக.

சென்னை,
7—4—'39.

திரு. அ. சுப்ரமண்யபாரதி.

This

the first of my works is most respectfully

DEDICATED

TO

MY REVERED GURU

**Thiru A. Sivananda Sagara Yogeeswarar**

as a token of my humble respects

and regards to him

உ

செந்திலாண்டவன்
திருவடி துணை

# ஜடாவல்லவர்

## அத்தியாயம்—1

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

கடல்புடைசூழ்ந்த இப்பூவுலகின்கண், புண்ய பூமியாகிய பரத கண்டத்தின் தென்கீழ்ப்பகுதியிலே வடக்கே வேங்கடத்தையும் தெற்கே கன்னியாகுமரியையும் எல்லையாகக்கொண்ட தமிழ்த் தேயத்திலே "தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே மண்ணுவதுஞ் சோழமண்டலமே"—எனக் கம்பரால் விதந்தோதப் பெற்ற சோழவளநாட்டிலே காவிரிநதி தீரத்தின் வடகரையிலே பிள்ளையார்புத்தூர் என்றொரு சிறு ஊருண்டு. அவ்வூர் குன்றாத நீர்வளமலிந்து நிலவளம் பொலிந்து செங்கமலச் செல்வி திருவருணோக்கம் பரிபூர்ணமா யமைந்து மக்கள் விரும்பிக் குடிபுகுதற்குரிய சகல வசதிகளும் வாய்க்கப் பெற்றுள்ளது. அதில் சுமார் ஐந்நூறு வீடுகளுண்டு. பிராமணரின் வீடுகளை விட ஏனைய வருணத்தவரின் வீடுகளே அதிகம். அவ்வூர் செந்தமிழ் நாட்டினைச் சார்ந்ததாதலின் அங்கிருப்பவர் பேசுந் தமிழ் நல்ல செந்தமிழாகவே யிருக்கும். அவ்வூரை நாற்புறமும் மதில் சூழ்ந்ததுபோலத் தென்னை, பலா, மா முதலிய பலவகை மரங்களடர்ந்த சோலைகள் சூழ்ந்திருக்கும். அவை கண்ணுக்கும் கருத்துக்கும் குளிர்ச்சிதரத்தக்க பசுமைநிறம் பொருந்தி விளங்கும். அச்சோலைகளிலே பகலவன் வெப்பம் காண்பதரிதாகும். எப்பொழுதும் குளிர்ந்த மந்தமாருதம் வந்துலாவிக்கொண்டே யிருக்கும். பலவகைப் பறவைகளும் எப்பொழுதும் கலகல

வென்று காதுக்கினிமையாகக் கூவி விளையாடிக் கொண்டிருக்கும். அவ்வூருக்கு நேர் மேற்கே நான்கு கல் தூரத்திலே காவிரி நதியினின்று பிரித்து ஒரு கால்வாய் வெட்டப்பட்டிருக்கின்றது. அக்கால்வாய் பிள்ளையார்புத்தூருக்குக் குறுக்கே யோடி அவ்வூரைச் செழிப்பித்துப் பின் கிழக்கு முகமாகச் சென்று பல ஊர்களிற் போய்ப் பாயாநிற்கும். அக்கால்வாயினின்றும் அநேக சிறு சிறு கால்வாய்கள் பிரிந்து சோலைகள் தோறும் சென்று வளப்பந்தந்து நிற்கும். இத்தோற்றம் பார்வைக்கும் மனத்திற்கும் வெகு ரம்மியமாக இருக்கும். சோலைகளைச் சுற்றித் தென்றிசையிலே காவிரி நதியும் ஏனைய மூன்று பக்கங்களில் வாழைத் தோட்டங்களும் அவ்வாழைத் தோட்டங்களைச் சுற்றிக் கரும்புக் கொல்லைகளும் அவற்றைச் சூழ நெல்விளையும் நன்செய் நிலங்களு மிகுந்து செழித்து விளங்கும். எங்கே பார்த்தாலும் விளை பயிர்கள் நிறைந்து பசுமையாக இருக்கும். அங்குப் பயிரிடும் நிலங்களையன்றிக் கரம்பு நிலமென்பது காண்பதரிது. அந்நிலங்கள் பொன்விதைப்பினும் விளையும் என்று புகழத்தக்க வளப்பமுடையன. அவை நாடுபடு திரவியங்களாகிய செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர் முதலியவைகளை ஏராளமாக, கொடையிற் றளராவள்ளல் போலக் கொடுப்பனவா யிருக்கின்றமையின் அவற்றுள் ஓர் ஏக்கர் நிலம் குறைந்தது விலை ரூபா ஆயிரமாகும். அவ்வூரிற்சமபாதி பக்கத்தூராகிய புத்தூர் ஜமீன்தாருக்குச் சொந்தமானது. மற்றைப் பாதியில் பெரும்பான்மை அவ்வூர் அந்தணருக்கும் சிறு பான்மை வேளாள குலத்தவருக்கு முரியன.

அந்தணருள் வடமர் அஷ்டஸஹஸ்ர வகுப்பாரென்னும் இரண்டு வகுப்பார் அவ்வூரில் வாசஞ்செய்து வருகின்றார்கள். வடம வகுப்பார் சுமார் நாற்பது வீட்டுக்காரர். நாலைந்து வீட்டாரே அஷ்டஸஹஸ்ர வகுப்பைச்சேர்ந்தவர். தவிர, பெருமாள் கோயில் பூஜை செய்யும் ஒரு ஐயங்கார் வீடும் சிவன் கோயில் பூஜை செய்யும் குருக்கள் வீடும் உண்டு. வடம வகுப்பார் தக்க பூஸ்திதியுடையவர்; ஸம்ஸ்கிருத பாஷையில் தேர்ச்சியடைந்தவர். அஷ்டஸஹஸ்ர வகுப்பாருக்கும் அந்நவஸ்திரத்திற்குக் குறைவற்ற பூஸ்திதியுண்டு. ஆனால் அவர்கள் வடமரைப்போன்ற தனவந்தரல்லர். ஸமயோசிதமான யுக்தி புத்தி வாய்ப்பேச்சு டம்பம் அதிகாரம் முதலியவைகளில் வடமர்

இவர்களுக்கு ஒப்பாகார். ஆகையால் அஷ்டஸஹஸ்ர வகுப்பாருடைய அநுசரணை வடமருக்கு மிகவும் இன்றியமையாத தாயிற்று. ஆகவே ஒருவர்க்கொருவர், சகோதரர்போல அந்நியோந்நிய நேயமுடையவராயினர்; பெரும்பான்மையர் கபடமற்றவர்; சாத்விககுணமும் ஆஸ்திகத் தன்மையும் பெற்ற விற்பந்நர்; ஸ்நான ஸந்த்யாவந்தநாதி நியமநிஷ்டை தவறுதவர்; விபூதி ருத்ராக்ஷதாரணமே தமக்குச் சிறந்த ஆபரணமாகக் கொண்டு "ஓதலினன்றே வேதியர்க் கொழுக்கம்" என்பதையறிந்து வருணுசிரம ஒழுக்கத்தைக் கைப்பற்றி நடப்பவர்;

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்ருங்—
ஐம்புலத்தா றோம்பல் தலை"—

என்பதற் கிணங்க வந்த விருந்தினரையும் அதிதிகளையும் உபசரிக்கும் தருமகுணசீலர்; வருணுசிரம நெறிதவறி நடப்பவர் முகத்தில் விழிக்க அகத்தில் வெறுப்புக் கொள்பவர்; "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர், பழுதுண்டு வேருேர் பணிக்கு" என்னும் முதுமொழிக் கிணங்கி உழுது பயிர்செய்து ஜீவனம் செய்பவர்; பிறர் கைக்கீழ் வேலையிலமர்ந்து ஜீவிப்பவரல்லர்.

இவ்வாறு நீர்வள நிலவளங்களும் சற்குணமுடைய குடிகளும் அமையப்பெற்ற பிள்ளையார் புத்தூரில் பிராமணருள் அந்நதான உமாமகேசுவர ஐயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் வடமர் என்னும் வகுப்பைச் சேர்ந்தவர்; தக்க கல்வியும் ஆஸ்திக புத்தியுமுடையவர்; அதிதி விசுவாசமும் நன்றி மறவாமையும் இரப்போர்க்கில்லை யென்ருதளிக்கும் கருணையும் அவரிடங் குடிகொண்டிருந்தன. பல பல சொல்வானேன்—

"பொறைக் கயிற்றிற் புகழையின் சொல்லெனும்
விறற் கயிற்றின் விருந்தைக் குரவர்சொன்
மறைக் கயிற்றின் மனதைத் திருவைநல்
லறக்க யிற்றி னசைப்பவர்... ..."

என்பது போன்ற பெருங்குணங்களோடு கூடியவர். இதனுல் இம்மகாநுபாவரை, ஆதுலர்க்கு இவரே புகலிடம், அறத்திற் கிவரே பிறப்பிடம், தவத்திற்கிவரே உறைவிடம், கல்விகேள்விகளி னுராய்ச்சிக்கு இவரே அறிவிடம் என்று அப்பக்கங்களிலுள்ள யாவரும் புகழ்ந்து பேசுவாராயினர். ஆகவே இவர் அந்நதான உமாமகேசுவர ஐயர் என்னும் சிறப்புப் பெயர் பெற்று

விளங்கினர். இவருடைய கல்விஞான நற்செய்கைகளுக் கேற்பத் திரண்ட செல்வமில்லாவிடினும் இவருக்கு இருபத்தையாயிர ரூபாய் மதிப்புடைய ஸ்திதியிருந்தது. இவர் பத்தினியாகிய **தர்மாம்பா**ளென்னும் உத்தமி வயிற்றில் ஒரு சற்புத்ரன் பிறந்தான். தர்மாம்பாள் தன் பெயருக்கேற்றபடி தரும சிந்தனையும் தூய குணமும் பதியிடத்துத் தெய்வ விசுவாசமுமுடையவளாய், தருமமென்கிற கடலிலே பிறந்த தரும தேவதையின் அவதாரமே இந்த மாதரசியென்று அறிஞர் புகழுந்தன்மை வாய்ந்து விளங்கினள். இந்த உயர்ந்த குணங்களமைந்த தம்பதிக்குப் பிறநத அப்புத்திரன் நற்குணங்களுக்கும் அழகுக்கும் இருப்பிடம்போல விளங்கினன். அதுகண்ட **உமாமகேசுவர ஐயர்** அவனுக்குச் **சந்திரசேகர**னென்னுந் திருப்பெயரிட்டு, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தார்.

> "கலைபயிற் றுதகா தலர்க்கு மாநிதி
> நிலையென வளிக்குத னெறியில் பித்தர்க்குக்
> கொலைசெய்வா ளீவதுங் குழவி தன்னைமா
> மலையினே ரத்துவைப் பதுவு மானுமே"

என்னும் ஆன்றோர் நீதியும், "**பெருமைசால் கல்வியே இருமையும் நல்குவது**" என்பது முணர்ந்தவராதலால் அந்தணர் மரபின்படி, ஜாதகர்மம் அக்ஷராப்பாஸம் உபநயனம் முதலியன நடத்திச் சிறுவயதிலேயே கல்விகேள்விகளிலே தேர்ந்த நல்ல ஆசிரியரிடத் தொப்புவித்துக் கல்வி பயிலச் செய்வித்தார். **சந்திரசேகரன்** கல்வி பயின்றுவரும் நாளில், அவனுடைய எட்டாவது வயதில் அவனைப் பெற்ற உத்தமி **தர்மாம்பாள்** விண்ணுலகடைந்தனள். பின்னர் அடுத்தவருஷமே **உமாமகேசுவர ஐயர்** சேலம் ஜில்லா தாசில்தாராயிருந்த **ராமநாதையர்** குமாரத்தி **லக்ஷ்மி** என்பவளை மணம்புரிந்து கொண்டார். இப்பெண் அழகில், தன் பெயருக்கேற்ப பங்கயச் செல்விக்குச் சமானமானவள்; குணத்தில் தன் கணவன் குணத்துக்கு முற்று மாறானவளெனினும் **உமாமகேசுவர ஐயர்** அவளிஷ்டப்படி நடந்து வந்தார். இக்காலத்தி லவருடைய ஔதாரிய குணங்களிற் சில மாறுதலடைந்தன. அதனால் அவருடைய கீர்த்திப் பிரதாபமென்னும் கதிரவனொளி லக்ஷ்மியென்கிற ராகுவின் வசப்பட்டு மழுங்கிப்போயிற்று. **லக்ஷ்மி**யம்மாள் லௌகிக நடையில் மிகவும் விருப்ப முடையவளாதலால் **உமாமகேசுவர**

ஐயரின் வைதிகச்செய்கை அந்த அம்மாளுக்குப் பிடிப்பதில்லை. அது பற்றித் தம்மிடம் தம் மனைவி வெறுப்புடையவளாவளோ வென அஞ்சிய உமாமகேசுவர ஐயர் வெளியே அவ்வூராரைப் போன்று வைதிகநெறி தவறாதவர்போல நடந்தும் வீட்டுக்குள் தம் மனைவியின் விருப்பப்படி நடித்தும் வருவாராயினர்; இது உலகத்தில் வழக்கமானதுதானே! தம் மூத்த பத்தினி தர்மாம் பாளையும், அவளோடு இல்லறம் நடாத்தி வாழ்ந்து வந்த காலத் தில் தமக்கிருந்த கீர்த்தியையும் நினைக்குங் காலத்தில் ஐயர் மிக வும், வருந்துவார்; இது விதிவசமென்று சஞ்சலப்படுவார்; சில வேளைகளிலே தாம் ஒரு லௌகிகர் வீட்டில் பெண்கொண்ட தற்கு வருந்துவார். இவரது மனச்சஞ்சலத்தை மாற்ற லக்ஷுமியம்மாளிடம் ஒருயர்ந்த குணமிருந்தது. அவள் சந்திர சேகரனைத் தன் வயிற்றுப் பிள்ளையைப்போலெண்ணி வேளை தப்பாமல் அன்போடு அன்னமிட்டு அவனை ஆதரித்து வந்தாள். இந்த ஒரு நற்குணமானது மேற்கண்ட லக்ஷுமி யம்மாளுடைய துர்க்குணங்களை வெளிப்பரவ வொட்டாமல் தடுத்துவந்தது. உண்மையில் இது மேலான குணமல்லவா? சந்திரனிடத்துக் களங்கமிருப்பினும் பிரகாசத்தால் சிறந்து விளங்குகிறானன் றோ? பல துர்க்குணங்களுக்கிடையே நற்குணம் ஒன்றிருப்பின் அது உடுக்கூட்டங்களின் முன் சந்திரன்போலிருந்து, துர்க் குணங்களைப் பிரகாசிக்க வொட்டாமற் றடுக்குமன்றோ?

சந்திரசேகரனுக்கு இப்போது உலகியலுணரவல்ல பன் னிரண்டாவது வயது நிறைந்துவிட்டது. அத்துர்வன்முடை நாற்றம் வீசும் உவர்க்கடலினிடத்து முத்து விளங்குவதுபோலத் துர்க்குணமே சற்குணமெனக்கொண்ட தன் சிற்றன்னையினிடத் தில் தன்னைச் சொந்தத்தாய்போலப் பாதுகாத்துவரும் ஒரு நற்குண மிருக்கக்கண்டு இது நமது பூர்வ புண்ணிய பலனென மகிழ்ந்து தன் கல்வியிலேயே கவனஞ் செலுத்தி வந்தான்; "ஒருவர்க்குக் கற்றலின் வாய்த்த பிறிதில்லை" என்பது தெரிந்து கொண்டானாதலால் காலத்தை வீணாக்காமல் கல்வியிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்து இடைவிடாமல் ஓதிவரலானான். "வைகறைத்துயிலெழு" என்னும் ஆன்றோர் கட்டளையை மற வாமல் விடியற்காலையி லெழுந்திருந்து தான் அன்று செய்ய வேண்டிய வேலைகளைப்பற்றிச் சிந்தித்துத் தீர்மானித்துக் கொண்டு தீர்மானப்படி காலத்தை வீண்போக்காமல் முறையே

கழித்து வருவான்; நீராடத்தக்க வேளையிலே நீராடுவான்; உண்ணவேண்டிய வேளையிலே உண்டு ஓதவேண்டிய வேளையிலே ஓதிக் காலக் கிரமத்தைக் கடத்திவருவான்; சென்றகாலம் மீண்டும் கிட்டாதென்பதை யுணர்ந்தவனுகையால், யார் எதைச் சொல்லினும் எது எப்படி முடியினும் கவனியாமல் தன் காரியத்திலேயே கண்ணுயிருப்பான்; காலத்தின் அருமை தெரியாமல் அதை வீணுகக்கழிக்கும் மந்தமதியினரைக் காணின் வருந்துவான்; அப்படிப்பட்டவர்களில் தன் பேச்சுக்குக் கட்டுப் படக் கூடியவர்களைக் கண்டால், தனித்தவிடத்திலே அவர்களோடு பேசத் தருணங்கிடைப்பின் அப்பொழுது, "ஏன் காலத்தை வீணுகக் கழிக்கின்றீர்கள்? காலமே கருந்தனம்! காலமே உயிர்! ஒவ்வோருநாளு முயிரின் பகுதி—

'தங்கரு மங்கள் செய்யத் தனிப்பகல் போதாதென்ன
இங்கறி வுடையோர் தூங்கா ரிரவினு மூடர் துஞ்சக்
கங்குலும் போதா வென்னப் பகலுங்கண் படுவர் யாவும்
புங்கமாத் தேர்ந்து வேரோர் புரையிலார் போலு மாதோ'

—என்று கூறியுள்ளார் பெரியோர். இப்படிப்பட்ட அருமையான காலம் தம் உழைப்புக்குப் போதாமல் சிலர் வருந்துவதுண்டு. அவர்களே தாம் மேற்கொண்ட உழைப்பில் ஊக்கமுடையவராவர். சிலர் காலங் கழியவில்லையேயென வருந்துவதுண்டு. அவர்கள்தாம், பிழைக்க வழியறியாமல் அல்லற்படும் சோம்பேறிகளாவர். ஆகவே காலம் மனிதர்களுக்குத் தக்கவாறு நடப்பதாகிறது. அன்றியும், அது உண்பதிலும் உறங்குவதிலும் உடுப்பதிலும் களிப்பதிலுமாகக் கழிகின்றது. அப்படிக் கழிந்ததுபோக எஞ்சியதே நமக்கு நமது முயற்சியின்பொருட்டுத் துணையாய் உதவுகின்றது. 'முதலிலே நான் காலத்தைக் கழித்தேன்; காலம் என்னைக் கழிக்கின்றது இப்போது' என்று ஓர் ஆங்கில வித்வான் கூறியதாக ஒருவர் சில நாளைக்கு முன் எனக்குச் சொன்னுர். ஆதலின் காலத்தின் அருமை யுணர்ந்தவரே பெருமையும் பேறும் பெறுவர்"—என்று கூறி அவர்களைத் தன் வழிக்குத் திருப்புவான். இவ்வாறு சந்திரசேகரன் ஒருவனுக்குப் புத்தி புகட்டியதை அவன் தந்தையும் அவருடைய நண்பரும் நேரிலே கண்டு மகிழ்வுற்றதாகவும் அப்பொழுது ஐயருக்கு, அவருடைய நண்பர், நன்னடக்கையைத் தன் நண்பர்கட்குப் போதித்து அவர்களைத் திருப்பும் தூயகுணம் வகித்த ஸாக்ரடீஸ்

சரித்திரம் கூறியதாகவுஞ் சொல்வதுண்டு. இவன் தந்தையேயன்றி அவ்வூரினரும் இவனிடம் இதுபற்றி அன்புபாராட்டுவர். மாற்றுந்தாயும் அன்பு பாராட்டத்தக்க உயரிய உத்தம குணங்கள் இவனிடம் பிரகாசித்தன. அதனால் இவன் கல்வி பயில்வதிலே காட்டிய முயற்சியும் உழைப்பும் ஓங்கி நின்றன.

இவன் இவ்வாறிருக்குங் காலத்திலே லக்ஷ்மியம்மாளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அப்பால் இரண்டு வருஷங் கழிந்த பின்னர் இன்னொரு பெண் குழந்தை பிறந்தது. மூத்த பெண்ணுக்கு ஜானகி யென்றும் இளைய பெண்ணுக்கு ஸ்ரீமதி யென்றும் பெயரிட்டு உமாமகேசுவர அய்யர் அக்குழந்தைகளை மிகச் செல்வமாக வளர்த்து வந்தார். இக்காலத்தும் சந்திரசேகரன் தன் தாய்க்கேனும் தந்தைக்கேனும் மனம் மாறுபடுமாறு நடந்தவனல்லன். எப்படி நடப்பான்? பக்தியுடையவனுள்ளத்திலே பரமதயாபரனாகிய பகவான் குடிபுகுந்து அவனை நல்வழியிலிருந்து மாறாதிருக்கும்படி நடத்துவது போலன்றோ, இவனுள்ளத்திலே நல்லுணர்வு நின்று, இவனை நல்வழியில் நடத்துகின்றது? சந்திரசேகரன் தன் சகோதரிகள் தன்மீது பொறாமையேனும் சினமேனும் கொள்ளுமாறு நடந்தறியான்; அவர்களுக்குத் தன்னுடைய ஒழிவு நேரங்களில் படிப்புச் சொல்லிவைப்பான்; தீய குணங்காணின் அவர்களை அதிலிருந்து அவர்கட்குக் கோபம் வராமலே திருப்புவான்; அவர்களிடமும் தன் சிறிய தாயார் லக்ஷ்மியம்மாளிடமும் தன் ஆசிரியரிடத்துத் தான் நாடோறும் கற்கும் அருமையான ஸ்லோகங்களைக் கூறிப் பொருளுரைத்து மகிழ்வான்; நாடோறும் மாலை வேளையிலே ஸந்தியா வந்தனஞ் செய்து முடித்தவுடன் ஆலயத்திற்குப்போய் ஸந்நிதியில் நின்று தியான ஸ்லோகங்களைப் பாடிக் கடவுளைத் துதித்துப் பெருமகிழ்ச்சியோடு வீடு திரும்புவான். இவ்வாறு இவன் திரும்புகையில் இவனைச் சந்திக்கும் பக்திமான்கள் பரமானந்தமடைவார்கள்; சில சமயம் மனத்திற்குள், "இவனுக்கு நீண்ட ஆயுளைக் கடவுள் அளிப்பாராக" என்றாசீர்வதிப்பதுமுண்டு. சந்திரசேகரனுக்கு வயதாகவாக அவனுடைய அரிய நற்குணங்களும் திருவுருவப் பொலிவும் சந்திர கலைபோல வளர்ந்து வந்தன. இவன் சகோதரிகளாகிய ஜானகி, ஸ்ரீமதி இவ்விருவரும் குறைவற்ற போஷணையி லிருந்தமையால் கலைமகளும் மலர்மகளும் அவதரித்தனரோ இவ்வில்லிலென்று

பகரத்தக்க திருவுருவச் சிறப்பெய்தினர். இப்பொழுது இவர்கட்குத் திருமணஞ் செய்விக்க வேண்டிய எண்ணம் உமாமகேசுவர ஐயர் மனத்திலே குடி புகுந்தது. அதனால் அவர் அதன்பொருட்டு முயற்சி செய்யலாயினர். அவர் குலாசாரத்திற்கேற்ற கல்வி பயின்று விவசாய அந்தஸ்துள்ள பிள்ளைகட்குத் தமது பெண்களைக் கொடுக்க வேண்டுமென்னும் எண்ணங்கொண் டிருந்தமையால், அதற்குத் தக்கவாறு மணமகனைத் தேடிக்கொண்டிருந்தார். ஆனால் அவ்வெண்ணம் அவர் மனைவி லக்ஷ்மி அம்மாளுக்கும் மாமனார் ராமநாதையருக்கும் பிரியப்படாம லிருந்தது. கடைசியில் ஐயரவர்களின் எண்ணமானது லக்ஷ்மி அம்மாளின் பிடிவாத குணத்தாலும் அவர் மாமனாரின் பெரிய முயற்சியினாலும் நிறைவேறாமல், மூத்த பெண் ஜானகியை பி. ஏ. பரீட்சை தேறிய ஒரு பிள்ளைக்கும், இளைய பெண் ஸ்ரீமதியை மெட்ரிகுலேஷன் பரீட்சை தேறிய ஒரு பிள்ளைக்கும் விவாகஞ் செய்து கொடுக்கும்படியாயிற்று. இவ்விரண்டு விவாகங்களும் நவீன நாகரிகத்திற் கேற்றபடி பெருந்திரவியச் செலவுசெய்து நடத்தப்பட்டன. இவையன்றி மூத்த மாப்பிள்ளைக்குக் கல்யாண காலத்தில் செய்யவேண்டிய சீருட்பட ரூபா ஆயிரம் வரதக்ஷிணை கொடுக்கவும். இளைய மாப்பிள்ளைக்குத் தகுந்த சீர் செய்வதோடு பி. ஏ., வரைக்கும் படிப்பிக்க உமாமகேசுவர ஐயரே வகிக்கும்படிக்கோர் ஒப்பந்தம் செய்யவும் நேரிட்டன.



## அத்தியாயம்—2.



"மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்"—

சந்திரசேகரனுக்கு வயது பதினாறாயிற்று. உமாமகேசுவர ஐயருடைய தவப்பயனே உருவெடுத்ததுபோலத் தன் திருவுருவந் திகழ அவன் விளங்குகின்றான்; பொன்னிற மேனியும், வயதிற்குத் தக்க உயரமும் உயரத்திற் கேற்ற பருமனுமுடையவனாயிருக்கின்றான். முகத்திலே இளமையின் பளபளப் பிலகுகின்றது. அழகிருந்து தவம்புரியும் தவச்சாலைபோலு மிவன் முகம்—என ஊகமுடையார் நெஞ்சம் ஊகிக்கும்படியாயும், இவ

னுக்குச் சித்தம் சுத்தமா யிருக்குமென்று—பிறர் மனோநிலை யறியத்தக்க பெரியார் பேசும்படியாயு மிருக்கின்றது முகம். இவன் அவயவங்களும் நடையும் சாமுத்ரிகா லக்ஷண மறிந்தார் மனத்தைக் கவர்வனவாகச் சிறந்துள்ளன. இவ்வாறாக எல்லா லக்ஷணங்களும் அமைந்திருந்தும் கல்வி யறிவில்லாதொழியின் பாவ புண்யம் இம்மை மறுமை இவற்றின் உணர்ச்சி யில்லாமற் பிறப்பின் பயனை யிழக்க நேரிடுமன்றோ? அவ்வாறான இழிதகைமைக்குள்ளாக்காமல் சந்திரசேகரனை அவன் தன் கல்வியின் பொருட்டு எடுத்துக்கொண்ட முயற்சியும் உழைப்பும் காப்பாற்றின. சந்திரசேகரன் படிக்கத் தொடங்கியது ஸம்ஸ்கிருதமாகையால் அவன் இச்சிறு வயதிற்குள் ஜடை, கனம், முதலிய அத்யயனக் கிரமத்திலே தேர்ச்சி பெற்று, தர்க்கம், வியாகரணம் முதலிய சாஸ்திர விற்பந்நனாகி ஸம்ஸ்கிருத பாஷா பண்டிதனானான். தாய்ப் பாஷையாகிய தமிழிலும் எழுதப்படிக்கக்கற்றுச் சிறப்புற்றான். அப்பொழுது வித்வத் சிரோமணிகள் இவனைச் **சந்திரசேகர ஜடாவல்லவ**ரெனச் சிறப்புப் பெயர் கொடுத்தழைத்தார்கள். அன்று முதலாக அவனுக்குச் **சந்திரசேகர ஜடாவல்லவ**ரென்னும் பெயர் வழங்கலாயிற்று. இனி நாமும் **சந்திரசேகர ஜடாவல்லவ** ரென்றே கூறிவருவோம். **உமாமகேசுவர** ஐயர் தம் புதல்வனிடத்தில் கலைமகளின் கடாக்ஷம் பரிபூர்ணமாய் விளங்குவதைக் கண்டு அளவிறந்த மகிழ்ச்சி கொண்டார். இத்தகைய புத்ரசிகாமணியை நாமடையவிருந்த பூர்வ புண்யந்தான் யாதோவெனத் தாமே வியப்புறுவார்; மூத்த மனைவியிருந்து பார்க்கமுடியாமற் போனதைக் கருதி வருந்துவார்; சில சமயம்—

" கள்ளி வயிற்றி னகில்பிறக்கும் மான் வயிற்றி
லொள்ளரி தாரம் பிறக்கும்—பெருங்கடலுட்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார் யார்
நல்லாள் பிறக்குங் குடி "—

என்னும் இச்செய்யுளை நினைத்துக்கொள்வார்; மகனுடைய பெருமையைப் பற்றிக் கருதும்போதெல்லாம் கடவுளை யெண்ணிக் கை குவிப்பார். அவருடைய பிரார்த்தனை யெல்லாம் தம் மகன் நோயற்ற வாழ்வினனாய் எல்லார்க்கும் நல்லவனாய் எங்கும் நிறைந்த இறைவனுக்கு அன்பனாய் விளங்கவேண்டுமென்பனவேயாம்.

" அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியினூங் கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை "—

என்னும் பெருமையினையுடைய கல்விச் செல்வமல்லவா கைவரப் பெற்றிருக்கின்றார் ஜடாவல்லவர்? இத்தகைய புதல்வனைக் காணும் தந்தைக்கு அளவிறந்த ஆநந்த முண்டாவது வியப்பாமா? உமாமகேசுவர ஐயர் கல்வியின் பெருமையுணர்ந்த பெரியவரன்றோ? கயவனாகிய தந்தைக்கன்றோ மகனிடத்துக் காணும் கல்வியிலும் உயர்குணத்திலும் பிடித்தமிரா! எத்தனை பேர் மகனைப் படிப்பியா தொழிந்து, பள்ளிக்கு வைத்திலனே தந்தையாகிய பாதகன் என்று மகன் பின்னால் தன் மனம் நொந்து திட்டும்படி மகனை வளர்க்கக் காண்கின்றோம்.—

" தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல் "—

என்பது தமிழ் வேதத்தின் கட்டளையன்றோ? இதனை மறப்பனோ மதிபடைத்தவன்? அத்தகைய கல்வி தமது புதல்வனிடம் விளங்கவேண்டுமென்று எதிர்பார்த்தவரல்லவா உமாமகேசுவர ஐயர்? தமது மகனுக்கு அச்செல்வ மில்லையென்கிற கவலைக் கடலிலிருந்தும் அவர் கரையேறியவரானார்.

இப்பொழுது ஜடாவல்லவருக்கு, மணஞ் செய்விக்க ஐயர் திருவுளங்கொண்டு அதை அவரிடம் வெளியிட்டார். ஜடாவல்லவர் மனம் கல்வியினாலே தெளிவு பெற்றிருப்பதினால் தந்தை கூறியதும், தந்தையை நோக்கி, " தமது கருத்துக்குமாறாக நடக்க நான் விரும்பியவனல்லன். சிலநாள் தேசசஞ்சாரம் செய்துவர என் சித்தம் நாடுகின்றது. இன்னும் சிலநாளில் எனதாசிரியர் காசியாத்திரை போய்வரப்போகின்றார். அவரோடு நாமும் போய்வரலாமென்று எண்ணுகின்றேன். புத்தகப் படிப்பினாலடையும் அறிவோடு உலக அறிவும்பெறவேண்டியது இன்றியமையாததன்றோ? நம்மூரையும், நம்மூரை யடுத்துள்ள சில ஊர்களையுமேயன்றி வேறெதையும் கண்ணாலே பாராதவர்கள் நம்மூரிற் பெரும்பான்மையர் இருக்கின்றனரல்லவா? இதனால் நம்மூருக்குச் சில சமயம் கௌரவக்குறைவு ஏற்படுவதைக் கவனித்திருக்கிறீர்களா? நான்கைந்து நாட்களுக்கு முன் ஒரு புதுமை நம்மூரிலே நடந்தது. இதனைத் தாமறிவீர்"—எனவே ஐயர், "சேஷையர் முத

ஷியவர்கள் ராஜா பிறந்தநாள் என்று தெரியாமல், சென்ற வெள்ளிக்கிழமையன்று பத்திரம் பதிவு செய்யக் கச்சேரி போய் வீணே திரும்பிவந்தார்களே; அதைத்தானே சொல்லுகின்றாய்? அதை நானறிவேன்; அது லௌகிக ஞானக் குறைவினாலேற்பட்ட சிரமந்தான்"—என்றார். ஜடாவல்லவர், "அதைத்தான் நான் சொல்லவந்தேன்; நம்மூருக்கு ஒரு வர்த்தமானப் பத்திரிகை வரவழைத்து வந்தால் இது தெரியாமற் போகுமா? அதைப்பற்றி நம்மூரில் கவனிப்பவர்க ளிருக்கிறார்களா? படிப்பினும் உலக ஞானமன்றோ பெரிது? ஆதலால் அதையும் முடிக்கக் கருதி இறைவன் திருவருளை முன்னிட்டுக் காசியாத்திரைசெய்து வரலா மென்று முடிவுசெய்துள்ளேன்" என்று கூறினார். இதைக்கேட்ட ஐயருடைய உள்ளம் பூரித்தது. ஐயர் "அவ்வாறே செய்வோம். உன் ஆலோசனை சிறந்த ஆலோசனை தான். உலக ஞானந்தான் சிறந்ததாகும். படிப்பு மாத்திரம் போதாது. இதுபற்றி ஒரு கதையுண்டு.—

"நால்வர் ஒரு சாலை மாணவராகச் சேர்ந்து படித்துவந்தனர். அவர்களுள் மூவர் மந்திரவித்தையில் தேர்ந்தனர். ஒருவனுக்குப் படிப்பேறவில்லை. ஆனால் அவனுக்கு உலக ஞானம் ஏற்படும்படியான சந்தர்ப்பங்கள் அடிக்கடி ஏற்பட்டன. ஆதலின் அவன் சிறப்புற்றான்.

"இந்நால்வரும் பின்னர் ஒரு நாள் ஓரிடத்திலே ஒன்றுகூடிப் பல படியாகப் பேசிக்கொண்டிருந்தனர்; அப்பொழுது ஒருநாட்டுக்குச் சென்று தாங்கள் கற்ற வித்தையை அந்நாட்டு அரசனிடங் காட்டிப் பொருள் தேடுவதென்று முடிவுசெய்தனர். 'படிப்பில்லாதவனை அரசசபைக்கு அழைத்துச் செல்வதெப்படி? அழைத்துச் சென்றால் இவனால் நமக்கு அவமானமே பயனும்'— என்று படித்தவரில் இருவர் பகர்ந்தனர். ஒருவன், 'படிப்பினும் உலகஞானந்தான் பெரிது. இவனை நாம் அவசியம் அழைத்துக்கொண்டு போகவேண்டும். இவனால் நமக்கு நன்மையுண்டாகும்'—என்றான்.

"அப்பால் நால்வரும் ஒன்று சேர்ந்து புறப்பட்டுப் போயினர். வழியில் ஒரு காட்டைக்கடந்து செல்கையில் ஒரு சிங்கம் அங்கே இறந்து கிடந்தது. அதைக் கண்டதும் மந்திர சாஸ்திர வல்லவரான மூவரும் தம்முடைய மந்திர சக்தியினால் அதைப் பிழைப்பித்துத் தாம் கற்ற வித்தையைப் பரீக்ஷிப்பதெனத்

துணிந்தனர். படிப்பில்லாதவன், இதைக்கேட்டதும் நகைத்து, 'இவ்விலங்கு கொடிது! இதனை உயிர்ப்பிப்பீர்களாயின் நன்றி யின்றி இது உங்களைக்கொல்லும்; வேண்டாம் இச்செய்கை'—என்று கூறினன். அவர்கள் கேட்கவில்லை. உடனே, உலகஞானி அங்கிருந்த ஒரு பெரிய மரத்திலேறிக்கொண்டு 'வித்தையினாலே கர்வங்கொண்ட வீணர்களே! கர்வத்தினாலே அழியப் போகின் றீர்கள்! காலங் கிட்டிவிட்டமையின் என் பேச்சு உங்கட்குச் செவியிற்படவில்லை' என்றான். அவன் மொழிந்ததைப் பொருட் படுத்தாமல் மூவரும் மந்திரமுச்சரித்தனர். சிங்கம் உயிர்த் தெழுந்தது; எழுந்த அக்கணமே அம்மூவர் மீதும் பாய்ந்து, அவர்களை அறைந்து கொன்று புசித்துச் சென்றுவிட்டது—படிப் பிருந்தும் மூவரும் அறிவீனர் போல அழிந்தனர். அப்பா நீ சொல்வது போல உலகஞானம் வாழ்க்கைக்கு இன்றியமையாத தேயாம். அதனைப் பெற வேண்டியதும் மக்களின் கடமையே யாம். உன் ஆசிரியரிடம் சொல்லிவிடு. அப்படியே செய் வோம்"—என்று கூறி, "ஜகதீசா! குழந்தையை உன் அடியா ரொடு சேர்த்துக் காப்பாற்ற வேண்டும்" என்று ஈசனைத் தியான மும் செய்தார். ஜடாவல்லவரும் மகிழ்ந்தார்.

ஜடாவல்லவரின் ஆசிரியர் பரமசிஷ்டர்; பெருந்தன்மை யுடைய பெரியவர்; ஆஸ்திக சிரோமணி; மாணவன் நன்மை நாடும் மாண்புடையவர். ஆதலின் அவ்வாசிரியர் ஜடாவல்லவரின் கல்வித் திறமையையும், சுறுசுறுப்பையும், அடக்கத்தையும், நன்மை தீமை யுணரும் பகுத்தறிவையும் கண்டு அவரிடத்துத் தமதுபுதல் வனிடம் காட்டும் அன்பு பாராட்டி, அவருக்கு இம்மைக்குரியன வும் அம்மைக்குரியனவும் செவ்வனே போதித்து வருவாராயினர். ஆசிரியருடைய அருள் கிடைக்கப்பெற்றவர்கட்கு உலகத்தில் பெறுதற்கரியதுமுண்டோ? குருவின் திருவருளுக்குப் பாடுபடு வர் அளவிலடங்குவரோ உலகத்தில்? அந்த உத்தமமான அருட் செல்வம், நல்லவர்களுக்குக் கிடைக்கும் நாதன் கருணைபோ லல்லவா ஜடாவல்லவருக்குக் கிடைத்திருக்கிறது?—,

"கறுத்த விரும்பே கனகம தானல்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தவப் போதே குருவருள் பெற்றான்
மறித்துப் பிறவியில் வந்தணு கானே—"

எனத் திருமந்திரம் என்னும் தெய்வத்திருநூல் குருவின் திரு

வ்ருட்பெருமையை உபதேசிப்பது காண்க! இவ்வாறு சிறந்த தான குருவின் பெருமையை யுணராமல் அவரை யவமதிக்கும் ஈனமக்களின் மதியை யென்னென்பது! அவர்களை * ஆறறிவின ராகிய மாந்தருள் வைத்தெண்ணப்படுமோ?

நிற்க, ஜடாவல்லவர் தமக்குக் குருவின் அன்பு கிடைத் திருப்பதை எண்ணுந்தோறும் அவர் சித்தம் உருகும். அவர் உடல் புளகாங்கிதமுறும். கரங்கள் தாமே குவியும். சிந்தையில் குருநாதனுடைய திருவுருவம் பிரகாசிக்கும். குருநாதன் கூறிய உபதேசமொழிகள் எல்லாம் அவர் நினைவுக்கு வரும். அவ்வுபதேச மொழிகளை யெண்ணி யெண்ணி அவர் உருகுவார்; அப்படிப் பட்ட நல்ல ஆசிரியனை உதவிய ஈசனைத் துதிப்பார். ஆசிரியரைத் தம்மை யாட்கொள்ளும் பொருட்டு அவதரித்த கடவுளெனவே மதித்திருப்பவருடைய சித்தம் இங்ஙனம் குருவினிடம் ஈடுபடுவது இயல்பேயன்றோ? "எழுத்தறிவித்தவனிறைவனாகும்" என்னும் போதனை ஜடாவல்லவரின் சித்தத்திலே சிதையாத தீபம்போல எப்போதும் பிரகாசித்துக்கொண்டு இருக்குமாதலின், அந்தச் சித்தத்திலே அன்பு அருவியாகப் பெருகி குருவாகிய இன்ப வாரிதியிலே கலந்து களிக்கின்றது!

இங்ஙனம் ஆசிரியரிடம் மாணவனும் மாணவனிடம் ஆசிரிய ரும் அன்பு பாராட்டுவதை ஐயர் அறிவார். ஐயர் சாஸ்திர விற்பந் நராதலின் தமது மைந்தனிடம் காணும் அந்த அருமந்தன்ன குணங்கண்டு அளவிடற்கரிய அகமகிழ்ச்சி யடைந்தார். இவனேன் புவிக்குப் பாரமாகப் பிறந்தான் என உடம்பெடுத்த புதல்வனிட மும் அன்பு பாராட்டு மியல்புடைய தன்றோ உலகம்? அப்படிப் பட்ட உலகத்தவருள் ஒருவரல்லவா உமாமகேசுவர ஐயரும்? "இவனைப்பெற இவன் றந்தை என்னோற்றான் கொல்" என்று உலகம் புகழ உடம்பெடுத்த உத்தமனை யல்லவா பயந்துள்ளார் இவர்? இவர் மகிழ்ச்சி அளவிலடங்குவதாமோ?

இத்தகைய உத்தமகுண சீலராகிய இவர்கள் தத்தம் குடும் பத்தோடு ஒரு நல்ல நாளில் சுபவேளையில் காசி யாத்திரை செய்யப் புறப்பட்டனர். ஆசிரியரும் அவர் குடும்பமும் ஒரு பக்கம் வர, உமாமகேசுவர ஐயரும், அவர் மனைவியும், பெண்க ளிருவரும் ஒரு பக்கம்வர ஜடாவல்லவர் இடையே சென்றாராக

---

* ஆறறிவு - ஶப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் ஐந்தறி வுடன் பகுத்தறிவுஞ் சேர்ந்தது.

லின், அவர் தெருவிலே திருவோலக்கம் புறப்பட்டவர்போலக் காணப்பட்டார். அவர் தம் தந்தைக்கும் ஆசிரியருக்கும் நடுவில் விளங்குவது, * ஐம்பெருங்குரவருளடங்கிய ஆசிரியரையும் தந்தையையும் இவர் ஒரு தன்மையில் வைத்து அன்பு செலுத்தி வழிபடுபவர் என்பதை உணர்த்துவதுபோ லிருந்தது. இங்ஙனம் செல்லும் இவரைக் காணும்பொருட்டு அவ்வூர் அந்தண மகளிரும் ஆடவரும் வெளியே வந்து நின்றனர். அவர்களெல்லாம் ஜடாவல்லவர் மந்தகாசத்தோடு கரங் குவித்து வணங்கி விடை பெற்றனர். பெரியார் யாவரும் ஆசீர்வாதஞ்செய்து, பெருமகிழ்ச்சியோடு அவருக்கு விடைதந் தனுப்பினர். "இச் சிறுவன் படிக்கத் தொடங்கிய காலமுதல் வெகு சுறுசுறுப்பாகவும் கருத்தாகவும் ஆசிரியரிடத்து அடக்கமுடையவனுகவும் படித்தான்; அதனுல் எல்லோரும் மெச்சத்தக்க வித்துவானுனன்; இப்பொழுது பெற்றோரைக் காசிக்கு அழைத்துச் செல்கின்றுன். இவனைப் பெற்றவரல்லவா புண்ணியஞ் செய்தவர்கள்?"—என்று ஆங்கொரு பக்கம் சிலர் பேசிப் புகழ்ந்தனர். இன்னெரு பக்கமிருந்த சிலர், "இவன் கல்வியென்னும் வேள்விற்கு ஆகுதியாகத் தன் அறிவையும், அவிசாகத் தன் உடம்பையும் கொடுத்தானுதலின், உடம்பு வளர்த்துக்கொண்டு திரியும் கயவர்களைப்போல இவன் உடம்பு விகாரமான பருமனை யடையாமல் உயரத்துக்குத் தக்க அளவாக அமைந்துள்ளது. முகத்தில் அகத்தினழகு பிரகாசிக்கின்றது"—என்று புகழ்ந்தனர். இப்பேச்சுகள் இவர்கள் எல்லோருடைய செவியிலும் விழுந்தன. இவர்கள் ஒவ்வொருவரும் இச்சமயம் அடைந்திருக்கும் ஆநந்தத்தை யளவிட்டிங்கெப்படிப் பேசவியலும்? வாசகர்களே ஊகித்துக்கொள்வார்களாக.

இவ்வூரில் முதல் முதலாகக் காசி யாத்திரை புறப்பட்டவர்கள் இவர்களே யாவர். ஆதலின் அந்த யாத்திரை நிகழும் இச்சமயம் ஊர்முழுதும் பரமானந்தத்திலே மூழ்கியிருந்தது. தவிர, இந்த க்ஷேத்திரம் இந்தியாவில் வடக்கேயுள்ளது என்பது மாத்திரம் அவர்கட்குத் தெரியுமல்லது, இந்தியாவில் அது உள்ள இடம், அதன் எல்லைகள், அதன் விஸ்தீரணம், ஜனத்தொகை, நகர அமைப்பு முதலியன ஒன்றுந் தெரியா. அவர்கள் உலக ஞானம்

*ஐம்பெருங் குரவர்—பெற்றோர், அரசன், உபாத்தியாயன், தேசிகன், மூத்தோன்.

பெற முயன்றவர்களல்லர்; பரம்பரையாகத் தக்க பூஸ்திதி படைத்தவரா யிருந்து வருகின்றமையால், பூமியின் விளைவைக் கொண்டு உண்டு உடுத்துக் காலங் கழிப்பவராயினர். ஜடாவல்லவர், தாம் தமது படிப்பிலே கண்டதை அநுபவத்திலுங் காண வேண்டுமென்னும் ஊக்கத்திற்குள்ளாயின ராதலின், அந்த ஊக்கமே அவரை இம்மாதிரி வெளிப்படத் தூண்டியது. ஒன்றைக் கண்டு பிடித்தற்கோ அடைவதற்கோ ஊக்கமே முக்கிய சாதக மாகின்றதென்று உலகில் முதுமொழி வழங்குவதுண்டன்றோ? அதற்கு ஜடாவல்லவர் இலக்காயினர்.



## அத்தியாயம்—3

"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லார் அறிவிலா தார்"

"............அடைந்தவர் தந்—துன்ப மகற்றும் புனற்கங்கை தோய்ந்தோர் கடவு ணதியனைத்து, நன்கு படியும் பேறனைத்து மொழியா தினிது நண்ணுவரால்"— என்னும் சிறப்புப் பொருந்திய கங்காநதியின் கரை மீதிருப்பது காசியென்னும் திவ்யக்ஷேத்திரம். காசி க்ஷேத்திரத்தின் மகிமை அளவிலடங் காததாம். இந்தியாவிற்குப் பெருஞ்சிறப்பையும் செழிப்பையுந் தரத்தக்க * நதிகளும் † நதங்களும் பல. அவற்றுள் கங்கையும் ஒன்றெனினும் இது, ஆழத்திலும் அகலத்திலும் நீளத்திலும் தூய்மையிலும் மேன்மையுடையதாய் விளங்குவதாதலின், எல்லோராலுந் தெய்வ நதி யென்றும் புண்ய நதி யென்றும் கொண்டாடப்படுகிறது.

இத்தகைய நதியின் கரையில் பெருஞ் சிறப்புடன் விளங்கும் காசிமா நகரமானது, ‡ தீர்த்தம், மூர்த்தி, ஸ்தலம் என்னும்

---

* நதி:—மேற்கே யிருந்து கிழக்கே ஓடுமாறு.

† நதம்:—கிழக்கே யிருந்து மேற்கே ஓடுமாறு.

‡ "மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வணங்கினர்க்கே, வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" (தாயுமானவர்) "தலங்கள் தம்மின்மிக் குள்ளதாய்த் தகுதி சால் தீர்த்தக், குலங்கள் தம்மின்மிக் குடையதாய்க் குறைபிரந்தோர்க்கு, நலங்கள் தந்தருள் மூர்த்தியாய் நாதவேதாந்தப், புலன்கள் தந்தபே ரொளியுறை தலமென்று புகலாய்" (திருவிளையாடற் புராணம்.)

மூன்று சிறப்பு மமையப் பெற்றது. ஆதலால் அங்கே சென்று கங்கையிலே நீராடி உடற்றூய்மையும், மூர்த்தி தரிசனஞ் செய்து மனத்தூய்மையும், ஸ்தல விசேஷத்தினுல் நல்ல நடத்தையும் பெற்று, பிதிர்க்களுக்குச் சிர்ரத்தஞ்செய்வது இந்துக்களெல்லோருடைய வழக்கமாக இருக்கிறது. இது இந்தியாவின் வடகோடியிலுள்ளதாதலால், தெற்கிலுள்ளார் இதனிடம் பெரிய மதிப்பும் பக்தியும் வைத்து யாத்திரை செய்கின்றனர். இதைப்போலவே இந்தியாவின் தென் கோடியிலே விளங்குவது இராமேசுவரம் என்னும் திவ்யக்ஷேத்திரமாதலின், இந்த க்ஷேத்திரத்திற்கு இந்தியாவின் வடகோடியிலுள்ளாரனைவரும் பெரிய மதிப்பும் பக்தியும் வைத்து யாத்திரை செய்கின்றனர். வடக்கே யுள்ளவர்கட்குக் காசியிலும் கங்கையிலும் மதிப்பும் பக்தியும் இல்லை யென்றுவது, தெற்கே யுள்ளவர்கட்கு இராமேசுவரத்திலும் சேதுவிலும் மதிப்பும் பக்தியு மில்லையென்றுவது கொள்வது கூடாது. காவிரி நதி தீரத்திலே வசிப்பவனுக்குக் காவிரி நதியிலே மிகுந்த அன்பிருப்பினும், கங்கையைக் காண்பதிலும் கங்கையிலே நீராடுவதிலும் அதினினும் மேலான அவாவுண்டாவதைக் காண்கின்றோம். அதுபோலவே கங்காதீரத்திலுள்ளவனுக்குக் காவிரியைக் காண்பதிலும் அதில் நீராடுவதிலும் அவாவுண்டாதல் இயல்பன்றோ? மத்திய இந்தியாவி லுள்ளவர்கட்கோ இருக்ஷேத்திரங்களிடத்தும் மதிப்பும் பக்தியும் ஏற்பட்டுள்ளன. அவர்கள் இரண்டு க்ஷேத்திரங்களுக்கும் யாத்திரை செய்கின்றனர். இவ்விரு க்ஷேத்திரங்களையல்லாமல் இந்தியாவில் வேறு பல க்ஷேத்திரங்களுமிருக்கின்றன. இந்தியர் தெய்வமுண்டு என்னும் நம்பிக்கையுடன், "ஆலயந் தொழுவது சாலவுநன்று" "வையந்தோறுந் தெய்வந் தொழு" என்னும் உயர்ந்த போதனையினுலே பரிபக்குவமடைந்த மனமுடையவராதலால், ஒருவன் பரமதரித்திரனுக விருப்பினும் அவனுந் தன் சக்திக்கியன்றவாறு செலவுசெய்து க்ஷேத்திர யாத்திரை செய்யாமலிருக்கமாட்டான்.

உலகவியலும் உலகங்கடந்த பொருளாகிய முழுமுதற் கடவுளினியலும் உணருந் தரத்தினரல்லாத கயவருள்ளும் இவ் வழக்கமிருந்து வருகின்றது. உலகத்திலுள்ள பொருள்களினியல்பும் * உலக வியல்பு முணராத மாந்தர் அவாவுற்று அப்

* உலகவியல்பு—"நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும், பெருமை யுடைத்திவ் வுலகு"—குறள்.

பொருள்களைப் பெறவும் பெற்றவைகளைப் போற்றவும் தம்முயற்சியைப் பயன்படுத்துவது கண்கூடாம். சுவைகண்ட பூனை உறிக் குறி தாவும் என்பதுபோல, மானிடர்களும் ஒன்றைக்கண்டு கைப்பற்றின் இன்னொன்றைக் காணவும் அடையவும் முயற்சி செய்கின்றனர். இவ்வாறு முயற்சி செய்வதா லிவர்கள் பெறும் நன்மை சிறிதென்பதும் தீமை பெரிதென்பதும் பக்குவமுடையவரின் சித்தம் நன்குணரும். அப்படிப்பட்ட பக்குவிகள் தமது ஸந்ததியாரிடத்திற்கொண்ட அன்பினாலே தூயநதி தீரங்களில், மாந்தர்கள் அடிக்கடி யாத்திரை செய்து தரிசிக்கவும் வசிக்கவும் அவாவுற்று உலக ஞானத்தையும் தூய்மையையும் பெற்றுய்யுமாறு பல திவ்ய க்ஷேத்திரங்களை நிருமித்தனர் போலுமென்று அறிஞர் ஊகிக்க, க்ஷேத்திரங்கள் பல விளங்குகின்றன. ஆகையால் இந்தியர் முன்னம்பல தேயங்களுக்கும் யாத்திரை போய் உலகஞானத்திலே மேம்பட்டிருந்ததாகத் தெரிகிறது, இப்போது கருதப்படுவதுபோல அவர்கள் உலகஞானம் பெறாதவர்களன்று. முன்னர் வேதமுதலிய சாஸ்திரங்களைக் கற்கவும் க்ஷேத்திர யாத்திரைசெய்யவும் விரும்பியவர்கள் தேசங்கடோறும் கால்நடையாகவே சென்று எங்குச் சூரியாஸ்தமனமாகின்றதோ அங்குத் தங்கி மறுநாள் வேறிடங்களுக்குச் செல்வதுமாக இருந்திருக்கிறார்களென்று நமது புராணவாயிலாக நமக்குத் தெரிகின்றது. * இல்வாழ்க்கை யென்னும் நல்வாழ்க்கையிலிருப்பவன், எந்தக்காலத்தில் எந்தவேளையில் தேசாந்திரியைக் காணினும் அப்பொழுதே அவன் அந்தயாத்திரிகனை அன்போடு நல்வரவு கூறி, ஆசனம் போஜனம் சயனம் முதலியனவளித்து உபசரித்தல் வேண்டும்; இன்றேல் பெரும்பாவத்திற்குள்ளாவான் என்பது, பெருங்கருணைத் தடங்கடலாக விளங்கிய மகான்களுடைய கட்டளையாதலின், அக்கட்டளைப்படி அக்காலத்திலே யாத்திரிகர்களுக்கு உபசரணை நடந்துவந்தமையால், இக்காலத்திலிருப்பது போலப் புகை வண்டி முதலிய சௌகரியங்கள் இல்லாமற்போயினும் யாத்திரிகர் கஷ்டமில்லாமலே நெடும் பிரயாணம் செய்து வந்தனர்.

இவைகளையன்றி இன்னுமொரு வழக்க மிருந்திருக்கின்றது. அது இதனுண்மையை நன்கு புலப்படுத்துகின்றது. விவாக

* "அன்பு மறனு முடைத்தாயின் இல்வாழ்க்கை, பண்பும் பயனு மது"—குறள்.

காலத்தில் மாங்கல்யதாரணத்திற்குத் தொடங்குவதன் முன்பு வரனைக் காசியாத்திரை போய்வர அனுப்புவதை நாம் காண்கின்றோம். அவன் யாத்திரிகனைப் போலவே மூட்டை முடிச்சுடன் புறப்பட்டுத்தெருவில் கொஞ்ச தூரம்போய் வருவதையும் காண்கின்றோம். அதன் பிறகு விவாக காரியங்கள் நடத்தப்படுகின்றன. இவ்வழக்கம், முன்னர், பிள்ளைகள் குருகுல வாசங் கழித்த பின்பு, க்ஷேத்திர யாத்திரை போய்வரவேண்டிய தவசியமென்பதை நன்கு புலப்படுத்துகின்றதன்றோ? உலக தருமத்தை யுணர்வதும் ஒரு வித்தையாதலின், அதையும் பிள்ளைகள் அறிந்திருக்க வேண்டாவா? அறிந்திருந்தாலன்றோ அவர்கள் தேசத்தோடொத்து வாழும் நேசத்தைக் கடைப்பிடித்தொழுகுவர்? இந்தியர்கள் கடல் கடந்து பிறதேசங்கட்குப் போய் வர்த்தகஞ் செய்துள்ளார் என்பதற்கும் ஆதாரம் பலவுண்டு. "திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்பது முதுமொழியல்லவா? விவரிக்கிற் பெருகும்.

ஆகையால், உலகஞானம் பெறுதற்பொருட்டு ஏற்பட்டிருந்த வழக்கத்தை யநுஸரித்த ஜடாவல்லவரும் அதனை நிறைவேற்றத் திருவுளங்கொண்டு புறப்பட்டமையால் புறப்பட்ட ஆறாவது மாதம் காசி க்ஷேத்திரத்தையும் மற்றும் பல க்ஷேத்திரங்களையும் தரிசித்துக்கொண்டு ஊர் வந்து சேர்ந்தார். முற்காலத்தவர்போல இவர் கால் நடையாகச் சென்றாரில்லை. பின் ஏன் இவ்வளவு காலம் பிடித்ததெனின், இவர் உலகத்தை யறிய வேண்டுமென்னும் அவாவுடன் சென்றவராதலின், பணச் செலவைக் கருதாமல், காசியிலே சிலநாள் தங்கியிருந்து, செய்ய வேண்டியவைகளைச் செய்து, அறிய வேண்டியவைகளை முறைப்படி யறிந்தார்; அப்பால் அதனை யடுத்துள்ள க்ஷேத்திரங்களையுந் தரிசனஞ் செய்துகொண்டு திரும்புகையில் வழியிலுள்ள பல க்ஷேத்திரங்களில் தங்கித் தரிசனம், புண்யநதி ஸ்நானம் முதலியவைகளை நூன்முறைப்படி செய்தும் அங்குள்ள அதிசயம், ஜனங்களின் நடையுடை பாவனைகள் முதலியவைகளை யறிந்தும் வந்தமையால் காலமதிகரித்துவிட்டது. இவருடைய அரிய கருத்துக்கிணங்கி உமாமகேசுவர ஐயர் பரம ஸந்தோஷத்துடன் பணச் செலவு செய்துவந்தார். தெளிந்த சிந்தையுடைய பெரியவரல்லவா ஐயர்? நல்ல வழியிற் பொருள் செலவிடப் பின் வாங்குவரோ?

இழிந்த மாந்தரன்றோ வம்பிலும் * தும்பிலும் பணச் செலவிட்டுக் களிப்பர்? நல்ல வழியிலே செலவிட ஒளிப்பர்.

பலதேசங்களிலும் சஞ்சாரம் செய்தவன், (1) தன்னிலும் கோபமுடையவர் பலரைச் சந்தித்திருப்பானாதலால், அவன் கோபங்கொள்வது கூடாது என்னும் போதனையை யடைவான்; "ஆறுவது சினம்" என்று போதித்த ஔவைப் பிராட்டியாரைக் கைகூப்பித் தொழுவான். (2) அவன் தன்னைவிடத் தாழ்ந்தவர்களையும் அவர்கள் படுங் கஷ்டத்தையும் கண்டிருப்பானாதலால், தன் பிறவியைப்பற்றித் திருப்திகொண்டு கடவுளை வணங்குவான். (3) தன்னைவிட மேலானவர்கள் பலரைக் கண்டிருப்பானாதலால் அவன், தான் கல்வி கேள்வி, செல்வம் முதலியவற்றிலே பெரியவனென்று செருக்கடைய மாட்டான். (4) அங்கங்கு உழைப்பில் சுறுசுறுப்புடையவர்களா யிருப்பவர்கள் பலரைச் சந்தித்திருப்பானாதலால், அவன் சுறுசுறுப்பிலே கருத்துடையவனாவான்; (5) உலகம் பலவித மென்கிற நியாய முணர்வானாதலால், தான் விரும்புவதுபோல் ஏனையரும் விரும்புவர் என்னும் மூடக்கோள்கையை மறப்பான்; (6) உலகத்தோரால் பழிக்கப் படுஞ் செய்கைகளை விடுவான்; (7) போற்றப்படுஞ் செயல்களையே செய்வான். (8) தீமையை நினைப்பதிலும் செய்வதிலும் உவப்பை யடையான். இவை இம்மையில் நிந்தனையையும் மறுமையில் நரக துன்பத்தையுந் தருவனவல்லவா? தம்முயிர் போல எல்லாவுயிர்களையும் நேசிக்கும் அருள் அவன் உள்ளத்திலே குடிகொள்ளும். (9) முகந் தெளிவடையும் (10) பொறுமையைப் பூஷணமாகக்கொண்டு, தீயசொற்களாலே இகழும் பகைவர்களிடத்தும் "ஐயோ பாவம்! அறியாமையினால் இவ்வாறு நடக்கின்றார்கள்" என்று † பெரியாரியல்பை வகித்து அவன் பரிதாபப்படுவான். இவை போல இன்னும் பல செய்கைகள் அவனிடம் விளங்குமென்று தேச சஞ்சாரஞ் செய்தவன் இலக்ஷணங்கள் கூறப்படுகின்றன. இவையனைத்தும் ஜடாவல்லவரிடம் ஏற்

* தும்பு - குறைவு (இழிவு).

† "பிழையிலான் கடவுளன்றி மக்களிற்றப் பில்லாதார் பிறருமுண்டே மழையினுமே யசனியுண்டு மதிக்குமோர் மறுவுண்டு மலர்க்குமுள்ளாம், கழையினுமே சக்கையுண்டு கனியினுந்தோல் கொட்டை யுண்டு கதிக்குமாசை, விழைவினால் மறம் புரிதல் நரர்க்கியல்பா தலினவரை வெறுக் கொணாதே." நீதிநூல்.

கண்வே குடிகொண்டிருப்பினும், இப்பொழுது, விளக்கு தூண்டு கோலால் பிரகாசம் பெறுவது போலத் தேசசஞ்சாரம் என்கிற தூண்டுகோலால் பெரும் பிரகாசமடைந்தன. ஆதலால் அவ்வூரிலவனைவர்க்கும் இவர் ஒரு புது மனிதர்போற் காணப்பட்டார். உமாமகேசுவர ஐயரும், தாம் கொண்ட மகிழ்ச்சியினுல், சிறியவர் போலக் கர்வங்கொள்ளாமல், அறிஞர் இயல்பிற்கேற்ப மிகுந்த பொறுமையுடனும் தாழ்மையுடனும் தாம் அங்கங்குக் கண்ட அதிசயங்களை அன்பொடு கூறிப் பெரும் பேறெய்தியவர் போலப் பெருமிதங் கொண்டார்.

“தக்காருந் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை
யெக்காலுங் குன்ற விலராவர்—அக்காரம்
யாவரே தின்னினும் கையாதாம் கைக்குமாந்
தேவரே தின்னினும் வேம்பு—”

என்னும் ஆன்ருேர் வாக்கிற்கு உதாரணமாக அவர் விளங்கினர். லக்ஷ்மியம்மாள் அளவிற்கு மிஞ்சித் தங்களைப் பெருமைப்படுத்திக்கொண்டாள். அவளுக்கு நடையும் உடையும் பேச்சும் வேறுபட்டன. இதனுல் அவ்வூரிற் சில மாதர்கள், “என்னவோ காசிக்குப் போய் வந்துவிட்டாளாம். பெரிய கர்வமாய்ப் பேசுகின்ருள், ‘அற்பத்துக்கு ஐசுவரியம் வந்தால் அர்த்த ராத்திரியிலே குடை பிடிக்கும்’ என்பதுபோலிருக்கிறது, இவள் வாழ்வு” என்று கூறுவாராயினர். ஆனுல் லக்ஷ்மி யம்மாள், ஜடாவல்லவரின் குணத்தையும் நடத்தையையும் பற்றித் தன்னுடைய பேச்சுக்களிலெல்லாம் பேசிப் பெருமைப்படுத்த மறக்கவே மாட்டாள்.

“வாசிப்பு ஒருவனைப் பூர்த்தியாக்கும்” என்பதையும் “கலாசாலையினின்றும் நீங்கிய பின் வாசிப்பதே உண்மையான வாசிப்பாகும்” என்னும் உயர்ந்தோர் கருத்தையும் உணர்ந்தவராதலால் ஜடாவல்லவர் “பாடமேறினு மேடது கைவிடேல்” என்னு முதுமொழிக்கிணங்க இப்பொழுதும் தாம் படித்த நூல்களைத் திருப்பித் திருப்பிப் படிப்பதிலும் ஒழிந்த வேளைகளில் புதிய நூல்களை ஆராய்வதிலுங் காலங்கழிப்பாராயினர். இவ்வாறிருக்கும் இவர்க்கொரு நல்ல அதிர்ஷ்டம் வந்து கூடியது. புத்தூர் ஜமீன்தார் வீட்டிற்கு ஒரு தமிழ் வித்துவான் வந்திருந்தார். அவர் அந்த ஜமீன்தாரின் வேண்டுகோட்கிணங்கி அவர் மக்கட்குத் தமிழ் போதிக்க ஒப்புக்கொண்டு பிள்ளையார்

புத்தூரிலே குடியிருந்தனர். அவர் ஜடாவல்லவருடைய திரு முகத் தோற்றத்தையும் அதற்கேற்ப அவரிடம் அமைந்துள்ள நற்குண நற்செய்கைகளையும் கண்டு, இவ்வித்திடற்கிதுதான் நல்ல நிலம் எனக்கண்ட பயிர்த் தொழிலாளியொருவன், அந் நிலத்தை வலிதிலே பெற்று அதில் விதையை மகிழ்ச்சியுடன் விதைப்பதுபோல, ஜடாவல்லவரை ஒருநாள் அழைத்து, "அப் பனே! உனக்கு நான் தமிழ்ப்பாஷை போதிக்க வேண்டுமென் னும் அவாவுடையவனாக இருக்கின்றேன். தேச பாஷை பயில் வது கடமையாகும். உனக்குக் கற்றுக்கொள்ள விருப்பமா?"... என்று கேட்டார். இதைக் கேட்டதும் ஜடாவல்லவரின் உள்ளத் திலே,

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் வணங்கினர்க்கே
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்னும் மெய்ஞ்ஞான தீபச்சுடர் பிரகாசித்தது. உடனே ஜகதீச னுடைய திருவருள் இது என்று கருதி அளவிலா வாநந்தமடைந் தார். சித்தம் அனல்படு மெழுகாக உருகிற்று. பேரின்ப வடி வாகிய ஈசனொடு கலந்தவர்போலாகித் தம் முன் நிற்பவரை அவர் அவ்வீசனாகவே கருதிக் கரமிரண்டுஞ் சிரமேற் கூப்பித் தொழுது, "சுவாமி! அடியேன் பேறெலாம் பெற்றவனானேன். எங்கள் வம்சத்திலே யார் செய்த புண்ய பலமோ தெரியவில்லை. தன்னைத் தொழுது தனது திருவருட் செல்வத்திற்காகத் தவஞ்செய்து கொண்டிருக்கும் அடியார்கட்கு, ஜகதீசன் காட்சி தந்து வலியத் தடுத்தாட்கொள்வதுபோல, தமிழ் என்னும் இனிய தாய்ப் பாஷையைக் கற்க விரும்பி அதற்குத் தருணம் எப்போது வாய்க்குமென்று மழையின் வரவு பார்த்துக்கொண்டிருக்கும்பயிர் போலிருந்த எனக்குத் தாம் தமது தரிசனம் தந்தாட்கொண்ட கருணை என்றும் மறக்கத்தக்கதன்றாம். சுவாமி, அடியேனை ஆதரிக்கவேண்டும். தமது சொல்வழி நின்று கலைபயில்வேன்"— என்றார். தமிழ் வித்வான், "அப்பா! நான் கற்றவைகள் சிறி தெனினும் அதில் நான் கண்ட இரகஸ்யங்கள் பல. அவற்றைத் தக்கவர்க்குக் கற்பிக்க வேண்டுமென்னும் எண்ணம் வெகுநாளாக மனத்திலே குடிகொண்டிருந்தது. அதனை நிறைவேற்றக் காலம் வாய்த்திலது. நான் இவ்வூருக்கு வந்த மறுநாள் உன்னைப் பற்றிக் கேள்விப்பட்டேன்; உன்னைப் பிறகு நேரிலே கண்டு மகிழ்வுற்றேன்; இன்று என் மனக்கருத்தை வெளியிட்டேன்.

நல்ல மாணவனே குருவைப் பெருமைப்படுத்துகின்றான். நல்ல குருவே மாணவனை உயர்த்துகின்றான். 'வித்தை விரும்பு' என்பதற்கிணங்க நீ படிக்க விருப்பங்கொண்டிருக்கிறாய். நான் கற்பித்தற்கு விருப்பமுடையவனா யிருக்கிறேன். இரண்டு விருப்பமும் இன்று பாலுஞ்சர்க்கரையும் போலக் கலந்தன. குருவிற்குக் கற்பிப்பதில் விருப்பமும் மாணவனுக்குக் கல்வி பயில்வதில் விருப்பமும் ஏற்படுவது பெரும் புண்யத்தின் வசமாம். அப்பா! உனக்குக் கடவுள் எல்லா நன்மைகளையுங் கொடுத்தருள்வார். ஒரு நல்ல நாளிலே படிப்புத் தொடங்குவோம், போய்வருகின்றேன்." என்று கூறி வெகுநாள் தவங்கிடந்து, பெறலரும் பேறாகிய மக்கட்பேற்றை யடைந்தவர் போலப் பெருமகிழ்ச்சியொடு பிரிந்தார். ஜடாவல்லவரும் தமக்கு வாய்த்த திருவருட் பயனை யெண்ணி, "எல்லாம் அவன் செயல்" என வுணர்ந்தார்.

அப்பால் இவர்கள் தீர்மானஞ் செய்தபடி ஜடாவல்லவர் ஒரு நல்ல நாளிலே தமிழ்ப் படிக்கத் தொடங்கி ஆசிரியரிடம் பணிவுடையவராயிருந்து,

"ஆசானுரைத்த தமைவுறக் கொளினும்
காற்கூ றல்லது பற்றலனாகும்"

என்பதுணர்ந்தவராதலின் அவர் கற்பிப்பதை விடாதுள்ளத்தமைத்துக் கருத்தொடு இலக்கிய இலக்கணங்களை இரண்டு வருஷ காலத்திற்குள் ஒருவாறு பயின்று பிறகு குறள் என்னும் தமிழ் வேதச் சிறப்பினை யாராய்வதிலே ஒரு வருஷகாலம் கழித்தார்; அந்தத் தெய்வமறையில் தாம் ஸம்ஸ்கிருத பாஷையிலே கண்ட அரிய பெரிய கருத்துகளும், உண்மை ஞானவிளக்கமும், பூத பௌதிக விளக்கமும் இருக்கக்கண்டு பெரு வியப்புற்றார்; தமிழ் வித்துவான் அப்பால் வேறோர் ஊருக்குப்போக நேரிட்டமையினாலே ஜடாவல்லவர் கிடைத்ததுகொண்டு திருப்தியடைந்தார்; ஆனால் இராஜாங்க பாஷையாகிய ஆங்கிலமும் சிறிது கற்க விரும்பினார். அதற்கியலாமற் போயிற்று. அதனால் அவர் வருந்தினாரில்லை,

"வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனங்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்"

என்பது போலாகுமென உணர்ந்து தாம் இதுகாறும் படித்தவைகளை அடிக்கடி ஆராய்ந்து தெளிவதிலே மிகுந்த கவனஞ் செலுத்தினர். ஐயர், இவரை இதுவரையில் குடும்ப சம்பந்தமாக எதிலும் கவனஞ்செலுத்த இடங்கொடாமற் காப்பாற்றி வந்தார். லக்ஷ்மியம்மாளாலும் இடையூறொன்றும் இவருக்கு நேர்ந்திலது. ஆகவே இவர், வித்தைக்குப் பகைவர்களாகிய விசனம், தரித்திரம் என்னும் இரு பகைவர்களிடமும் அகப்பட்டுக்கொண்டு இடர்ப்படாமல், ஒதிவரும் உயர்ந்ததோர் நிலையினைப் பெற்றனர். இப்படிப்பட்ட தனி நிலை பெற்றவர் எல்லோரும் படிப்பிலே பெரியவர்களாகின்றார்கள் என்பதில்லை. படிப்பு என்பது பெறுதற்கரிய ஒரு செல்வம். அச்செல்வம் அமைவது புண்யவசமென்பர் அறிஞர்.



## அத்தியாயம்—4.



### இல்லறமல்லது நல்லறமன்று

விவாகம் என்பது இகபர சுகங்களுக்கு ஆதாரமான ஒரு ஸம்ஸ்காரமாதலால் இந்துக்களுள் அது சாஸ்திரோக்தமாகக் கொண்டாடப்படுகின்றது. ஒருவன் உலகத்திலே இம்மைப் பயனை யடைவதும் மறுமைப் பயனை யடைவதும், மனைவியின் துணையினலேயாம். அவ்வாறே ஸ்திரீகளுக்கும் புருஷர்கள் துணையாகின்றனர். ஆதலின் புருஷனும் மனைவியும் மனமொத்தவர்களாய், குலப் பெருமையை விளக்குகிறவர்களாய் அறநெறி விரும்பி நடப்பவர்களாய் அறிஞர்களாய் அமைவது தான் விவாகத்திற்கேற்ற உயர்வான பொருத்தமாகும். இது தான் அனுகூல தாம்பத்யம் என்பது. இந்த அனுகூலதாம்பத்யம் ஏற்படுவதற் கேற்றபடி ஆராய்ந்துபார்த்து மக்கட்கு மணம் செய்து வைப்பதுதான் பெற்றோர்களின் கடமையாகும். பெற்றோர்கள் காசுக் காசைப்பட்டு அறிவீனனுக்கும் கிழவனுக்கும் பெண்ணை விற்பதும், இழிந்த குலத்திற் பிறந்த குரூபியான பெண்களை வரதக்ஷிணைக் காசைப்பட்டுப் பிள்ளைகளுக்கு மணம்செய்விப்பதும் பெரும் பாவம் என்று நம்முடைய சாஸ்

திரங்கள் முறையிடுகின்றன. சாஸ்திர வரம்பு கடந்து தாம் தமது விருப்பத்திற்கும், சௌகரியத்திற்குந் தக்கபடி செய்யத் துணிவு கொண்டார் பலர், இப்படிப்பட்ட விவாகத்தினாலே பலவாறான துன்பத்திற் காளாவதை நாம் பார்க்கின்றோம்.

உமாமகேசுவர ஐயர் இவையனைத்தும் உணர்ந்த அறிஞராதலின் தமது புதல்வனுடைய புத்திசாலித் தனத்திற்கும் தமது குலப் பெருமைக்கும் ஏற்ற ஒரு பெண்ணைத் தேடித் திருமண முடிக்க விரும்பி முயற்சி செய்வாராயினர். ஜடாவல்லவர்க்கு இப்பொழுது வயது இருபதாகிறது. இவர் பாலசந்திரன்போல எல்லோர்க்கும் இனியவராக விளங்குகின்றார். பண்டிதர்களும் பாமரர்களும் விரும்பத்தக்க எழிலலமும் உயர்குணமும் இவரிடம் அமைந்துள்ளன. அந்த வஸ்திரத்திற்குரிய பூஸ்திதியும் இவருக்கு இக்காலத்தில் குறைவில்லாம லிருக்கிறது. நல்ல யோக்யதை யென்னும் பெறற்கரிய செல்வம் இவரிடம் சூரியனிடம் பிரகாசம் பொருந்தி யிருப்பதுபோற் பொருந்தி யிருக்கிறது. அதனால் பழமுள்ள மரங்களை நாடிப் பறவைகள் அடைவதுபோல எல்லோருடைய நன்மதிப்புகளும் இவரை நாடி யடைந்திருக்கின்றன. இவர் விரும்பாதவனும் இவரை யடைந்து, மலையை நாடி மேகங்களுலாவி மழைபொழிந்து நன்மை பயப்பது போல நன்மையளிக்கின்றன.

இப்படியிருந்தும் ஐயரவர்கள் இவருடைய திருமணத்தின் பொருட்டுச் செய்த முயற்சி பயன்பட்டிலது. ஒருவரும் அவருக்குப் பெண்கொடுக்க முன் வரவில்லை. ஆனால் ஐயர் முற்கால வழக்கம்போலப் பெண்ணிற்காகக் கட்டுச்சாதம் கட்டிக்கொண்டு நெடும் பிரயாணஞ் செய்து முயற்சி செய்யவில்லை. தற்காலத்தில் பெண்களைப் பெற்றவர்கள் வரதக்ஷிணைப் பணந் தருகின்றேனென்று பறையறைந்துகொண்டு சென்று வரனைத் தேடுவதுபோல வதுவைத் தேடவுமில்லை. இவர் தமது குலத்திற்கேற்ற அந்தஸ்துடையார் சிலரிடமே தமது கருத்தை வெளியிட்டார். பிள்ளைக ளிருக்குமிடந் தேடிப் பெண்கொடுக்க முன்வருபவர்கள் நிறைந்துள்ள இக்காலத்திலே சிறந்த யோக்யதையுடைய ஜடாவல்லவரை ஏன் அப்படிப்பட்ட உலகம் தேடிவரவில்லை யென்பதற்குக் காரணம் அவர் ஆங்கில பாஷை பயிலாததுதான் என்று இக்காலத்திலே சிறுவர்களும் உடனே வெகு சுளுவில் பதிலுரைப்பார்கள்! இந்தக் காரணத்தை ஐயர் தெரிந்துகொள்ளவில்லை.

திருமண முடிவதற்கான நல்லகாலம் இன்னும் வரவில்லை; வரின் இத்தனை காலம் தாழ்க்காது—என எண்ணிப் பொறுத்திருந் தார். இப்படி யிவரிருப்பதைக் கண்ட லக்ஷ்மியம்மாள், ஒரு நாள், அவரைப் பார்த்து, "குழந்தைக்குப் பெண் கொடுக்க ஒருவரும் முன்வராததன் காரணம் தெரிந்துகொண்டீர்களா? அவன் இங்கிலீஷ் வாசியாததுதான் காரணம். இங்கிலீஷ் வாசித்திருந்தால் ஆயிரம் இரண்டாயிரம் வரதக்ஷிணையுடன் பெண் கொடுக்கப் பெரிய பெரிய உத்தியோகஸ்தர்களும் போட்டி போட்டுக்கொண்டு வருவார்கள். இவ்வூர்க்காரரின் வழக்கம்; உத்தியோகஸ்தராகிய நாகரிகர் வீட்டுச் சம்பந்தம் செய்த உங் களையும் விடாமல் பிடித்துக்கொண்டிருப்பது பெரிய ஆச்சரியந் தான்! காலத்தை யநுஸரித்தல்லவா காரியஞ் செய்யவேண்டும்? குழந்தை பெரியவனாய்விட்டானே? இனி யெப்போது கல்யா ணஞ் செய்வது? கொக்கைப்போ லுயர்ந்தபின்பா? நான் சொன்னதெல்லாம் உங்கள் செவியிலே படவில்லை. இங்கிலீஷ் படிப்புக்குத்தான் இக்காலத்திலே மகிமை என்று கிளிப்பிள்ளைக் குச் சொல்வதுபோற் சொன்னேன். நீங்கள் கேட்கவில்லை. இலுப்பைப் பூவின் இனிப்பைக் கண்டு மகிழ்ந்துகொண்டிருப்ப வர்க்குச் சீனி சர்க்கரையின் சுவை எப்படித் தெரியும்? தெரிந்த வர்கள் சொன்னாலும் அவர்கள் செவியிற் படுமா?"—என்று தன் பிறந்த வீட்டுப் பெருமையை உயர்த்திக்காட்டிப் பேசிக் குற்றஞ் சுமத்தினாள். "பெண்புத்தி பேதைமை யுடைத்து"—என்னும் நீதி யுணர்ந்தவராதலின், லக்ஷ்மியம்மாள் பேசியதைக் கேட்டதும் ஐயர், சிறு நகை கொண்டு, "நீ பேசுவ துண்மை தான். உலகத்திலே நடப்பதை நீ பேசுகின்றாய். அதற்காக இனிமே லென்செய்வது? இராஜாங்க பாஷையிலே பயிற்சி யிருக்கவேண்டியது அவசியந்தான்: நம்மூரிலே அதற்கு வழி யில்லாமற் போயிற்று. தவிர, பெருஞ்செலவு செய்து அந்த வாசிப்பைப் பிள்ளைகட்குப் பயிற்றுவிக்க நம்மூரிலே இதுவரை யில் ஒருவருந் துணிந்தார்களில்லை; ஏதேதோ தமக்குள்ள சொத்துக்களை வீண் செலவு செய்யாமற் காக்கவும் * உத்தம மான பயிர்த் தொழிலிலே ஜீவனஞ் செய்யவும் குலாசாரந் தவ றாத வழியிலே நின்று நல்ல பேறுபெறவும்—எவையெவை வேண் டியனவோ அவைகளையே பிள்ளைகட்குப் போதித்து வருகின்ற

* தொழுதூண் சுவையினும் உழுதூணினிது.

னர். அதனால் இவ்வூர் தாழ்ந்த நிலைமையை யடைந்ததென்ப தில்லை. இவர்கட்கு டம்பம் என்பது தெரியாது. தமக்கு இன்றி யமையாதன எவைகளோ அவற்றிற்குச் செலவு செய்து இல்லற வாழ்விற்குரிய தரும வழியிலே காலங் கடத்தி வருகின்றனர். பிறதேயத்தவர்களுடைய நடையுடை பாவனைகளை யிவர்கள் அநு ஸரிப்பதில்லை. ஆங்கிலம் பயின்ற நம்மவர்களிற் பெரும்பான்மை யர் மேனாட்டுக்கொள்கைகளை யநுஸரித்து வேண்டாதவைகட் கெல்லாம் காசைச் செலவிட்டுக் கெடுகின்றனர். அப்படி நடப்ப தில் நம்மூரிலுள்ளவர்கட்கு என்றும் விருப்பங்கிடையாது. ஒரு தேசத்தவர் வேறு தேசத்தவர்களிடமுள்ள உத்தம குணங்களை மாத்திரம் கொள்வதுதான் பெருமை தருமேயல்லது தமக்குச் சிறிதும் பயன் படாத அவர்களின் நடையுடை பாவனைகளைக் கொள்வது கேட்டைத்தான் தரும். தவிர, நமது சொத்தைச் செலவுசெய்து ஆங்கில பாஷையை நமது மைந்தனுக்கு போதித் திருந்தால் ஒருவேளை நாமும் நமது மைந்தனைப் பெண்ணைப்பெற்ற ஓர் உத்தியோகஸ்தனுக்கு வரதக்ஷிணைக் காசைப்பட்டு விற்க நேரிடவும் கூடும். இன்றேல் அந்தப் படிப்பிற்காக நாம் நமது மைந்தனை அவர்களிடம் வயிற்றுச்சோற்றிற்கு விட்டுவைக்கவும் நேரிடும். மாமனார் வீட்டிலிருந்து படித்த பிள்ளைகள் தங்களைப் பெற்று வளர்த்த தாய்தந்தையரை ஆதரிக்க வேண்டுமென் பதையே மறந்துபோய்விடுகின்றனர். ஆங்கிலபாஷை பயின்றால் இவ்வாறு கெட்டுப்போகின்றார்கள் என்பது என் கருத்தல்ல. பி.ஏ., எம்.ஏ., வரையில் படிக்கவைக்கச் சக்தியற்ற ஏழைகள் கல் யாணத்திற்காகவும் வரதக்ஷிணைக்காகவும் தத்தம் வீடுவாசல்களை யும் ஆடையாபரணங்களையும் விற்றுப் பிள்ளைகளைப் படிக்கவைத் துத் தம்முடைய எண்ணம் நிறைவேறியதும் படிப்பை நிறுத்திப் பிள்ளைகளைத் திரிசங்கு ஸ்வர்க்கத்திலே விட்டு விடுகின்றனர். அவர்களே வீண் டம்பத்துக்காளாகி யழிகின்றனர். பி.ஏ.,எம்.ஏ., என்னும் முழுப் படிப்புப் படித்தவர்கள் உலகவாழ்விற்குரிய நியா யங் கண்டுணர்ந்து "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்கவதற் குத்தக" என்பதிற்கிணங்க நடந்து பெருஞ் சிறப்படைகின்ற னர். இவ்வாறு இப்படிப்பு இருக்கின்றமையின் நம்மூரினர்க்கு அதிலே கவனஞ் செல்லவில்லை. அல்லாமலும் இவர்கட்கு இங் கிலீஷ் படிக்கவைத்து உத்தியோகத்திற் பிள்ளைகளை உழைக்க வைக்கவும் வரதக்ஷிணை பெறவும் அவசியம் நேர்ந்திலது. தவிர

வ்ரதக்ஷிணை வாங்குவது தவறென்னும் கொள்கையுடைய சாஸ்திர விற்பன்னர் நிறைந்துள்ளது இவ்வூர். இங்கிலீஷ் படியாததினாலே நம்முடைய மைந்தன் விவாகமில்லாமல் பிரம்சாரியாகவே இருந்துவிடப் போகின்றானோ? அது ஒருகாலுமில்லை. ஏதோ அவனும் படித்தவனே தவிர படியாத மூடனல்லன். அவனுக்குத் தகுந்த மனைவியைக் கடவுள் படைத்துத்தா னிருப்பார்—இன்னும் விவாகப் பிராப்தம் நேரவில்லை''—என்று நியாயங் கூறினார். லக்ஷ்மியம்மாளுக்கு இவருடைய இராமாயணம் சிறிதும் பிடிக்கவில்லை. உடனே, ஐயரை நோக்கி, "இந்தப் பேச்சு உங்களுக்கும் உங்களுடைய இந்த நாட்டுப்புறத்தாருக்குந்தான் தகும். உங்கள் பெருமையை நீங்கள் தான் மெச்சிக்கொள்ளவேண்டும்—பிள்ளையென்று பிறந்தவர்கட்குக் கல்யாணமாகாமலா போகிறது? உங்களுக்குத் தாசில்தார் வீட்டுப்பெண் லக்ஷ்மி வந்து வாய்க்கவில்லையா? அதுபோல் யாராவது கண்மூடிகள் கொண்டுவந்து பெண்ணைக்கொடுத்து விடுகிறார்கள். இதற்கு விசாரமென்ன? உலகத்திலே சுகமடையவும் சந்தோஷமடையவும் பிறந்த பிறப்புகள் வேறு இருக்க நமக்கெங்கிருந்து வரப்போகின்றன அவைகள்?—குப்பைமேட்டுக் கோழிக்குக் கோபுரவாழ்வு எப்படிக் கிடைக்கும்?'' என்று சொல்லிவிட்டு அப்பாற் சென்றாள். ஐயர், "உலகமுழுதும் அந்தகாரத்திலே மூழ்கி யிருக்கும்போது இவள் எப்படி வெளிச்சம் பெறுவாள்—

'உள்ள தொழிய ஒருவர்க் கொருவர்சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழு முயிர்க்கு'—

என்று பிறந்துள்ள பெரியார் திருவாக்கு மலைமேலிட்ட விளக்காகப் பிரகாசிக்கும்போது சுகமும் துக்கமும் ஒருவர் பால் என்பது எப்படிப் பொருந்தும்? பிறந்த வீட்டிற் கேற்ற கௌரவப்படி பேசுகின்றாள்''—என்றெண்ணித் தெருவுக்கு வந்தார். இப்போது இவருடைய மூத்த மனைவி தர்மாம்பாளின் அடக்கமும் கௌரவமுமான பேச்சுக்கள் பல இவர் நினைவிற்கு வந்தன. அதனால் ஐயருடைய நெஞ்சம் கலங்கியது. பெருமூச்சுடன் வெளியே வந்து தலைமீது இருகரங்களையுஞ் சேர்த்து வைத்துக்கொண்டு மேற்கு முகமாக ஐயர் நின்றார். இவர் நின்ற இடத்திற்கு நேர் மேற்கே தெருவில் பத்துவீட்டுக்கு முன்னே ஒருவர் வரக்கண்

டார். அவர் காலிலே பூட்ஸூம் வெள்ளை நிஜாரு மணிந்து கொண்டு மேலே ஒரு கறுப்பு அங்கியும் கழுத்தில் காலர், நெக்டை முதலியனவும் தலையில் வெள்ளைத் தலைப்பாகையும் தரித்துக்கொண்டு கையில் ஒரு வழவழப்பான குண்டாந்தடியும் பிடித்துக்கொண்டிருந்தார். அவரைக் கண்டதும் ஐயர் "இப்படிப்பட்ட உடையுடன் இங்கே வருகிறவர் யாவர்—யாரேனும் உத்தியோகஸ்தரோ?" என்று ஐயமுற்றுக் கவனித்தார்; அவர் தம்முடைய வீட்டை நோக்கி வரக்கண்டு "கோல்லன் களத்தில் ஈக்கு என்னை வேலை? உத்தியோகஸ்தன் நம்முடைய வீட்டுக்கு வரக் காரணமென்ன?" என்று கருதினார். இதற்குள் அவரும் நெருங்கி ஐயரிடம் வந்து நின்று, "அந்நதான உமாமகேசுவர ஐயர் என்பவர் யார்? அவர் வீடு எங்குள்ளது?" என்று கேட்டார். ஐயர், "இவ்வீடுதான்; நான்தான் அவர்" என்று கூறித் திண்ணையிலே போயுட்கார்ந்தார். வந்தவரும் அவர் அருகேபோய் அமர்ந்தார். ஐயர்: "தாம் யார்? எந்த ஊர்? எனக்குத் தெரியவில்லையே" என்றார். அவர், "நான் பம்பாயிலிருக்கின்றேன். அங்கொரு கம்பெனியில் ஏஜண்டுவேலை பார்க்கின்றேன். எனது தந்தை யிருந்த ஊர் கும்பகோணம். எங்கட்குக் கும்பகோணத்திலே வீடும் நிலமும் இருக்கின்றன. என் பெயர் "கே-வி-நாதன் என்பார்கள்" என்றார். ஐயர், உடனே, "நாதன் என்றால் என்ன?" என்று வியப்பொடு வினவினார். நாதன், "கே. விசுவநாதன் என்பது பெயர். இவ்வளவு நீளமுள்ள பெயரை நாகரிகமற்ற என் தாய் தந்தையர் எனக்கிட்டனர். நான் அதைச் சுருக்கி கே. வி. நாதன் என்று வைத்துக்கொண்டேன்" என்றார். ஐயர் நகைத்து, "தாம் இவ்விடம் வந்த உத்தேசம் என்ன? என்று கேட்டார். நாதன், "எனக்கு நான்கு பெண்கள். அவர்களில் மூத்த பெண்ணுக்கு வயது பன்னிரண்டாகின்றது. இவ்வருஷம் அப்பெண்ணுக்கு விவாகஞ் செய்தாக வேண்டும். வரனையுத்தேசித்து வந்தேன்" என, ஐயர், "ஸந்தோஷம்! நமது பையனைப் பற்றி யுமக்குச் சொன்னதார்?" என்று கேட்டார். நாதன், "மன்னார்குடிக்குச் சென்றிருந்தேன்; அங்கு அநந்த கிருஷ்ணையர் சொல்லத் தெரிந்துகொண்டு வந்தேன்"—என்றார்.

இப்படிப் பேச்சு நடந்து கொண்டிருக்கும்பொழுது தபாற்காரன் ஒரு கடிதம் கொண்டுவந்து கொடுத்தான். அதை ஐயர் வாங்கிப் படித்தார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது—

மன்னார்குடி,

அன்பீர் !

நாதன் என்னும் ஒரு பிராம்மணர் வரன் விஷயமாக அவ்விடம் வருவார். அவர்க்கு நான்தான் உம்மைச் சொல்லி உம்மிடம் அனுப்பினேன். அவர் நவீன நாகரிகர் ; ஆசார ஹீனர் ; குலப் பெருமை யறியாதவர் ; தம்மையே மதித்துப் பேசும் டாம்பீகர் ; உண்மை பேசு மியல்பினரல்லர் ; கண்டதே காட்சி கொண்டதே கோலமென் றிருக்கும் கீழ்மக்களின் குணமுடையவர். அவரோடு சற்றுச் சம்பாஷணை செய்யின் இவை யாவும் விளங்கும். அவருக்கு அவருடைய கோத்திரந் தெரியாது. நீர் அவரை உமது கோத்திரம் என்னவென்று கேட்டாற் போதும். அவருடைய மகிமை விளங்கிவிடும். இவ்விடம் வந்து பலராமய்யரிடம் வரன் விசாரித்துப் பெரிய அவமான மடைந்தார். அங்குத் தம்மிடம் அவரை அனுப்பியதும் அவருக்கொரு புத்தி மதியை யுண்டாக்கும் பொருட்டேயாம். அவர் உமது சம்பந்தத்தை விரும்பார். அவருக்குப் பையன் ஆங்கிலம் படித்திருக்கவேண்டும். வரதக்ஷிணைக்காக ஆயிரம் இரண்டாயிரமும் செலவழிக்க ஆயத்தமாய் இருக்கின்றார் ; வேறு பேசுவானேன் ; உமது சம்பந்தத்திற்குச் சிறிதும் அருகரல்லர். பேசி, உலகமிருக்கும் ஒழுங்கை யறிந்துகொண்டு அனுப்பி விடுக.

இங்ஙனம்,

அநந்தகிருஷ்ணயர்.

இங்ஙனம் எழுதி யிருக்கக் கண்ட ஐயர் மனத்திற்குள் வியப்படைந்து, கடிதத்தை மடித்து வைத்துக்கொண்டு, “ நல்லது, உங்கள் கோத்திரமென்ன ?” என்று கேட்டார். அப்பொழுது அவ்வூர் கனகரத்தினம் பிள்ளை யென்பவர் அங்குவந்து சேர்ந்தார். அவர் ஓர் ஆஸ்திக சிரோமணியாதலின் ஐயர், அவரை அன்போடு வரவேற் றுபசரித்து வீற்றுருக்கச் செய்து அவருக்கு நாதன் என்பவரைப் பற்றிச் சொல்லி உடனே, “ உமது கோத்திரமென்ன ?” என்று மறுபடியும் கேட்டார். நாதன், அசட்டுச் சிரிப்போடு, “ அதுதான் தெரியவில்லை. அதை வரும்போது என் பாட்டியைக் கேட்டுத் தெரிந்துகொண்டு புறப்பட மறந்து விட்டேன் ” என்று விடை பகர்ந்தார். இதைக் கேட்டதும் ஐயரும், பிள்ளையும் நகைத்தனர். பிள்ளை, “ நீர் பிராமணராயிற்றே !

உமக்கெப்படிக் கோத்திரந் தெரியாமற் போயிற்று? ஸந்த்யா வந்தனம் நெடுநாளாகச் செய்யாதவரென்று தெரிகின்றது'' என நாதன், "ஆம் நான் ஸந்த்யாவந்தனஞ் செய்வதே கிடையாது. எனக்கு விவரந் தெரியாததற்கு முன்பு செய்திருப்பேன். தாம் கூறியதுண்மைதான்'' என்றார். இதைக் கேட்டதும் ஐயர், சிறிதும் நகைக்காமல், "காலத்தை யநுஸரித்து நடக்கின்றீர்கள், அதனாலே குற்றமில்லை'' என்றார். பிள்ளையவர்கள், கொஞ்சம் சிரித்து "உமது தந்தை பெயரென்ன? அதாவது தெரியுமா?'' என்று கேட்டார். நாதன், "என் தந்தையின் பெயர், ரகுநாதய்யர், டிப்டி கலெக்டராக விருந்தார்'' என்றார். பிள்ளை, "ஓ தெரிந்துகொண்டேன். கும்பகோணத்திலிருந்தாரே அவரா? சென்ற நான்கு வருஷங்களுக்கு முன் ஒரு கொலைக் குற்றத்திலகப்பட்டு அவருடைய புதல்வரில் ஒருவர் தண்டனை யடைந்ததாக நான் பத்திரிகையில் வாசித்தேன். அவர் யார்?''—என, நாதன் "அவர் என் தமையன், அவர் பெயர் கே. ஆர். நாதன்'' என்று கம்பீரமாகப் பதிற் சொன்னார். பிள்ளையவர்கள் "உமது தமையனா? உமது பெயர் என்ன?'' என்று கேட்டார். நாதன்; "என் பெயர், கே-வி-நாதன்....அதாவது; என்பெயர் கே. விசுவநாதன். அவர் பெயர் கே. ராமநாதன்'', என்று புன்முறுவலொடு விடையளித்தார். பிள்ளையவர்களும் ஐயரும் நகைத்தனர். பிள்ளையவர்கள் "நன்றாயிருக்கின்றது பெயர்! தலைமயிரை வெட்டிக் கொள்வதுபோலப் பெயரையும் குறைத்துக்கொள்ளுகிறார்கள் போலும்!'' என்றார். ஐயர், "இவர் தமையன்மீதெப்படிக் கொலைக்குற்ற மேற்பட்டது?'' என்று கேட்க, பிள்ளையவர்கள், "அதைக் கேட்பானேன்? இதற்கு வரதக்ஷிணைதான் காரணம். அவர் தாம் விவாகஞ் செய்துகொண்ட பெண்ணை மணந்த நான்கு வருஷங்களுக்கெல்லாம் கிணற்றிலே தள்ளிக் கொன்றுவிட்டு வேறு பெண்ணை வரதக்ஷிணைபெற்று விவாகஞ் செய்துகொள்ள முயற்சி செய்தார். இறந்த அப்பெண் படித்தவளானதினால், தன் புருஷன் அடிக்கடி தன்னை 'உன் அப்பாவிடமிருந்து ஆயிரம் ரூபாய் கேட்டு வாங்கிக்கொடு' என்று கட்டாயப்படுத்தியது கண்டு தன் தந்தைக்குக் கடிதமெழுதியிருந்தாள். அல்லாமலும் தன்னைத் தன் புருஷன் கிணற்றிலே தள்ளப் போவதை முன்னலறிந்துகொண்ட அவள், தன் தந்தைக்குத் 'தங்களை நான் பலமுறை கேட்டும் என்

புருஷன் கேட்ட பணத்தை அனுப்பாமையினால், கொலை யென்னும் பாதகத்திற்கஞ்சாத என் கணவனாகிய நமன் என்னைக் கிணற்றிலே தள்ளிக் கொல்லப் போகின்றான். மூன்று நாளாய் என்னைப் படாதபாடு படுத்துகின்றான். என்னைத் தள்ளிக் கொன்றுவிட்டு வேறு கல்யாணம் வரதக்ஷிணையோடு செய்து கொள்ளப் போகின்றானாம். இந்தக் கடிதம் ஒரு சமயம் என் கணவனாகிய கொலைகாரனுக்குப் பெரிய புத்தியை யூட்டுமென்று நம்பித் தமக்கு இதனை யெழுதலானேன். நான் இறப்பதற் கஞ்சி எழுதவில்லை' — என்று எழுதிச் சாவதற்கு முதல் நாளே தபாலிற் போட்டிருந்தாள். பின்னர் அந்தக் கடிதமும் வேறு கடிதங்களும் கொலைசெய்த அவனை வெளிக்குக் கொண்டு வந்து தண்டனைக் குட்படுத்தின. இந்த அதிசயத்தை நான் அப்பொழுது பத்திரிகையிலே படித்தேன்"—என்றார். இவர் பேசி வாய் மூடுவதற்குள், நாதன் "அது அப்படியல்ல, வீண் வதந்தி. என் தமையன் மனைவி பெரிய காதகி. அவள் அடங்காப் பிடாரி! புருஷன்மீது வீண்பழி சுமத்திவிட்டு இறந்து அவனைத் துன்பத்திற்குள்ளாக்கினாள்"—என்றான்.

இப்படிப் பேச்சு முடியவே ஐயர். பெருமூச்செறிந்து "நல்ல வரதக்ஷிணை! வரதக்ஷிணை!" என்று கூறி நாதனை நோக்கி, "ஐயா! என் குமாரன் இங்கிலீஷ் படிக்கவில்லை, அவன் வரதக்ஷிணை பெறத் தகுதியுடையவனல்லன்"...என்றார். இதைக் கேட்டதும் நாதன், தம்முடைய வலக்கரத்துப் பின்புறத்தை ஒருகடி வெகு பலமாகக் கடித்துக்கொண்டு வெடுக்கென்றுதறினார். உதறியதும் அந்தக் கை திண்ணையின் குரட்டுக்கல்லிலே தாக்குண்டது; அதனால் இரத்தம் பெருகும்படியான காயம் அதில் உண்டாய்விட்டது. ஐயரும் பிள்ளையவர்களும் "ஆ! இதற்காக ஒரு மனிதன் கையை யிப்படிக் கடித்துக்கொள்வானா? இதென்ன மூடத்தனம்" என்று வியப்புற்றனர். நாதன், அதைப் பொருட்படுத்தாமல், "நான் என் பெண்ணைப் படிப்பில்லாதவனுக்குக் கொடுக்கமாட்டேன்; அவ்வளவு மூடனல்லன்; வீணலைச்சலாயிற்று" என்று கூறிச் சற்று மௌனமாக விருந்துவிட்டுப் பெருமூச்சோடு எழுந்திருந்தார். ஐயர், "உமது உயர்வான எண்ணமும் ஆசாரமும் எங்களிடத்தில் காணக் கிடைக்கமாட்டா! ஆகையினால் நாங்கள் உமது பெண்ணைக் கல்யாணஞ் செய்துகொள்ளத் தகுதி யில்லாதவர்கள். யோக்

யதை யிருந்தாலல்லவா ஒன்றை விரும்பவேண்டும்? பேசி முடிவதற்குள் தாமிப்படி கோபங்கொண்டு புறங்கையைக் கடித்துக் கொள்வானேன்?''—என, பிள்ளையவர்கள் சிரித்து, "வந்த காரியம் வீணுனதினுல் வந்தவொரு உள்ளக் கிளர்ச்சி யப்படிச் செய்யும்படி செய்துள்ளது; அது சினமல்ல''—என்றார். நாதன், "கோபமொன்றுமில்லை. மன்னார்குடியில் ஒரு மூடன் சொன்ஞன். அவன் பேச்சைக்கேட்டு நான் வந்தேன். வந்தது வீணுயிற்றே என்பதுதான்''—என்று கூறி "நான் போகின்றேன்'' என்று புறப்பட்டார். ஐயர், "போஜனஞ் செய்துவிட்டுப் போகலாம், நாழிகையாயிற்று'' என்று உபசரித்தார். நாதன் கேளாமல் புறப்பட்டுப் போய்விட்டார். அவர் போனதும் ஐயர் பிள்ளையவர்களிடம் தமக்குச் சற்றுமுன் வந்த கடிதத்தைக் காட்டினுர். பிள்ளையவர்கள் பார்த்து, "இந்த அநாசாரன் வருவதற்கு முன் உமக்கு எச்சரிக்கையும் வந்துவிட்டது போலிருக்கிறது'' என்று கூறி நகைத்தார். ஐயர், "பிள்ளையவர்களுக்கொரு வார்த்தை! என்னைக் கடவுள் இப்படிப் பட்டவர்களுடைய சம்பந்தத்திற் குட்படுத்த மாட்டார்'' என்று கூறினுர். பின்னர் இருவரும் காலவியல்பையும் அதற்கேற்ப உலகம் செல்வதையும் பற்றிச் சற்றுப் பேசியிருந்து அப்பாற் பிரிந்தனர்.

இதனை ஐயர் அவர்கள் தம்முடைய மனைவிக்கும் ஜடாவல்லவருக்கும் சொல்லி மகிழ்ந்தார். ஜடாவல்லவர் "கொலை பாதகர்களின் கூட்டுறவை நமக்குக் கடவுள் சேர்த்து வைப்பாரா? வைக்கமாட்டார்! வரதக்ஷிணை இதைமாத்திரமா செய்கின்றது? அது செய்யும் விபரீதம் அநந்தம்''—என்றெண்ணிக்கொண்டு தம்முடைய வேலையைக் கவனிக்கலாயினர். அப்பால் ஒருநாள் ஐயருடைய வீட்டுக்கு அவருடைய மூத்த மனைவியின் சகோதரர் வந்து தம்முடைய பெண்ணை ஜடாவல்லவருக்குக் கல்யாணஞ் செய்துகொள்ளவேண்டுமென்று மன்ருடினுர். ஐயர், அவருக்கிணங்கி, ஜாதகம் பார்த்தனர்; ஜாதகம் பொருந்தியிருக்கக் கண்டு, சம்மதித்தனர். பெண்ணும் இலக்ஷண முடையவள். ஐயர் ஏற்கனவே சம்பந்தஞ்செய்த இடமாதலால் குலகோத்திரங்கள் பார்க்கவேண்டிய அவசியமுமில்லாமற் போயிற்று. அவர் பரம ஏழையாதலால் ஐயர், கல்யாணத்தைத் தம்முடைய கிருகத்திலேயே செய்துகொள்வதாகப் பேசிமுடித்தார். பின்னர் முகூர்த்தம் பார்க்கப்பட்டு எல்லோருக்கும் கடித மெழுதப்பட்டது.

அஃபோது ஜடாவல்லவரின் தந்தை, ஜானகியையும் புக்ககத்திற்கு அனுப்பலாமென்று கருதி அவளுடைய புருஷனுக்கும் ஒரு கடிதம் விவரங்கண்டு எழுதியனுப்பினர். முகூர்த்தம் எட்டு நாளிருக்க பந்து மித்திரர்கள் யாவர்க்கும் கடித மெழுதியாய்விட்டது. இந்த சம்பந்தத்தில் லக்ஷ்மி அம்மாளுக்குச் சம்மதமில்லை. அவள் தடுத்தாள். ஐயர் இவ்விஷயத்தில் பின் வாங்காமல் தம்முடைய கருத்தை நிறைவேற்றுவதிலேயே கண்ணுயிருந்தார். சமயம் வரும்போது யாவும் அதற்கேற்ப ஒத்துக்கொள்ளும் என்பது முதுமொழியல்லவா?

இப்படி விவாகநிச்சயம் ஏற்படவே அதற்குவேண்டிய சாமக்கிரியைகளை யெல்லாம் ஐயர் சேகரிக்கத் தொடங்கினர். விவாகம் இரண்டு நாளிருக்க, பந்து மித்ரர்களிற் பலர் வந்து சேர்ந்தனர். ஸ்ரீமதி புருஷனும் வந்து சேர்ந்தான். ஆனால் ஜானகி புருஷனிடமிருந்து, தனக்கு வரமுடியாதென்றும், விடுமுறை நாள் கிடைக்க வில்லை யென்றும், தன்னை மதுரைக்குப் போலீஸ் இனிஸ்பெக்டராக மாற்றிவிட்டனரென்றும் கடிதம் வந்தது. இந்தக் கடிதங்கண்டதும், யாவரும் வருத்தமடைந்தனர். லக்ஷ்மியம்மாள் கண்களிலிருந்து நீரைப் பெருக்கி வருந்தினள். ஜானகி வருந்தினள். ஜானகியின் முகம் கரைமீது போடப்பட்ட தாமரை போல வாடிற்று. அவள் முகத்தைக் கண்ட ஐயர் ஆற்றொணுத் துயரமுற்றனர்.

உலகம் எந்த நிலையிலிருப்பினும் தன் இயல்பின்படி செல்லும் நாள் நில்லாதன்றோ? அப்படியே நாள் கழிந்தது. முகூர்த்த நாள் உதயமாயிற்று. மங்கள வாத்ய முழக்கம் ஊர் எங்கும் பரவியது. ஊர் முழுதும் உற்சாகம் என்னும் கடலிலே விளையாடுவது போன்ற மகிழ்ச்சி கொண்டது. மகிழ்ச்சி யென்னும் கடலிலே முகூர்த்தவேளை யென்னும் அமுதம் பிறந்ததென்று சொல்லும்படி முகூர்த்தவேளை வந்தது. வேத கோஷமும் மங்கள வாத்யமுழங்க வதூவரர்கள் மணமேடை யேறினர். ஆரியாசாரப்படி விவாகந்தொடங்கி நடத்தப்பட்டது. குறித்த வேளையில் "இந்தத் தம்பதி நீடுவாழ்க! வாழ்க! ஸர்வ மங்களங்களுமுண்டாகுக!' என்னும் ஆசீர்வசனத்துடன் பாணிக்ரஹண மாங்கல்யதாரண மஹோத்ஸவம் நடந்தது. எல்லோருக்கும் ஐயர் தாம்பூல தக்ஷிணைகள் வழங்கினர். "ஜடாவல்லவருக்கு உரிய மனைவிவாய்த்தனள்" என்று எல்லோரும் புகழ்ந்தனர். நல்ல அழகும் குணமும்

குலமும் பொருந்திய பெண்ணை ஐயர் தேடி மகனுக்கு மணவினை முடித்தது பற்றி அவரை யாவரும் புகழ்ந்து பேசினர். ஐயரும் பரமானந்த பரிதராயினர்.



## அத்தியாயம்—5

"தாழ்ந்த வருணத் துதித்தோருந் தக்கோ ராவ ரொழுக்கத்தால்
வீழ்ந்த வொழுக்கத் தாரிழிவர் மேலாம் வருணத் துதித்திடினும்
சூழ்ந்த துணையாஞ் சிறப்பின்பஞ் சுரக்கு மதனாலுயிர்தனினும்
வாழ்ந்த வொழுக்கம் ஓம்பிடுக வழுக்கி னிடும்பை யேதருமே."

கட்டளை யென்பது ஈரோடு மார்க்கத்தில் பிள்ளையார் புத்தூருக்கு நேரே காவிரியின் தென்கரையிலுள்ள ஒரு ரயில் ஸ்டேஷன். இது ஒரு சிறிய கிராமம். இந்த ஸ்டேஷனுக்கு ஜடாவல்லவரின் திருமணம் முடிந்த மறு நாள் காலை பதினொரு மணிக்குத் திருச்சியிலிருந்து வரும் ரயில் வந்தது. இந்த வண்டியிலிருந்து பலரிறங்கினர். அவர்களுள் அங்குள்ளார் அனைவரும் கண்டதிசயிக்க ஆறரையடி உயரமும் ஒடிந்து விழுவது போன்ற உடம்பும் இவர் தலையில் மூளையிருக்குமோ இராதோ வென ஐயமுறத்தக்க குடுக்கைத் தலையும் காளமேகம் போலக் கறுத்த மீசையுமுடைய ஒருவரிறங்கினர். அவர் போலீஸ் இனிஸ்பெக்டர்போல உடை தரித்துக்கொண்டிருந்தார். அவரைக் கண்டாரனைவரும் ஒரு காட்டு மனிதனைப் பார்ப்பது போலப் பார்த்தனர். அவர் ரயிலிலிருந் திறங்கியதும் கூலியாளைக் கூவி, அவனிடம் தம்முடைய பெட்டியைக் கொடுத்து எடுத்துவரும்படி யழைத்துக்கொண்டு புறப்பட்டார். ஸ்டேஷனைவிட்டு வெளியே வந்ததும் "இங்கு ஏதாவது காபிக் கடை இருக்கிறதா?" என்று விசாரித்தார்.—இந்த ஊர் வெகு சிறிய ஊரானதினால் காப்பிக்கடை யென்பது இங்குக் கிடையாது. தவிர இப்பக்கம் காப்பி குடிப்பவருமில்லை. "பிள்ளையார் புத்தூர்போய் அக்கிராரத்திலே விசாரியுங்கள்"........என்னும் மறுமொழி கிடைத்தது. இதைக் கேட்டதும் அவருடைய மனங் கலங்கியது! 'சோற்று வேளையாயும் காப்பிக்கு வழியில்லாமலிருக்கிறதே; என்ன செய்கிறது' என்னும் கவலையிலாழ்ந்தார். இவர் கவலையிலாழ்ந்தென்ன செய்வது! இந்தக்கட்டளை ஸ்டேஷ

னிலே கரணம் போட்டாலும் காப்பி யகப்படாது; இவருக்குச் சிறு தலை வலியும் உண்டாயிற்று. புத்தியுஞ் சிறிது பேதமடைந்தது. என்ன செய்வார். இந்த ஸ்டேஷனிலிறங்கிக் காவிரி தாண்டித்தான் பிள்ளையார் புத்தூர் போக வேண்டும். பிள்ளையார் புத்தூர் போகாவிட்டால் இவர் இன்றைய தினத்தை விரததினமாகக் கொள்ள வேண்டியதுதான். சோற்றுக்கடையுமிவ்வூரிலில்லை. ஆகவே இவர் ஸ்டேஷனுக்குக் கால் மைல் தூரத்தில் வடக்கே இருக்கும் காவிரி நதிக்கு வந்தார். காவிரி நதியிலே அரையாறு ஜலமோடினமையால் பரிசல் போடப்பட்டிருந்தது. பரிசல்கள் இந்தத் துறையில் எப்போதும் ஆயத்தமாகவிருக்கும். அப்படியே அப்பொழுதும் இருந்தது. இவரைக் கண்ட பரிசற்காரர்கள் இவரையொரு போலீஸ் உத்தியோகஸ்தரென்றெண்ணிப் பரிசலில் ஒரு மெத்தை கொண்டுவந்து போட்டு அதில் உட்கார வைத்து வெகு விரைவாகத் தள்ளி இக்கரை கொண்டுவந்து சேர்த்தனர். பரிசற்காரர்கள் இவ்வாறு தனக்கு மரியாதை செய்தது தமது உடுப்புக்கென்று பெரு மகிழ்ச்சியடைந்த இவர் அவர்களுக்கு ஒரு ரூபா வெகுமதியாகக் கொடுத்தார். ஓர் ஆளுக்கு அரையணுத் தான் எந்தக் காலத்திலும் பரிசற் கூலியாகும். அரையணுவுக்கு ஒரு ரூபா கிடைக்கப் பெற்ற அவர்கள் என்று மடையாத ஆனந்தமடைந்தார்கள்.

இவ்வாறு வெகுமதி யளித்ததினுலே கர்வங்கொண்ட அவர், பரிசற்காரர்களை நோக்கி, "இங்கிருந்து அக்கிராரத்திற்குப்போக ஒரு வண்டி பேசிக் கொடுங்கள்" என்று கேட்டார். அவர்கள், "ஐயா! அக்கிராரம் இங்கிருந்து கால் மைல் தூரந்தானிருக்கிறது. இதோ வீடுகள் தெரிகின்றன பாருங்கள். இதற்கு வண்டி வேண்டியதேன்? தவிர வண்டியும் இங்கே கிடைக்காது" என்றார்கள். அதைக் கேட்டதும் அவர், முகச் சுளிப்புடன், "சீ! என்ன ஊரிது? வண்டி கிடையாதா? காப்பி சாப்பிடுவோமென்று பார்த்தேன்; காப்பியுங் கிடையாது; சோற்றுக் கடையுமில்லை. இன்ன இது, மனிதர்கள் வசிக்கு மிடமாகத் தெரியவில்லையே! ஒரு கூலியாவது தருவித்துக் கொடுங்கள்" என்றார். அவர்கள், "ஐயா! கூலியை அக்கரையிலிருந்து தான் யாரும் அழைத்துவருவது வழக்கம். நீங்கள் அழைத்துவந்த கூலியை அக்கரையிலேயே அனுப்பிவிட்டீர்கள். அப்படிச் செய்திருக்கப் படாது"—என்று கூறினர். அவர் "இப்படிக் கூலியாள் கூட

கிடைக்காமற் போகுமென்று நான் கண்டேனு? நீங்கள் யாராவது வருவீர்களா?" என்றனர். அவர்கள் "நாங்கள் வரமுடியாது. இங்கிருங்கள் சற்று, அக்கரைபோய்க் கூலியாளொருவனை அழைத்து வருகின்றோம்" என்று கூறிப் பரிசலைவிட்டுக் கொண்டு போய்விட்டார்கள்; அவர் புது மனிதரானதால் என்ன சங்கடமிது என்றெண்ணி வெயிலைக் கவனியாமல் பெட்டியை மணலிலே வைத்துவிட்டு அதன்மீதுட்கார்ந்து கொண்டார். இவருக்கு இச்சமயம் இவரைக் காப்பி யில்லாமையினுலே பாதிக்கும் தலைவலிதான் துணையாகவிருந்தது. வேறொருவரும் அங்கில்லை. நடுப்பகலாய்விட்டது. புது மனிதர் இவ்வாறு அகப்பட்டுக் கொண்டாரே என்னுமிரக்க மில்லாமல் கதிரவனும் வெகு உக்ரமாகக் காய்ந்தனன். இந்தச் சிறிது தூரத்தையும் இந்த மனிதன் நடந்து கடப்பதற்கு ஏன் தயங்குகின்றான்? இப்படி யிருப்பது கூடுமா? இவனை நடக்கும்படி செய்ய வேண்டும்—என்னும் எண்ணங்கொண்டு மார்த்தாண்டன் தயவின்றிக் காய்கின்றானே என்றெண்ண வேண்டியதா யிருந்தது. இப்படி யிருந்தமையின், நூலாசிரியர்க்குள்ள சுதந்தரப்படி அவர் மனத்தினுள்ளே நுழைந்து காரணம் யாதெனக் கவனித்தோம் அவர் அந்தக் கால் மைல் தூரத்தையும் நடந்து கடக்க வெட்கப்படுவதாகவறிந்து வெளிவந்தோம். ஒருவனுடைய மனதை யறிவது எளிதில் ஆகக்கூடியதா? உள்ளே நுழைந்து பார்த்துக் காரணந் தெரிந்துகொண்டு திரும்ப அரைமணி நேரமாயிற்று. இதற்குள் பரிசலும் அக்கரையிலிருந்து வந்தது. அதிலொரு கூலியாள் வந்தான். அவனைப் பேசிக்கொண்டு அவன் தன், தலைமீது பெட்டியைத் தூக்கிக்கொண்டு பின்னே வர முன்னே புதுமனிதர் வாடிய முகத்துடன் நடந்தார்; பசிக்களையின் தொந்தரை மிகுதியாகப் பாதித்தமையினுல் "இந்த ஊருக்கு நாமேன் வந்தோம்" எனக் கருதினுர்.

பசிக்களைப்பையும் வருத்தத்தையும் தமக்கு அந்தரங்கத் துணைவராகக்கொண்டு நடந்த அவர் சற்று நேரத்திற்கெல்லாம் அந்தக் கிராமத்திற்குச் சென்று உமாமகேசுவர ஐயர் வீட்டு வீதியிலே போடப்பட்டிருக்கும் உன்னதமான பந்தலுக்குள் பிரவேசித்தார். கூலியாளும் கூடச் சென்றான். அப்போது அங்கே வீட்டிற்குள் எல்லோர்க்கும் பகற்போஜனம் நடந்துகொண்டிருக்கிறது. இவ்வேளையில் உள்ளே ஒருவரையும் போகவொட்டாமல்

தடுக்க ஏற்படுத்தப்பட்டிருந்த காவலாளி யொருவன் வீட்டின் வாயிற்படியிலே நின்று கொண்டிருக்கின்றான். கதவு தாளிட்டிருக்கிறது. காவலாளி, இவர் உடுப்புகளையும் மீசையையும் இவரிடத்திற் காணப்படும் ஏனைய டாம்பீகத் தோற்றங்களையுங் கண்டு இவரைப் போலீஸ் உத்தியோகஞ்செய்யும் சூத்திரனென நினைத்து "ஐயா! சாப்பாட்டுவேளை! நீங்கள் உள்ளே போவது கூடாது" என்று சொல்லித் திண்ணையிலேயே உட்கார வைத்து விட்டான்! என்னசெய்வார் பாவம்! பசியோ காதடைக்கிறது! அக்காவலாளியை எதிர்த்து உள்ளே போகவும் அவர் வெட்கப்படுகின்றார். உண்மை கூறினும் அவன் நம்புகிறவனாகத் தோன்றவில்லை. பின் வேறொரு வழியும் தோன்றாமல் பெட்டியையும் படுக்கையையும் திண்ணையில் வைக்கும்படி கூலியாளுக்குச் சொல்லி அந்தத் திண்ணையில் படுத்தார்; படுத்த ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் பசிக் களைப்பினால் அயர்ந்து நித்திரை போய்விட்டார்.

பிறகு பத்து நிமிஷத்திற்கெல்லாம் லக்ஷ்மி அம்மாள் வீட்டிற்குள்ளிருந்து வெளியே வந்து திண்ணையில் படுத்திருப்பவரைப் பார்த்தாள். அந்த அம்மாளும் அவரை ஒரு போலீஸ் உத்தியோகஸ்த ரென்றெண்ணி அங்கு நின்று கொண்டிருந்த காவலாளியை நோக்கி, "அடே தொப்பளான்! இந்தப் போலீஸ் சேவகன் எங்கே இங்கு வந்திருக்கிறான்; யாரைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறான்; எப்பொழுது வந்தான்?" என்று கேட்டாள். காவலாளி "அம்மா! இந்த ஆள் இப்போத்தான் வந்தாருங்க. வந்ததும் வீட்டிற்குள் நுழைய ஆரம்பிச்சாருங்க, நான் நீங்க யார் எங்கே போரீங்க? ஆரைப்பார்க்க வேணுமெண்டேன்; ஐயரைப் பார்க்க வேண்டுமென்று சொன்னாருங்க, ஐயா! சாப்பாட்டு வேளை, உள்ளே நுழையாதேயுங்க எண்டு சொல்லித் தடுத்தேன், உடனே அவுங்களும் திண்ணையில் படுத்துத் தூங்கிவிட்டாங்க. இதுதானம்மா எனக்குத் தெரியும்" என்றான். அதைக்கேட்ட லக்ஷ்மியம்மாள் 'யார் இங்கே வந்து படுத்திருக்கிறான்? தொப்ளான், யாராயிருந்தாலென்ன? எழுப்பு, விசாரிப்போம்' என்றாள். உடனே தொப்பளான் அவர் பக்கத்துக்கு வந்து 'ஐயா! போலீசையா! ஓ ஐயா! போலீசையா! எளுந்திருங்க' என்று சொல்லித் தட்டி எழுப்பினான்.

இந்தச் சந்தர்ப்பத்தில் போஜன முடித்துக்கொண்டு அவ்வூர் பிராமணர்களிற் சிலரும் உமாமகேசுவர ஐயர் உறவினரும்

தெருவுக்கு வந்தார்கள். உடனே லக்ஷ்மியம்மாள் உள்ளே போய்விட்டாள். இப்பொழுது உறங்கினவரும் விழித்துக்கொண்டார். அவரைக் கண்ட அவ்வூர் பிராமணரும் பந்துக்களும் அவரை ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரென்றே நினைத்து "ஏது இந்நேரத்தில் இங்கே வந்திருக்கிறது? ஏதாவது கேஸ் விஷயமாகவோ?" என்று கேட்டனர். இதற்குள் வீதியில் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தன் வந்து படுத்திருக்கிறனென்ற சங்கதி உமாமகேசுவர ஐயருக் கெட்டியது. அவர் ஓடித் தெருவுக்கு வந்து பார்த்துப் "போலீஸ் உத்தியோகஸ்தன் இங்குவரக் காரணமென்ன?" வென்றெண்ணி மலைத்தார். வந்தவர் ஐயரைப் பார்க்கவில்லை. பக்கத்திருந்த டிரங்குப் பெட்டியில் என். சுந்தரம் என்று ஆங்கிலத்திலெழுதியிருப்பதை ஐயருடைய மைத்துனன் கண்டு அவரிடம் மெதுவாக, "இவர் ஜானகி புருஷன்; பெட்டியிலே என். சுந்தரம் என்று பெயரெழுதியிருக்கின்றது' என்று சொன்ஞன். இதைக் கேட்டதும் ஐயருக்குத் தமது மாப்பிள்ளை போலீஸ் உத்தியோகத்திலிருப்பது ஞாபகத்துக்கு வந்தது. உடனே ஐயர் அவரை மாப்பிள்ளை தானென்று நிச்சயித்து 'ஒகோ! யாரோ ஒரு போலீஸ்காரனென்றல்லவா எல்லாரும் எண்ணிவிட்டார்கள்! மாப்பிள்ளே! நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்? காலை ரயிலில் வந்தால் இந்நேரமென்ன? ஒரு தந்தியாவது இந்த ரயிலிலே புறப்பட்டு வருகின்றேனென்று அடித்திருக்கப்படாதா? எழுந்திருங்கள், அதிகப் பசியோடிருக்கிறீர் போலும்! சாப்பிட்டபின் பேசிக்கொள்வோம்" என்று கூறி அவரை உள்ளே அழைத்துப் போய் "உடுப்புக்களைக் கழற்றுங்கள், ஸ்நானம் செய்து சாப்பிடலாம்" என்ருர். மாப்பிள்ளை "எனக்குக் காலை முதற்கொண்டு காப்பியில்லாதது காதடைத்துப் போகிறது, தலை வலிக்கிறது, காப்பி வைக்கச்சொல்லுங்கள். காப்பி குடித்துவிட்டுப் பின் சாப்பிடுகின்றேன்" என்ருர். இதைக் கேட்டதும் ஐயர் காப்பிக் கொட்டைக்கு என்ன செய்வதென்று சற்றுச்சிந்தித்து வெளியே வந்து வேலைக்காரத் தொப்பளானை யழைத்து "அடே தொப்பளான்! காப்பிக்கொட்டை இப்பொழுது எங்கேயடா அகப்படும்?" என்று கேட்டார். அவன் 'சுவாமி, நம்மூரில் யார் காப்பி குடிக்கிருங்க, ஐயமாருங் குடிப்பதில்லை; வேளாளருங் குடிப்பதில்லை. புத்தூர்க் கடையிலேதான் அகப்படும்' என்ருன். ஐயர் 'என்னடா இப்பொழுது அவசரமாய் வேணுமடா, சாயந்

திரத்திற்குப் புத்தூர் கடைக்குப்போய் வாங்கிக்கொள்ளலாம், இப்பொழுது என்னடா செய்கிறது? மாப்பிள்ளை பட்டினியோ டிருக்கிறாரே' என்றார். தொப்பளான் 'சுவாமி! ஞாபகம் வந்தது; வேளாளத் தெருவுக்கு நீலகிரி மலையில் உத்தியோகஞ்செய்யும் ஒருவர் வந்திருக்கிறார். காப்பிக்கொட்டை அவரிடமிருக்கும்; நான் போய்க் கேட்டுக் கொஞ்சம் வாங்கிக்கிட்டு இதோ ஓடிவாரேன்'' என, ஐயர், "அப்பா! ஆனால் சீக்கிரம் போய் வாங்கிக்கொண்டு போனேன் வந்தேனென்று வந்து சேரு பார்ப்போம்'' என்று கூறி அனுப்பினார். வேலைக்காரத் தொப்பளான் வாயுவேகமாக ஓடினான். ஐயர் இரண்டடியில் உள்ளே வந்து அங்கே நின்றுகொண்டிருந்த தன் மைத்துனன் மகன் கந்தன் தலையிலே தட்டி, "அடே ஓடு, ஓடித் தொந்திச் சுப்பையன் வீட்டுக்குப்போய் பால் வாங்கிவா'' என்று துரத்தினார். இந்த வேலை யெல்லாம் அவ்வூர் பிராமணர்களுடைய ஒவ்வொருவர் வீட்டிலும் ஸ்திரீ புருஷர்கள் ஐயர் மாப்பிள்ளையைப் பற்றி அடியில் வருமாறு பேசலாயினர்—

ஆடவருட் சிலர், "ஐயர் மாப்பிள்ளை பிராமணராகக் காணப்படவில்லை'' என்றும் சிலர் 'இவன் மதப் பிரஷ்டனோ' வென்றும் சிலர் 'மதப்பிரஷ்டனுக்குத் தெரியாமல் ஐயர் பெண்ணைக் கொடுத்துவிட்டாரோ''வென்றும் பழித்தார்கள். சிலர் மீசை வைத்திருப்பதற்கும் போலீஸ் உடைதரித்திருப்பதற்கும் இகழ்ந்து பேசினர். சிலர் 'இவனோடு பந்திபோஜனஞ் செய்யலாமோ?' என்றனர். ஸ்திரீகளில் மாப்பிள்ளையைக் கண்ணாலே கண்டவருட் சிலர் 'மீசையையும் கைப்பிரம்பையுங் கண்டால் பயமாயிருக்கிறது' என்றும் சிலர் 'இவனோ கொட்டைப் பானைக் கரி போலிருக்கிறான்; இந்த லக்ஷணத்திலே கண்ணுக்குத் தெரியாத சிறிய சாந்துப் பொட்டொன்று நெற்றியிலே இட்டுக்கொண்டிருக்கிறான்; இவன் பொட்டிட்டுக் கொண்டாலும் இல்லாவிட்டாலும் எல்லாம் ஒன்று தானே''—என்றும் பழித்துப் பேசினர். கன்னிகைகளிற் சிலர் "நமக்கு நாயகனும் இம்மாதிரி உத்தியோகஸ்தனாக இருக்கவேண்டும்'' என்றெண்ணி மாப்பிள்ளையின் டாம்பீகத்தைப் புகழ்ந்துபேசினர். நேரிற் காணாத ஸ்திரீகளுட் சிலர் "என்னடீ குப்பீ! என்னடீ சுப்பா! லக்ஷ்மி மாப்பிள்ளை குடிகாரன் மாதிரி மீசை வைத்திருக்கிறானாம்! குசினிக்காரன் மாதிரி காலோடு தலை சட்டையும் கையிற் பிரம்பும் பிடித்துக்கொண்

டிருக்கிறுனும்! இப்பேர்ப்பட்டவனைத் தேடிக் கிளியை யொத்த பெண்ணைக் கொடுக்க வேண்டுமிக்குக் கண்ணெங்கேடி போச்சு? அவனுக்கு எச்சல் விழுப்பே கிடையாதாம்'' என்று பலவாறுகப் பேசத் தொடங்கினர். கல்யாணக் கூட்டத்தோடு கூட்டமாய் அநேகர் மாப்பிள்ளையைப் பார்க்க உமாமகேசுவர ஐயர் வீட்டிலே வந்து கூடிவிட்டார்கள். இப்பொழுது மாப்பிள்ளை கூத்திடைக் கோமாளிபோல் விளங்கினுர். இந்தச் சந்தர்ப்பத்தில் பாலும் காப்பிப் பொடியும் வந்தன. அங்கே நின்ற பரிசாரகனைப் பார்த்து "அடே! இந்தப் பாலையும் காப்பிப் பொடியையும் வாங்கிப்போய் விரைவிலே காப்பி வைத்துக்கொண்டு வா'' என்று உத்தரவு செய்துவிட்டு ஐயர் தம் மாப்பிள்ளையோடு ஏதோ ஒரு விஷயத்தைக் குறித்துப் பேசிக்கொண்டிருந்தார். பேசிக்கொண்டிருந்த மாப்பிள்ளை திடீரென்று உட்கார்ந்த வண்ணத்தில் மூர்ச்சையாய்ச் சுவரில் பேச்சு மூச்சில்லாமல் சாய்ந்துவிட்டார். இதைக்கண்ட பந்துமித்திரர்க ளெல்லோரும் கோ! என்று அழத் தொடங்கினர். ஐயர் மனந் திடுக்கிட்டுப் பிரமித்து நின்றுவிட்டார். ஜடாவல்லவரும் இன்னும் சிலரும் பசிக்களைப்பா யிருக்குமென்றெண்ணி விரைந்தோடி, ஒரு செம்பிலே குளிர்ந்த ஜலம் கொண்டுவந்து, முகத்தில் தெளித்தார்கள். தெளித்ததும் மாப்பிள்ளைக்குச் சிறிது நினைவு வந்தது. இப்பொழுது காப்பியும் வைத்தாயிற்று. அவர் காப்பியை உறிஞ்ச மனத்திலெண்ணினுர். எண்ணிய நிமிஷமே உடுக்கை யிழந்தவன் கைபோல அவர் தலையுங் குனிந்தது. கையும் காப்பி டம்ளரை உயரத் தூக்கிற்று. உதடு வெளிவர முகம் நீண்டது. வாய் திறந்தது. மூக்கு தன் வேலையைச்செய்தது. இவ்வாறு வயிறு என்னும் தங்கள் தலைவனுக்கு ஊழியஞ் செய்வதில் அவைகள் சுறுசுறுப்பைக் காட்டின. உடனே மாப்பிள்ளை சட்—என்று கூறிக் காப்பியைக் கீழே வைத்துக் கையை உதறி "ஐயோ நப்த லேன் வாசனை காப்பியில்''—என்றுர். ஐயரும் ஏனையரும் பிரமித்தனர். ஜடாவல்லவர் ஓடி, காப்பிக்கொட்டை வாங்கிவந்த காவலாளியை விசாரித்தார். அவன் "சாமி! மாப்பிள்ளை சொல்வதுண்மைதானுங்க; காப்பிக் கொட்டையைப் பூச்சியரிச்சிவிடுமென் றெண்ணிக் கோளிமாதிரி வெள்ளையா யிருக்குமே அந்த உண்டைங்களைப் போட்டிருந்தாங்க அவுங்கவூட்டே! நான் போய் கேட்ட பிற்பாடு தானுங்க அந்த உண்டைகளைக்

பொறுக்கிவிட்டுக் கொடுத்தாருங்க"—என்றான். ஜடாவல்லவர் "யார் வீட்டிலே நீ காப்பிக்கொட்டை வாங்கிக்கொண்டு வந்தாய்?"—என, தொப்பளான், "சாமி! நீலகிரிப்பிள்ளை வீட்டிலே கொட்டை யில்லைங்க—மேலத் தெருவு ராமய்யன் வூட்டே வாங்கிக்கினு வந்தேனுங்க—" என்றான். ஜடாவல்லவர் விஷயந் தெரிந்துகொண்டா ராதலால் உள்ளே போய், "மாப்பிள்ளை சொல்வ துண்மைதான்; மேலத்தெரு ராமய்யன் வீட்டுக் காப்பிக் கொட்டையாம்" என்று கூறி உடனே ஓடிப் பால்கொண்டுவந்து கொடுத்தார். மாப்பிள்ளை தன் தலையிலடித்துக்கொண்டு அதைக் குடித்துப் பசிக் களையாறிச் சிறிது பேசத் தொடங்கினார்; பின் பத்து நிமிஷத்திற்கெல்லாம் உடுப்புகளைக் கழற்றிவிட்டுப் பல் விளக்கிக் கால் கை கழுவிக்கொண்டார்; குளிக்காமலும் ஸந்த்யாவந்தனம் செய்யாமலும் நெற்றியில் மாத்திரம் மேற்குறித்த வாறு ஒரு சிறிய சாந்துப்பொட்டு வைத்துக்கொண்டு போட்டிருந்த சட்டையைக் கழற்றாமல் உட்கார்ந்தார். இதுகண்ட ஊராரும் பந்துமித்திரரும், "ஐயோ! இப்படியும் உண்டோ! குளிக்காவிட்டாலும் வேறு துணியாவது உடுத்துக்கொண்டு சட்டையைக் கழற்றிவிட்டுப் போஜனம் செய்யக்கூடாதா; குலங்கெட்டவன்கூட இந்த அநாசாரத்தைக் கைக்கொள்ளச் சகிக்க மாட்டானே! என்ன அநியாயம்! இவனை நாம் பிராமணனென்று கருதி பந்துத்வம் பாராட்டக்கூடுமோ?" என்று பலவாறு ஐயர் வீட்டைவிட்டு வெளியே வந்து கண்ட விடமெல்லாம் கசுகசுவென்று பேசி இகழ்ந்தார்கள். கடைசியாக ஐயரையும் "நல்ல சம்பந்தம் செய்தீர்! உமக்கு மனம் ஒப்பியிருக்கிறதா?" என்று பலபேர் பலவாறாகக் கேட்கலாயினர். அதனால் மனம் நொந்த ஐயரும் "ஐயோ! இங்கிலீஷ் படித்து உத்தியோகம் செய்தால்தானென்ன? இப்படியெல்லாம் மீசை தாடியோடு கிளம்பி நேம நிஷ்டைகளை யனுஷ்டியாத ஜனமதிகூடவா பெருகும் என்று கண்டேன்! இது நான் செய்த மஹா பாபமென்றே சொல்லவேண்டும்! எனக்குங் கண்ணால் பார்க்கச் சகிக்கவில்லை. என்ன செய்கிறது? பேய்க்கு வாழ்க்கைப்பட்டவள் போலானேன். இந்த நான்கு நாளும் கும்பலோடு கும்பலாய் வைத்திருந்துவிட்டுப் பின் பெண்ணையும் கூட்டி அவனோடு அனுப்பி விடவேண்டும்; அறியாமற் சிக்கிக்கொண்டேன்" என்று சொல்லி வருந்தினார். இவ்வாறாக ஊராரும் உறவினரும் நண்பரும்

இகழ்ந்து பேசியதும் ஐயர் தாம் செய்த சம்பந்தத்திற்கு மன வருத்தப்பட்டதும் மாப்பிள்ளைக்குத் தெரிந்திரா வென்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ? தெரிந்திருந்தால் போலீஸ் தடபுடலைப் பூராவும் செலுத்தியிருப்பாரல்லவா? இருந்தபோதிலும் தம்மைப் போலீஸ் உத்தியோகஞ் செய்யும் ஒரு சூத்திரனென நினைத்து வேலையாள் உள்ளேவிடாமல் வெளியே காக்க வைத்ததில் அவருக்கு மனத்திற் சிறிது அவமானந் தோன்றி யிருக்க வேண்டும். இருந்தாலும் அவர் அதை வெளியிற் காட்டமாட்டாரல்லவா? ஆனால் லக்ஷ்மியம்மாளுக்கு மாத்திரம் மாப்பிள்ளை வீதித் திண்ணையில் நித்திரை போனபோது போலீஸ்காரனென நினைத்து வேலையாட்களைக் கொண்டு எழுப்பச் சொன்னோமே அதில் ஏதாவது மாப்பிள்ளைக்குக் கோபமிருக்குமோ வென்கிற அச்சம் நெஞ்சிற் குடிகொண்டது. ஊரார் மாப்பிள்ளையை இகழ்ந்து பேசுவதைக்கேட்டு இச்சம்பந்தம் செய்ததற்கு அந்த அம்மாள் வருந்தினாள்; மாப்பிள்ளை நல்ல உத்தியோகத்திலிருக்கிறாரென்பதை நினைத்து மாத்திரம் சிறிது மனவாறுத லடைந்தாள். என்ன செய்வார்கள்! மாப்பிள்ளையை ஐயரும் லக்ஷ்மியம்மாளும் கல்யாணத்தன்று பார்த்துப் பின் இப்போதுதான் பார்க்கின்றனர். அதனால் விளைந்த வேடிக்கையிது! இவ்வித கோலாகலத்தோடு இரண்டாவது நாள் கல்யாணம்முடிந்தது.

பின் நான்காவதுநாள் உமாமகேசுவர ஐயர் வீட்டிற்குக் காவிரி நதிக்குத் தென்கரையில் பிள்ளையார் புத்தூருக்கு ஏறக்குறைய எதிர்க்கரையிலிருக்கும் கிருஷ்ணராய புரத்திலிருந்து நான்கு சாஸ்திரிகள் புறப்பட்டுக் காவிரி நதியில் ஸ்நான ஸந்த்யாவந்தனாதி நியமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு அன்று மத்தியானம் போஜனகால சமீபத்தில் வந்துசேர்ந்தார்கள். அவர்களைக்கண்ட உமாமகேசுவர ஐயர் அன்போடு உபசரித்து "இலைபோட்டாயிற்று போஜனத்திற் கெழுந்தருளவேண்டும்" என்றார். உடனே சாஸ்திரிகள் நால்வரும் உள்ளே சென்று அங்கே போட்டிருந்த இலையில் தனித்தனியே உட்கார்ந்தார்கள். பின் முறையே பாயஸம் காய் கறிகள் பரிமாறி அன்னம் எல்லா இலைகளுக்கும் வைக்கப்பட்டது. ஒருவர் மாப்பிள்ளையை அழைத்து வந்து கூடத்தில் சாஸ்திரிகளுக்கு மத்தியில் விடப்பட்டிருந்த ஓர் இலையில் உட்கார வைத்தார். பிறகு அன்னசுத்தி செய்து வரிசைக் கிரமமாய் ஆபோஜன நீர் ஒருவர் போட்டு வந்தார். பச்சைக்

குழந்தை முதல் எல்லோரும் ஆபோஜன நீர் போடும் வரையில் இலையிலிருந் தெதையு மெடுத்துண்ணுமற் காத்திருந்தார்கள். ஆபோஜனம் போட்டபின் போஜனம் செய்யவேண்டுமென்பது பிராமணருக்குள் ஒரு விதியாதலால் எல்லோரும் தங்கள் வருணு சிரம நெறியை அநுசரித்துக் காத்திருந்தார்கள். ஆனுல் மாப் பிள்ளை மாத்திரம் நெய் பரிமாறியான நிமிஷமே தாமாகவே ஆபோஜனம் செய்துவிட்டு போஜனஞ் செய்யத் தொடங்கினுர். ஆரம்பித்தவர் மற்றவர்கள் காத்திருப்பதைக் கண்டு, "ஐயோ! முறை தப்பி இப்பிராம்மணர் கூட்டத்தில் முந்தி நாமாகவே ஆபோஜனம் செய்துவிட்டுப் போஜனஞ் செய்யத் தொடங்கி விட்டோமே! பார்ப்பவர்கள் பரிகாசமல்லவோ செய்வார்கள்; மறந்தல்லவோ போய்விட்டோம்" என்று மனத்தில் சிறிதச்ச முற்று, மற்றவரைப்போல இவரும் பின்னும் ஆபோஜனத்திற்குக் கையை நீட்டிக்கொண்டிருந்தார். என்ன செய்வார்! அவருக் குப் பிராமண சகவாசம் அதிகமாயில்லாமற் போனதாலும், தமது வீட்டிலோ அல்லது சோற்றுக் கடையிலோ ஒருதடவை தண்ணீரெடுத்துச் சுற்றிவிட்டுத் தாமே ஆபோஜனம் வாங்கிக் கொண்டு போஜனம் செய்யும் நீடித்த வழக்கத்தாலும் இங்கே அவர் இம்மாதிரி செய்துவிட்டார். இவரைக் கிருஷ்ணராய புரத்திலிருந்து வந்தவருள் ஒருவராகிய நீலகண்ட சாஸ்திரி என்பவர் பார்த்து "என்னடா! இப்படி எல்லோருக்கும் முந்தி ஆபோஜனம் வாங்கிக்கொண்டு உண்ணத் தொடங்கிப் பின்பு எல்லாரையும்போல ஆபோஜனத்திற்குக் கையை நீட்டிக்கொண் டிருக்கிறுன்! இவன் தன் நடையுடை பாவனையிலும் பிராமண னுகக் காணவில்லையே! இவன் சூத்திரனுக இருப்பானே என்று சந்தேகித்துப் பின்பு நமக்கென்ன வென்று வாய்பேசாமலிருந்து விட்டார். மாப்பிள்ளை மீசையை வைத்துக்கொண்டு அக்கூட்டத் திலொரு கருப்பண்ண சாமிபோல் விளங்குவதால், அநேகரவரைக் குறிப்பாகப் பார்த்துக்கொண்டும் சிலர் அவரைப்பற்றிக் கசுகசு என்று பேசிக்கொண்டும் இருந்தார்கள். ஆனுல் மேற்கண்ட நீலகண்ட சாஸ்திரிக்கு மாத்திரம் பக்கத்தில் விசாரித்தும் மாப் பிள்ளையைப்பற்றிய உண்மையெதுவும் கிடைக்கவில்லை. என்ன செய்வார்! இதற்குள் ஆபோஜனம் எல்லோருக்கும் போடப் பட்டது. பின் எல்லோரும் சேர்ந்தாற்போல் ஆபோஜனம் வாங்கிக்கொண்டு போஜனஞ் செய்யலாயினர். மாப்பிள்ளையும்

மற்றவரைப்போல ஆபோஜனம் வாங்கிக்கொண்டு போஜனஞ் செய்யத் தொடங்கினர். இவைகளை யெல்லாம் நீலகண்ட சாஸ்திரிகள் கண்கொட்டாமற் பார்த்து வந்தார். இன்னும் யாரேனும் இப்பொழுது கவனித்தார், கவனிக்கவில்லை என்பதை நாம் அறியோம். அதன்பின் சற்று நேரத்திற்கெல்லாம் ஒருவர் ஒரு தூக்குச் சட்டியில் ரஸமெடுத்துக்கொண்டு "மைசூர் ரஸம்! ஓய் மைசூர் ரஸம்" என்று இலைக்கிலை சொல்லிக்கொண்டே பரிமாறி வந்தார். இவர் பரிசாரகர் அல்லர். உமாமஹேசுவர ஐயருடைய தங்கை புத்திரன். இவர், உதவி செய்வதன்பொருட்டு ரஸமெடுத்துப் பரிமாற வந்தவர். இவர் மாப்பிள்ளை பக்கத்தில் உட்கார்ந்திருந்த தமது அத்தான் இலைக்குப் பரிமாறும்போது விளையாட்டாக "ஓய்! குருக்களே மைசூர் ரஸம்" என்று சொல்லி ரஸம் விட்டார். அவரும் வாய்பேசாமல் சிரித்துக் கொண்டே அந்நத்தைக் கலந்து புசித்தார். "ஓய் குருக்களே ரஸம்" என்ற சொற்கள் செவியிற்பட்டதும் நீலகண்ட சாஸ்திரி, இன்னாரைக் குருக்களென் றழைத்தாரென்பதைக் கவனியாததனால் முதலில் சூத்திரனோ என்பதாய்ச் சந்தேகித்த மாப்பிள்ளையைக் "குருக்கள் போலும், இவன்; அதனாலேதான் குருக்களென்றழைக்கப்பட்டான்" என்றெண்ணி உத்தரா போஜனம் வாங்கிக்கொண்டு "சீ! என்ன அயோக்கியத்தனம்! குலாசாரந் தவறிய குருக்களைப் பந்தியிலுட்கார வைத்திருக்கிறார்கள். நான் முன்பே சந்தேகங்கொண்டேன். அதற்கேற்ப உண்மையும் வெளிவந்து விட்டது. இப்படிக் கண்டவர்களைப் பந்தியில் வைத்துப் போஜனம் நடத்துவதாகத் தெரிந்திருந்தால் நான் இங்கே வந்திருக்கமாட்டேன்; உமாமகேசுவர ஐயனை ஒரு சத்பிராமணனென நினைத்து வந்தேன்" என்று படபடப்போடு சொல்லிக்கொண்டு இலையை விட்டெழுந்து விட்டார். அப்போது ஒரு மூலையில் பந்திவிசாரணை செய்துகொண்டிருந்த ஐயர் இருந்தாற்போலிருந்து பெருமழை பொழிவது போன்ற பேரிரைச்சலுண்டாகக் காரணமென்னவென்று திடுக்கிட்டு ஓடிவந்தார். அவரைக் கண்ட நீலகண்ட சாஸ்திரி "என்ன ஓய்! ஞானமில்லாமலொரு மீசைக்காரக் குருக்களைக் கொண்டுவந்து பந்தியில் உட்கார வைத்திருக்கின்றீர்? அறியாமல் நான் உமது கிருகத்திற்குப் போஜனம் செய்யவந்தேன்" என்று உரக்கச் சொல்லிக் கொண்டு நிலத்தில் விழுந்த நெல்லிக்காயாய்க் குதித்தார். இப்படி

நீலகண்ட சாஸ்திரி சொன்ன வார்த்தை மாப்பிள்ளை செவியில் ஈயத்தை உருக்கி வார்த்ததுபோலப் பாய்ந்தது. உடனே மாப்பிள்ளை தன்னைக் குருக்களென்று சொல்லி அவமானப்படுத்தினன் மடையனுகிய வைதிகப் பயலென்று போலீஸ் தடபுடலோடு இரைந்து கூவிக்கொண்டு இலையை விட்டெழுந்து நீலகண்ட சாஸ்திரியை அறையப் போனுர். இதற்குள் மற்ற சாஸ்திரிகளும் உறவினரும் ஊராரும் நீலகண்ட சாஸ்திரியை "ஒய் நீரொருவர் தாம் பிராமணரென நினைத்து விட்டீர்போலும்! மற்றவர்களெல்லோரும் குருக்களென்றெண்ணி விட்டீரோ? உம்மைப்போலொத்த நாங்கள் வாய்திறவாமல் போஜனம் செய்யும்போது உமக்கு மட்டுங் குருக்கள் வந்து குறுக்கே நின்ருனே? நீர் கெட்டீர்; நீரொரு பிராமணரா? என்ன ஒய்! உமக்கு ஏன் இவ்வளவு படபடப்பு? நீர் வேதாத்தியயனம் செய்ததன் பயன் இதுதான்போலிருக்கிறது? இதிருக்கட்டும்; குருக்களைப் பந்தியில் வைத்துவிட்டானென்று சொல்லிக் கோமாளிபோல் கூத்தாடுகிறீரே; எந்தச் சாஸ்திரத்தில் பிராமணர்கள் பந்தி போஜனஞ் செய்யும்பொழுது பாதியில் இலையை விட்டெழுந்திருக்க விதித்திருக்கிறது? இதைக் கவனித்தால் உம்மைப் பிராமணரென்று சொல்லுதல் கூடுமோ? உம்மிடத்துள்ள ஊழல் தெரியாமற் போனபோது பிறர்மேற் குற்றங்கூற முந்தியது வெட்கக் கேடாயிற்றே; உமாமஹேசுவர ஐயருடைய யோக்கியதையில் சதாம்சத்திலொன்று உமக்குண்டா? நீர் எப்பொழுது பந்தி போஜனம் செய்யும்பொழுது இலையைவிட் டெழுந்திருந்தீரோ, அப்போது நாங்களுமல்லவா இலையைவிட் டெழுந்திருக்க நேரிட்டது? உம்மால் அநேகம் பிராமணர்கள் போஜனஞ் செய்யாமல் எழுந்துவிட்டார்கள். இவ்வளவு ஜனங்களைப் பட்டினியோடிருக்கப் பண்ணிய பாபத்திற்கு நீரே பாத்திரமாகிறீர். நீர் இச்செய்கைக்கு முந்திப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும். ஐயருக்கு நேரிட்ட நஷ்டத்திற்கும், பாத்தியப்பட வேண்டும். இல்லாவிட்டால் உம்மை மதப் பிரஷ்டனுகக்கருதி ஒதுக்கி விடுவோம்" என்று சொல்லி, நீலகண்ட சாஸ்திரியைப் பிராயச்சித்தம் செய்துகொள்ள ஒப்புக்கொள்ளும்படி செய்தார்கள். ஐயரும் நீலகண்ட சாஸ்திரியைக் கடிந்து பேசிவிட்டார்; ஆனுல் தமது மாப்பிள்ளை குலாசாரந் தவறி நடப்பதற்கு வருந்தி மனத்திற் சிறிது அவமானமு மடைந்தார். மாப்பிள்ளையும் மிகவும்

வருத்தமடைந்ததோடு அவமானமும் அடைந்தார். இதைச்சொல்லவேண்டுமா? லக்ஷ்மியம்மாளிடம் அவளுடைய தோழிமார்களும் இன்னும் மற்றுமுள்ள ஸ்திரீகளும் மாப்பிள்ளையைக் குறித்துப் பலவாறு பேசியும் இகழ்ந்தும் போனார்கள். சில வைதிகரும் ஒருநாளைக்கு இரண்டு வேளைக்குமேல் போஜனம் செய்வதில்லை என்னுங் கொள்கையுடையவருந் தவிர ஏனையோர் யாவரும் மறுபடி வேறு இலைபோட்டு போஜனம் செய்தார்கள். நீலகண்ட சாஸ்திரியோ இனி இங்கு இருப்போமாயின் நம்மைச் சரிப்படுத்தி விடுவார்களென்றெண்ணி இருந்தவிடம் தெரியாமல் அந்த நிமிஷமே புறப்பட்டுத் தம்மூர் போய்ச்சேர்ந்தார். இவ்விதக் கூத்தோடு நான்கா நாள் கல்யாணம் முடிவுபெற்றது.

ஐந்தா நாள் காலையில் பந்து மித்திர ரனைவரும் தத்தம் ஊருக்குப்போக ஐயரிடம் விடைபெற்றுக் கொண்டனர். நற்குண சீலராகிய ஐயர், அவர்களுக்கு அன்போடு செலவுகொடுத்து வழியனுப்பிவிட்டு வந்தார். பின் மாப்பிள்ளையும் அப்பொழுதே ஊருக்குப் போகவேண்டுமென்று கூறிப் புறப்பட்டார். ஐயர், மாப்பிள்ளையைத் தனியே ஓரிடத்திற்கு அழைத்துப்போய் "மாப்பிள்ளே! நான் ஒரு விஷயம் உம்மிடத்திற் சொல்ல விரும்பியுள்ளேன்; அதைக்கேட்டு நடக்கவேண்டியது உமது கடமை, இன்றையதினம் நல்ல நாளாகவில்லை. குழந்தையை யழைத்துப் போவது கூடாது; நாளையதினம் போகலாம்"- என்று கூறினர்.

மாப்பிள்ளை.—இவையெல்லாம் கர்நாடகக் குருட்டுவழக்கம்! மேலும் எனக்கு லீவு கிடையாது. நாளைக்கு நான் டியூடியி (வேலையில்) லிருக்கவேண்டுமே என்ன செய்கிறது—என்றார்.

உமா.—மாப்பிள்ளே! என் பேச்சைத் தட்டாமல் நாளையொரு நாள் லீவுக்காக இன்றைக்கு ஒரு தந்தி உமது ஆபீசுக்கு அடித்து விடுங்கள்.—என்றார்.

மாப்பிள்ளை.—மாமா! நான் என்னவென்று தந்தியடிக்கக் கூடும்? நமது நெருங்கின உறவினரில் ஒருவர் இறந்து விட்டாரென்றாவது அல்லது மரணவஸ்தையி லிருக்கின்றாரென்றாவது அல்லது எனக்கு ஏதேனும் திடீரென்று ஓர் ஆபத்து நேர்ந்து விட்டதென்றாவது தான் தந்தியடிக்க வேண்டும்! அப்பொழுது தான் லீவு கிடைக்கும்! எந்த விதமாய் அடிக்கட்டும்; சொல்லும்—என்றார்.

உமா.—(தமக்குள்ளே) என்ன செய்கிறது? உத்தியோகத்தின் தன்மை இப்படியிருக்கின்றதென்றெண்ணி-"மாப்பிள்ளே; என் மாமனர் அசௌக்யமாய் இருக்கின்ருர்; அதனல் லீவு வேண்டுமென்றடியும்" என்ருர்.

மாப்பிள்ளே.—என்ன மாமா! நீர் பேசுவது 'உதட்டிற் புண் மாடு கறக்க முடியவில்லே' என்பது போலிருக்கின்றது! மாமனருக்கு அசௌக்கியமென்ருல் உனக்கு என்ன வந்துவிட்டது என்றல்லவோ குடைவான் மேலதிகாரி. அதற்குப் பதிற்சொல்வது யார்? வேறெவ்விதமும் கூடாத காரியம்; உங்களுக்காக ஒரு பெரும்பொய் இன்றையதினம் சொல்லவேண்டியதா யிருக்கின்றது—என்று ஒரு காகிதத்துண்டை யெடுத்து என் மனேவி மிகவும் அசௌக்யமா யிருப்பதால் நாளே ஒருநாளக்கு லீவு வேண்டுமென்றெழுதிக்கொடுத்து "அவசரத் தந்தி யடித்துவிட்டு வரும்படி செய்யும்" என்ருர்.

உமா.—மாப்பிள்ளே! என்ன எழுதினீர்?

மாப்பிள்ளே.—என்னவோ எழுதியிருக்கின்றேன். உங்களுக்குத்தான் உங்கள் காரியம் பெரிதே தவிர ஏதடா ஸர்க்கார் உத்தியோகத்தில் இருப்பவனுயிற்றே; அந்த வேலக்கு ஏதாவது ஹானி நேரிடும் பக்ஷத்தில் என்ன செய்கிறது என்கிற எண்ணமே கிடையாது; நான் வந்திருக்கப்படாது; என்பேரில் பிசகு; சரி சீக்கிரம் கொண்டுபோகச் சொல்லும்—என்று கோபக்குறியுடன் பதிற் சொன்னர். ஐயர், "இவனுடன் இந்த வேளே நாம் ஒன்றும் பேசுவது கூடாது" என்றெண்ணி, அக்கடிதத்தைக் கையில் வாங்கிக்கொண்டு வெளியே வந்து தந்தியடிக்க ஓர் ஆளே யனுப்பிவிட்டு உள்ளே போய்த் தன் மனேவி லக்ஷ்மியம்மாளேப்பார்த்து, "அடியே! மாப்பிள்ளே நாளே ஒரு நாள் லீவுக்குத் தந்தியடிக்கச் சொல்லி எழுதிக் கொடுத்துவிட்டான்; இந்த மட்டும் அவன் மனத்தைத் திருப்பப்பட்ட பாடு பகீரதப் பிரயத்தனமாய்விட்டது. காப்பியாயிற்ருே?" என்று கேட்டார்.

லக்ஷ்மியம்மாள்.—நான் முன்பே காப்பி கிஷாயம்போட்டு ஆறிக்கூடப் போய்விட்டது. என்ன செய்யட்டும், பால் வந்தால்லவா? தொந்திச்சுப்பனுத்திலே மாடு உதைத்துவிட்டதாம். இவ்வளவு காலமே எந்த மாடு கறக்கும்; அநியாயமாகவன்ருே இருக்கின்றது? இப்போதுதான் ஓர் அணு காசு கொடுத்துக்

குழந்தையை வேளாளத் தெருவுக்குத் துரத்தியிருக்கின்றேன்-என்றாள்.

உமா.—நான் எந்த இழவுக்கென்று நிற்பேன். காலமே ஐந்துமணி முதல் இதுவரையில் உன்னுடைய அற்புதமான மாப்பிள்ளையோடு என்னுடைய தொண்டைபோகக் கத்தி ஒரு வழிக்குக் கொண்டு வந்தேன். மணி ஆறரையாகப் போகிறது! காப்பி என்று கேட்ட உடனே கொடுக்காவிட்டால் உன் மாப்பிள்ளைக்கு மூக்குக்குமேல் கோபம் வந்துவிடுமே! எல்லாக் கோபத்தையும் விடக் காப்பியின் பொருட்டுண்டாகும் கோபம் காலாக்கினி ருத்திரனுடைய கோபத்திற்கு மேலானதாக வல்லவோ இருக்கும்? உப்புமாவாவது பண்ணியிருக்கின்றாயா? அதைக் கொண்டு போய் வை; தின்று தொலைக்கட்டும்; அதற்குள் பால் வந்து விடும், காய்ச்சா விட்டாலுந்தொலைகிறது; வந்தவுடனே கிஷாயத்தோடு கலந்து கொண்டுபோய் வை"—என்று சொல்லிப் பால்வந்து விட்டதோ வென்று புறக்கடைப்புறம் போய் வேளாளத் தெருவின் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தார்.

இப்போது, லக்ஷ்மியம்மாள், "மாப்பிள்ளை கோபமாக வல்லவோ இருக்கிறதாகக் கேள்விப்பட்டோம்; சீ! இப்போது நாம் அங்கே போவது கூடாது; குழந்தை ஜானகி கையில் உப்புமாவைக் கொடுத்து அனுப்புவோம்" என்று நினைத்தாள். பின் "முதல் முதலாக உப்புமாவைக் கொடுத்தனுப்புவது சரியல்ல" வென்று நினைத்து உப்புமாவோடு சிறிது திரட்டுப்பாலும் இரண்டு வெள்ளிப் பாத்திரத்தில் வைத்து திவ்யாபரண பூஷணலங்கிருதையாயிருந்த தன் பெண் ஜானகியை அழைத்து அவள் கையில் கொடுத்து "அம்மா ஜானகி! இதைக்கொண்டு போய் வீதிப்புறத்து அறையில் இருக்கிற உன்னுத்துக்காரருக்குக் கொடுத்துவிட்டு வா" என்றனுப்பினாள். ஜானகி அதைக் கையில் வாங்கிக்கொண்டு வெட்கப்பட்டுப் புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டு தலைகுனிந்த வண்ணத்தில் நின்று போகத் தயங்கினாள். லக்ஷ்மியம்மாள் ஜானகியைப் பார்த்து, "என்னடி! இப்போது தான் நாணமே! ஆம்புடையானென்றால் என்ன? பேயா! பிசாசா; சிங்கமா! புலியா! பயப்படுவாளோடி! நன்றாயிருக்கம்மா! ஆம்புடையானுக்கு உப்புமாக் கொண்டுபோய்க் கொடுத்தால் என்ன? ஏச்சா! வெட்கமென்னடி வந்தது? கொண்டு போய்க்கொடு" என்றாள். உடனே ஜானகி இரண்டு கைகளி

லும் இரண்டு பாத்திரத்தை யெடுத்துக்கொண்டு சந்திரபிம்பம் போன்ற முகத்திலிலங்கும் நீலோத்பலங்களாகிற இரண்டு நயனங்களும் பாதப்பெருவிரலை நோக்கப் பாதத்திலணிந்திருக்கும் ஆபரணங்கள் கல்கல் என்று ஒலியிட, பூமியதிரப் பாத மெடுத்து வைத்து நடப்போமாகில் பூமிதேவி மனம் வருந்துவாளென்றஞ்சியவள் போல அன்னத்தை யொத்து மெல்ல நடந்து, தன் நாயகனிருக்கும் அறைக்குப்போய்த் தன் கையிலிருந்த தின்பண்டங்களை அவர்க்கெதிரிலிருந்த மேஜையின் மேல் வைத்துவிட்டுச் சரேலென்று திரும்பி வந்துவிட்டாள். இதைக் கண்ட மாப்பிள்ளை "ஆ! இஃதென்ன! ஆகாயத்தில் தோன்றும் மின்னல்போல இங்கு என்னெதிர் தோன்றிப் பின் அம்மின்னல் போலவே இவள் மறைந்துவிட்டாள். என்னுருயிர்ச் செல்வி இன்றைக்குக் காப்பிகொண்டு வருவாளென்று நான் எண்ணவில்லையே!"—என்று வியப்படைந்து காப்பிக்கு நாழிகையாய் விட்டதனால் உண்டான கோபத்தையும் மறந்து, பெருமகிழ்ச்சியோடு தன் முன்னிருந்த மேஜையைப் பார்த்தார். உடனே, "ஓகோ! இன்னும் காப்பி கொண்டுவரக் காணோம். ஒருவேளை நமதாருயிர்த் துணைவியே காப்பிகொண்டு வரவுங் கூடும்; அப்பொழுது பார்த்தருகிலழைத்துப் பேசுவோம்" என்று நினைத்துத் தம் எண்ணமுழுதும் ஜானகியிடத்திற் செலுத்தி வெட்டுண்ட மரம்போலச் சாய்ந்த நாற்காலியிலே படுத்துக்கிடந்தார். —இப்பொழுது மூச்சு மாத்திரம் ஓடிக்கொண்டிருந்தது அவருக்கு.

இங்கிப்படி யிருக்கப் பின் சற்று நேரத்திற்கெல்லாம் உமா மகேசுவர ஐயரும் சந்திரசேகர ஜடாவல்லவரும் பாலோடு உள்ளே வந்தார்கள். உடனே லக்ஷ்மியம்மாள் அப்பாலை வாங்கி கிஷாயத்தோடு கலந்து ஒரு வெள்ளி டம்ளரில் விட்டுத் தன் பெண் ஜானகியிடம் கொடுத்தனுப்பினாள். ஜானகி காப்பியுடன் மேஜையருகில் வந்ததும் காப்பியை அன்போடு அவள் கரத்திலிருந்து வாங்கி எழுந்து சூப்பி ஓர் உறிஞ்சு உறிஞ்சிவிட்டுப் பின் படுத்து ஜானகியைப் பார்த்து உடனே எழுந்து குனிந்து பின்னும் உறிஞ்சி வாய் நிறையக்காப்பியை வைத்துக்கொண்டு படுத்தார். அவர் சூப்பிக் குடிப்பதைக் கண்டு வியப்புற்ற ஜானகி சிறுநகை கொண்டாள். அவள் நகைக்கவே, மாப்பிள்ளையும் குப்பென்று நகைத்தார். அப்பொழுது அவர் வாயிலிருந்த காப்பி ஜானகியின் முகத்திலே சந்தணத்தை வாரித் தெளித்தது

போல விழுந்தது. ஜானகி உடனே முகத்தைத் துடைத்துக் கொண்டு அங்கிருந்து வெளியே போய்விட்டாள்.

ஜானகி யவ்வாறு அங்கிருந்து நீங்கியதும் மாப்பிள்ளைக்குக் கோபம் மூக்குக்குமேலே வந்து தோன்றிற்று. அந்தக் கோபம் எப்படித் தோன்றியதோ அப்படியே இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் பலவீனனுடைய சௌரியம்போல் அடங்கியது. எடுப்பாரும் பிடிப்பாரு மிருந்தாலன்றோ பிள்ளை தாண்டிக் குதிக்கும்? இவர் கோபங்கொண்டால் அதனால் இச்சமயம் என்ன செய்ய முடியும்?—அது வீண் அவமானத்தை யல்லவா கொடுக்கும்? இதற்குப்பயன் இதுதானென நெஞ்சமறிந்ததும் கோபமடங்கியது. அடங்கவே, உள்ளத்திலே எண்ணங்கள் பல பல தோன்றின—

"இப்பெண்ணுக்கு வயது பதின்மூன்றுக்கு மேலாகிறது. ஆயும் இப்பெண் தன் கணவனிடம் நடந்துகொள்ளவேண்டியதைத் தெரிந்து கொள்ளவில்லையே! புருஷன் வாயிலிருந்து காப்பி விழுந்தால் அதற்காக அவனிருக்கும் அறையைவிட்டு ஓடுவதா?—சீ! பெற்றோர்க்கிருக்கவேண்டும் அறிவு! சோற்றைப்போட்டு ஆடுமாடு வளர்ப்பதுபோல் பெண்ணை வளர்த்திருக்கின்றார்கள். இந்தப் பெண் நம்மிடம் வந்து எப்படிக் குடித்தனஞ் செய்யப்போகிறது?"........என்று எண்ணினார். இப்பொழுது இவர் செவியில் யாரோ தேம்பித் தேம்பி யழும் ஓசை விழுந்தது. உடனே, "ஏன் அழுகின்றாய்? உன் ஆத்துக்காரர் அடித்தாரா? திட்டினாரா?—என்னோடு சொல்லேன்"— என்று லக்ஷ்மியம்மாள் கேட்பதும் செவியிற்பட்டது. இதைக் கேட்டதும் மாப்பிள்ளை "இதென்ன கூத்து! அழுகைவேறு லக்ஷணமா? நன்றாயிருக்கின்றது நான் மனைவி படைத்த அழகு! காப்பியையுமிழ்ந்துவிட்டார் முகத்திலே மாப்பிள்ளை—என்று சொன்னாலும் சொல்லுவாள்—கேட்கின்றேன் செவிகொடுத்து" என்று நினைத்து மறுபடியும் செவிசாய்த்துக் கேட்டார். ஜானகி மூக்கைப் பலமாக உறிஞ்சிக்கொண்டு அழும் ஓசை செவியிற்பட்டது, லக்ஷ்மியம்மாள், "சொல்லாமல் அழுதுகொண்டிருந்தால் நானென்ன செய்யட்டும்? சொல்லித் தொலையேன் நடந்ததை! கழுதைக்கு ஆவதுபோல் வயதானதற்கு அழுவதற்காவது தெரிகின்றதே! போதும் போ"........என்று கூறுவதும் செவிக் கெட்டியது. மாப்பிள்ளை, "போகட்டும், சொல்லி மானத்தைக்

கெடுக்காமல், சொல்லாமல் அழுகின்றாளே! அதொரு சாமர்த்தியந்தான்—இருந்தாலும் இப்பெண்ணை நாமிப்போதழைத்துப் போவதைவிட ஓர் எருமையை யழைத்துப் போனாலும் பால் கறக்கும்.'' என்றெண்ணி வெறுத்தார்.

இச்சமயம் ஜடாவல்லவர் தெருவிலிருந்து வந்து அவ்வறைக்குள் ஞான சூரியன் போலப் பிரவேசித்தார். அவரைக் கண்டதும் மாப்பிள்ளை, உட்காரும்படி சொன்னார். ஜடாவல்லவர் அங்கிருந்த ஒரு சிறு நாற்காலியிலுட்கார்ந்தார். மாப்பிள்ளை, "அடே அப்பா! உன் தங்கையின் சமத்தைக் கவனி'' என்றார். ஜடாவல்லவர் புன் முறுவலுடன், "அதற்குள் சமத்தும் அசடும் விளங்கிவிட்டனவா?''—என்றார். மாப்பிள்ளை, "சற்று உற்றுக் கேள், உன் தங்கை மூக்கை உறிஞ்சிக் கொண்டழுவதை! இதிலேயே சமத்து விளங்கு முனக்கு!''—என்றார். ஜடாவல்லவர், உற்றுக் கேட்டு "ஏன் அழுகின்றாள், காரணம் என்ன?'' என்று கேட்டார். மாப்பிள்ளை "நீயே விசாரித்துக்கொள் — நான் அந்தச் சமத்தை என் வாயினாலே சொல்லமாட்டேன்'' என்றார். ஜடாவல்லவர், "விசாரித்துவிட்டு வருகின்றேன்'' என்று வெளியே செல்ல உடனே "மாப்பிள்ளே! மாப்பிள்ளே''........ என்று ஐயர் அழைக்கும் சத்தங்கேட்டது. மாப்பிள்ளை வெளியே வந்தார்; இங்கே ஐயரும் அவர் அருகே ஒரு பெரியவரும் வீற்றிருக்கக் கண்டார்.

பெரியவர்க்கு வயது எண்பதிற்கு மேலிருக்கும். அவர் நல்ல சிவப்பானதினால் தேகம் வயதாயும் பார்வைக்கு மனோகரமாக இருக்கின்றது. தேகப் பயிற்சியிலோ உழைப்பிலோ மிகுந்த சிரத்தை யெடுத்துக் கொண்டவரென்று அறிஞர் ஊகிக்க முகத்திலே நல்லகளையும் அவர் ஒரு பேரறிஞர் என்பதை விளக்கும் குறிப்பும் பிரகாசிக்கின்றன. இவர் அருகிலிருந்த ஐயர், மாப்பிள்ளை வெளியே வந்ததும் "இவர் தாம் ஜானகியின் ஆத்துக்காரர்,'' என்றார். இப்போது மாப்பிள்ளை வேஷ்டியைத் தட்டுச் சுத்தாக உடுத்துக் கொண்டிருக்கின்றார். உடலில் ஒரு வெள்ளை ஷர்ட் போட்டுக் கொண்டிருக்கின்றார். கத்தரித்து விட்டிருக்கும் தலைமயிர் குதிரைக்குத் தொங்குவது போல் முகத்தை மூடிக் கொண்டு தொங்குகின்றது. மீசையும் பாதி முகத்தை மூடிக் கொண்டிருக்கின்றது. இப்படி அதியற்புதமாக வெளியே வந்த மாப்பிள்ளையைப் பார்த்து ஐயர் "பெரியவர்களுக்கு நமஸ்காரம்

செய்யட்டும்'' என்றார். மாப்பிள்ளை தம்முடைய ஆறடி யுயர் உடலும் ஒரே வளைவாக வளையக் குனிந்து நிலத்தைத்தொட்டு எழுந்தார். குனிந்தவுடன் அவருடைய சட்டைப் பையிலிருந்து ஓரணுக்காசும் வெள்ளைச் சுருட்டிரண்டும் ஒரு நெருப்புப் பெட்டியும் விழுந்தன. மாப்பிள்ளை தமது *சர்மாக்கூட சொல்லாமல் விழுந்த அரிய வஸ்துக்களைப் பொறுக்கிக் கொண்டு தக்ஷணமே மாயமாக மறைந்துவிட்டார். அப்படி விழுந்த வஸ்துக்களைப் பார்த்துவிட்டமையால், பெரியவர் 'சிவ சிவா'! என்றனர்; ஐயர் சடகோபம் சாத்துஞ் சமயத்திலே வைஷ்ணவ பக்தர்கள் குனிவதுபோலத் தலைகுனிந்து விட்டார். வெட்கம் அவரை ஒரே அழுத்தாக அழுத்தினமையின் அவர் ஒரு பத்து நிமிஷம் வரையில் தலைநிமிர்ந்து பார்க்கவேயில்லை. அவர் கண்களிலிருந்து நீர்த்துளிகள் விழுந்தன. அது கண்ட பெரியவர், "என்ன செய்யலாம், இனி வருந்துவதால் யாது பயன்? ஆசாரசீலராகிய உமக்குப் பிறந்த பெண்ணுக்கு அப்படிப்பட்ட நாயகன் வாய்த்தது பெரும் வியப்பேயாம்; நாமாகச் செய்து கொள்வதல்ல இவை யெல்லாம்; அவரவர் வினைக்கேற்ப வந்து சம்பவிப்பவைகள். அதைப்பற்றி வருந்துவது வீண். தாமுணராத நியாயமல்ல. ஆயுள் வரையில் அநாசாரனாக இருந்து விடுவான் என்பதற்கில்லை. இடையே மாறவுங் கூடும். குழந்தை ஜானகி புக்ககத்திற்குப் போன சிலநாளைக்கெல்லாம் நல்ல வழிக்குத் திரும்பிவிடுவான். என்ன செய்வது? படிப்பும் அதிகமாக இல்லை; நல்லோர் பழக்கமுமில்லை. தாய் தந்தையரில்லாத தறுதலையாகவு மிருந்திருக்கின்றான். இவன் குணமும் உடையும் ரூபமும் இப்படி மாறியிருப்பதோர் அதிசயமா? இந்தக் காலத்திலே இன்னும் என்னென்னவோ ஆச்சரியகரமான நாகரிகங்களெல்லாம் புதிது புதிதாக மனிதனை யடைந்து ஆட்டிவைப்பதைத் தாம் பார்த்ததில்லையா? காலத்தின் இயல்பின்படி உலகம் செல்கின்றது''—என்று கூற, ஐயர் நிமிர்ந்து பார்த்து மெதுவாக "என் குலமழிந்தது! ஒரு பெண் கெடுவாளாயின் அவள் தான் பிறந்த குலத்தையும் புகுந்த குலத்தையும் அழிப்பவளாகின்றாள். புருஷன் அநாசாரனாக இருக்கும்போது மனைவியும் அதை யநுஸரிப்பவளாகின்றாள். அநாசாரம் தீமைக்குட்படுத்துமென்பது திண்ணம். சுவாமி! என் விதி யிப்படியுமிருக்குமா?'' என்று ஒரு பரம

* பெயர்.

பக்தன், ஈசுவரனிடம் கண்ணீருடன் மன்னிப்புக்கேட்பதுபோலச் சொல்லிவருந்தினர். அதைக்கேட்ட பெரியவர், இதற்கேன்வருந்த வேண்டும்........எல்லாம் வல்ல அவன் செயலை யாரால் தடுக்க முடியும்? நெருப்பைக் கண்டபோது சுடுமே யென அஞ்சி விலகுவது போலப் பாபச்செய்கைகளைக் கண்டபோதும் நாம் அஞ்சி விலகவேண்டும்; அதுதான் நாம் நமது அறிவால் செய்துகொள்ளத் தக்கது. பிறகு அவன் விட்ட வழிதான். எழுந்து உமது காரியத்தைக் கவனியும்: நான் போய் வருகின்றேன்; நேரமாயிற்று—" என்று கூறி யெழுந்து விடைபெற்றார். ஐயர் பெரியவர்க்கு விடைதந்து தெரு வரையிலே போய் முறைப்படி வழியனுப்பிவிட்டுத் திரும்பித் தமது வேலையைக் கவனிக்கலாயினர். அவர்க்கு அவர் தாம் மேற்கொண்ட அலுவல்களெதிலும் கவனஞ்செல்லவேயில்லை. கிழவயது வந்தவிடத்து உலகவியல்பு அறியாதவனை மரண சிந்தனை யடிக்கடி வந்து பாதிப்பது போல ஐயரை மாப்பிள்ளையின் அநாசாரம் பாதிக்கத் தொடங்கியது. என்ன செய்வார் பாபம் ஐயர்! "பாபஞ் செய்தவனைப் பயம் வந்து பாதிக்கும்—என்பார் அறிஞர். அது போல நாம் செய்த பாபத்திற்காக இந்த வாதனை ஏற்பட்டுள்ளது போலும்—சகித்திருப்போம்"...என்று சகித்துக் கொண்டிருந்தார். உண்மை விளக்க முடையவருடைய மனம் கஷ்டத்தைச் சகித்துக்கொண்டு தானடைந்த பிறவி பயன்பெறும் வழியிலே நிற்குமென்பது பெரியார் அநுபவ மொழியல்லவா? "பிறரால் ஏற்படும் அவமதிப்பையும் பரிஹாசத்தையும் துன்பத்தையும் தொல்லையையும் பொறுத்திருப்பவனே ஸாதுவாகின்றான்: அவனே ஆத்மாவைக் கரைசேற்றுகின்றான்"—என்று பாகவதம கூறுவதுங் காண்க.

இப்படி ஐயரின் நெஞ்சம் கவலையில் மூழ்க, மாப்பிள்ளையின் நெஞ்சம் மகிழ்ந்ததோ வெனில் அவர் நெஞ்சமும் கவலையிலாழ்ந்தது. மாப்பிள்ளை பெரியவர்க்கு நமஸ்காரம் செய்து அகன்றதும் சாய்ந்த நாற்காலியிலே வெட்டுண்ட மரம்போலச் சாய்ந்து "மூடர்கள்! இவர்களோடு பழகுவது வெகு கஷ்டம்!—ஏதோ கூப்பிடுகின்றாரே என்று விரைவிலெழுந்து சென்றேன். பெரியவர் வந்திருக்கின்றார் பார்க்க விரும்புகின்றார்—என்று முன்னாலறிவித்துப் பிறகு அழைத்துச் சென்றிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? நாகரிகமும் பிரபுக்களிடத்துப் பழக்கமும் பெறாதவர்களாகிய இவர்கட்கு அந்தப் பெரிய புத்தி எப்படி ஏற்படப்

போகிறது? பூனையினிடத்துப் புனுகு பூனையினிடத்திலுண்டா கும் புனுகு எப்படிப் பெறப்படும்? கணவனைக்கண்டு பெண் அழுது கொண்டு போகின்றாள்! அவளைப்பெற்ற அப்பன் அநாகரிகனாக விளங்குகின்றான். இவர்களைவிட்டு நாம் விரைவிலே விலகவேண் டும்''—என்று எண்ணிக்கொண்டு படுத்துக்கொண்டிருந்தார். தம் முடைய அறிவீனத்தை உணராதவர்கள், பிறரிடங் காணும் நற் குணங்களை யெப்படிக் காண்பார்கள்? அல்லாமலும் ஊருக்குத் தக்கவாறு வேஷமும் செயலும் பேச்சும் கொள்ளவேண்டு மென் பதை அறியாதவர்கட்கு மானத்தை யெப்படிக் காக்கமுடியும்?—

மாப்பிள்ளை இப்படிப்பட்ட எண்ணங்களாகிய அலைகளுடன் கூடிய மனமாகிய கடலிலே வீழ்ந்து தத்தளிக்கும் சமயத்தில் ஜடாவல்லவர் வந்து “மாப்பிள்ளே! என்ன செய்கிறீர்கள்?” என்று கேட்டார். அவர் பேச்சு செவியில் விழுந்ததும் மாப் பிள்ளை திடுக்கிட்டுப் பார்த்து, “ஏன் சும்மா தானிருக்கின்றேன்” என்றார். இப்பொழுது ஸந்தோஷமென்கிற சாகரத்திலே மூழ்கி யெழுந்தவர்போல் ஜடாவல்லவர் முகமலர்ச்சியுட னிருக்கின்றார். மாப்பிள்ளை சித்த சுவாதீனமில்லாத பித்தனைப்போல் முகவொளி மழுங்கி யிருக்கின்றார். ஜடாவல்லவர், மாப்பிள்ளையின் அப்படிப் பட்ட முகத்தைக் கண்டதும் மனத்திலே “என்ன இழவு சதா காலமும் நோயாளியைப்போ லிருக்கின்றான்” என்றெண்ணி “மாப்பிள்ளே தெருவில் ஜமீன்தார் மானேஜர் வந்திருக்கின்றார். தங்களைப் பார்க்க வேண்டுமென்று சொல்லுகின்றார்” என்றார். மாப்பிள்ளை, கோபத்துடன், “ஒருவனைப் பார்க்க வேண்டுமென் றால் அவன் சமயந் தெரிந்துகொள்ள வேண்டாமா? நினைத்த போது நினைத்தபடி வந்தழைக்கலாமா? நான் என்ன எப்பொழு தும் அலங்காரத்தோடிருக்கும் ஓர் உயிருள்ள பொம்மையா? நன்றாயிருக்கிறது! இப்போது பார்க்கச் சமயமில்லை; பகல் மூன்று மணிக்குமேல் மூன்றேகால் மணிக்குள் வந்தால் பார்க்க முடியுமென்று சொல்லிவிடு;: உன் அப்பாவினுடைய முன் எச்ச ரிக்கை யில்லாமல் ஒரு பெரியவரை இப்போது வந்து பார்த்து அவமான மடைந்தேன்—உங்களால் வெகுமானம் இல்லாவிட்டா லும் அவமானமேனும் ஏற்படுகிறதே அது போதும்!”—என்று மறுமொழி கூறினார். இதைக் கேட்டதும் ஜடாவல்லவர், “இதென்ன கூத்து” என்றெண்ணி, மறுபடியும் அவரை நோக்கி, “மாப்பிள்ளே! ஓர் ஐந்து நிமிஷநேரம் பேசிவிட்டு வந்து படுத்

துக்கொள்ளும்! இவர் ஊருக்குப் பெரிய மனிதர்; நீர் நிறைந்த கிணறு போன்றவர். நமக்கு மிகவும் வேண்டியவர்; உபகாரி; இவரால் நமக்கு அநேக காரியங்கள் அநுகூலப்பட்டிருக்கின்றன. இவரைப் பகல் மூன்று மணிக்கு வாவென்று கூறியனுப்புவது மரியாதையல்ல '—என்றார். மாப்பிள்ளை, " சந்திரசேகரா, உனக்குக்கூட புத்தியில்லையே! சௌகரிய மில்லாத வேளையிலே வந்து தொந்தரவு செய்கின்றாயே!—இப்பொழுது அவர் தூங்குகின்றார் என்று சொல்லியனுப்பு" என்றார். ஜடாவல்லவர், " அவர்களிடம் நாமிப்படிச் சொல்லப்படாது; அவர் வீட்டுக்கு நாம்போய் அவரைப் பார்க்கவேண்டும்; அவரே பார்க்கவிரும்பி வந்திருக்கும்போது இப்படிச் சொல்வது மரியாதையல்ல; தவிர இப்போது மாப்பிள்ளை தூங்குகின்றார் என்றால் அது பரிஹாசத்திற் கிடமாகும்"—என்றார். மாப்பிள்ளை, "ஆனால் நான் சரியானபடி டிரஸ் (Dress) பண்ணிக்கொண்டுதான் அவரைப் பார்ப்பேன். பார்க்க இரண்டு மணி நேரமாகும். அது வரையிலே அவர் காத்திருப்பாரா?"—என்று கேட்டார். ஜடாவல்லவர், " சரி, அப்படியா? அப்படிக் காத்திருக்கும்படி செய்வது கூடாது. நான் ஏதாவது சாக்குச் சொல்லி யனுப்பிவிடுகின்றேன்" என்று சொல்லி அவரிருந்த அறையைவிட்டு வெளிப்பட்டு " சி! என்ன ஜன்மம்! ஊருக்குத் தகுந்தபடி நடக்கவேண்டுமென்னும் மதியில்லையே! இவர் உத்தியோகத்திலிருந்து பேசுவதுபோலப் பேசுகின்றாரே! அடக்கமும் அருளும் உலகத்திலே பெருமைதரு மென்பதை உணரவில்லையே" என்றெண்ணிக் கொண்டு இரண்டடி யெடுத்து வைத்தார். இப்பொழுது மாப்பிள்ளை " சந்திரசேகரா!" என்று கூப்பிட்டுக்கொண்டு வெளியே வந்து "இரு: இதோ வருகின்றேன்; உன் விருப்பத்தைக் கெடுப்பானேன்"—என்று கூறி உள்ளே போய்த் தமது பெட்டியைத் திறந்து வேறு உடை தரித்துக்கொண்டு உடையிலும் கைக்குட்டையிலும் வாசனையைத் தெளித்துக்கொண்டு புறப்பட்டு வெளி வந்து " வா போவோம்"—என்றார். ஜடாவல்லவர், " ஓ நன்றாயிருக்கின்றது! மாப்பிள்ளை யென்றால் வாசனை வீசும் போலும்! அதற்குள்ளாக எப்படி வாசனை கட்டிக்கொண்டீர் தேகத்திற்கு?"—என்று கூறி வியந்தனர். மாப்பிள்ளை " எல்லாம் உனக்காகத்தான்; உங்கள் வீட்டு மாப்பிள்ளையிடம் வாசனை வீசினால் உனக்குக் கௌரவமல்லவா அது?" என்றார்.

இப்படிப் பேசிக்கொண்டு இருவரும் வீட்டிற்கு வெளியே வந்ததும் திண்ணையில் உட்கார்ந்திருந்த மானேஜருக்கு ஜடாவல்லவர் மாப்பிள்ளையைத் தெரிவித்தார். மாப்பிள்ளை உடனே ஸலாம் செய்து அங்கே உட்கார்ந்தார். மானேஜர் ஸலாத்துக்குப் பதிலாக 'நமஸ்காரம்' என்றனர்.

பின்னர், பேசத் தொடங்கி மானேஜரும் மாப்பிள்ளையும் பலபல பேச்சுக்கள் பேசி வந்தனர். மாப்பிள்ளை இடை இடையே ஆங்கிலச் சொற்கள் கலந்து கலந்து பேசினமையால் மானேஜர் சில பேச்சுக்களைச் சரியே யறிந்துகொள்ள மாட்டாமல் விடை கொடுப்பதிலே தடுமாறினர். இவற்றைப் பார்த்துக்கொண்டிருந்த ஜடாவல்லவர், "மாப்பிள்ளே! நீங்கள் இங்கிலீஷ் வார்த்தைகள் கலவாமற் பேசவேண்டும்; அப்பொழுதுதான் மானேஜர் நன்றாய்த் தெரிந்துகொள்வார்"—என்று ஒரு பேச்சினல் குறிப்பிட்டார். மாப்பிள்ளை, "அப்படிப்பேச எனக்கு வராது, இருப்பினும் Try பண்ணி (முயற்சித்து)ப் பார்க்கின்றேன்"—என்று கூறினர். உடனே ஜடாவல்லவர் குப் என்று சிரித்தார். மானேஜர், "அவர் என்ன செய்வார்! வழக்கத்திலே வந்துவிட்டதை மாற்ற முடியுமோ?"—என்று கூறிச் சற்று நேரம் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்து விட்டுப் பிரிந்தார். பிரியும்போது மாப்பிள்ளை ஸலாம் செய்து கைகுலுக்கக் கை கொடுத்தார். மானேஜர் ஸலாத்துக்குக் கும்பிடு போட்டார். ஆனல் கைகொடுக்கவில்லை. அவர்க்கு அவ்வழக்கமில்லையாதலால் "ஆகா போய் வருகின்றேன்" என்று கூறிவிட்டுப் போய் விட்டார்.

அவர் சென்றதும் மாப்பிள்ளை ஜடாவல்லவரை நோக்கி, "வா வாய்க்கால் வரையிலே போய்வருவோம்"? என்று அழைத்தார். ஜடாவல்லவர் சம்மதித்தெழுந்தார். இருவரும் பேசிக்கொண்டே வாய்க்காலுக்குச் சென்றார்கள்.

மாப்பிள்ளை, "சந்திரசேகரா, மானேஜரா இவன்? பேசத் தெரியவில்லையே! அது போகட்டும்; மரியாதைதான் தெரிகின்றதா? கைகுலுக்கக் கை கொடுக்கின்றேன், கைகொடுக்காமல் மரம்போல் நிற்கின்றான்! சீ! இப்படிப்பட்டவர்களிடம் என்னையேன் கொண்டுவந்து விடுகின்றாய்?" என்று கேட்டார். ஜடாவல்லவர் "இவ்வூர் வழக்கம் வேறு; கைகுலுக்கும் வழக்கம் இங்கே கிடையாது; அதனல் அவர் கைகொடுக்கவில்லை. அவர்

அநேகம் பேருக்குக் கைகொடுக்கத்தக்க பிரபு ; கொடுத்துமிருக்கின்றார் ; கொடுக்கின்றார் ; இல்லை யென்பவர்க்கு இல்லையென்னாமல் வெறுக்கை வழங்கும் விவேகசீலர். அவரைப்பற்றி அப்படி நினைப்பது கூடாது. அல்லாமலும் இப்போது அவர் ஸ்நானஞ் செய்து மடியுடுத்துக் கொண்டிருக்கின்றார். இனிப் பூஜைசெய்து போஜனம் செய்பவராதலின், ஒருவரையும் அவர் அதனிடையே தீண்டார். அவரிடத்தில் புறத்தூய்மையும் அகத்தூய்மையுமுண்டு. நீர் உமதுடைக்கும் உமக்கும் வாசனை யூட்டிக்கொண்டு புறப்பட்டதை அவர் வெறுப்பார் ; இப்படிப்பட்ட வாசனையையும் ஆடையையும் வெளித்தோற்றத்தையுங் கண்டு அவர் மயங்கார் ; பிறருடைய உள்ளங்கண்டு அதற்குத் தக்கவாறு நடப்பார்" என்று இன்னும் பேசத் தொடங்குகையில், மாப்பிள்ளை "சந்திரசேகரா ! உன் இராமாயணத்தை நிறுத்து. உனக்கும் உங்களூருக்கும் உலகந்தெரியாது. நீங்கள் கிணற்றுத் தவளைகள். இப்படிக் காலையில் முழுகித் திருநீறோ திருமண் காப்போ அணிந்துகொண்டு மடி கொண்டாடி உலகை ஏமாற்றுகிறவர்களில் எத்தனையோ பேரை நான் கண்டுபிடித்துச் சிறைப்படுத்தித் தண்டனைக்குள்ளாக்கி யிருக்கின்றேன் ; தெரியுமா ? அவையெல்லாம் இப்போது பேசின் உனக்கு விளங்கமாட்டா !—கேள்—ஊர்வம்பேன் ! நீங்கள் கிணற்றுத் தவளைகளாகவிருப்பதுபோல் உன் தங்கையையும் கிணற்றுத் தவளையாகத்தான் வைத்திருக்கின்றாய் ! பதின்மூன்று வயதாகிறதல்லவா உன் தங்கைக்கு ? புருஷனிடத்திலே நடக்கவேண்டிய மரியாதை அவளுக்குத் தெரியவில்லையே ! கூப்பிடுமுன் அழுதுகொண்டோடுகின்றாளே ; மாடு வளர்ப்பதுபோல் வளர்த்துப் புருஷனிடம் தள்ளிவிடுவதுதான் பெற்றோர்கள் பெண்களுக்குச் செய்யவேண்டிய கடன்போலிருக்கிறது? உன் தங்கைக்கு என் எண்ணம் பிடிபட்டு அதன்படி நடக்கக் குறைந்தது வருஷமொன்றாகும். இருக்கட்டும் ; ஆண் பெண் இருவகுப்பாருக்கும் கல்வியவசியமெனக் கருதிப் பாடுபடும் இக்காலத்தில் இவ்வூரினர் அதைப் பற்றிச் சிறிதுஞ் சிந்தியாதிருப்பது என்ன மூடத்தனம்? உன் தங்கைக்குப் போதுமான படிப்பில்லை ; ஏதோ தமிழில் கொஞ்சம் உளறுகின்றாள் ; பாட்டுங் கர்நாடக ராகத்திலே பாடுகின்றாள் ; நல்ல சிக்ஷை கிடையாது. குரலிருக்கின்றது ! என்ன செய்யலாம். பெரியவர்கள் கர்நாடகக் குருட்டு வழக்கத்தைக் கட்டிக்

கொண்டு காலவேற்றுமை யுணராதவர்களாயிருந்தால் அவர்கள் வளர்க்கும் பெண்கள் எப்படியிருப்பார்கள்? நிலத்தியல்பிற் கேற்றபடி தானே வித்தும் முளைத்து விருத்தியாகும்? என் அதிகாரத்திற்கும் என் அந்தஸ்திற்கும் ஏற்ற மனைவியல்ல உன் தங்கை! நாட்டுப்புறத்திலிருந்து எவன் மணந்து கொண்டுகின்றானோ அவனுக்கு வாழ்க்கைப்படத் தகுதியுடையவள்!—பன்றி பல குட்டி பெறுவதுபோல் பெண்ணைப் பிள்ளையைப் பெற்றென்ன பலன்? அக்குழந்தைகளை நல்ல நடிவடிக்கையிலும் அறிவிலுஞ் சிறக்கும் வழியிலே பழக்குவதல்லவா அறிவறிந்த பெரியவர்க்கழகு?—இதை நினைத்தால் எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கின்றது. இப்போது நினைத்தால் பத்திரிகையில் ஒரு விளம்பரஞ் செய்து எனக்கும் என் அந்தஸ்திற்கும் ஏற்ற மனைவியை நானடைவேன்! அதில் விருப்பமில்லை. உன் குணத்திற்கும் உன் தந்தை குணத்திற்கும் என் மனம் கட்டுப்பட்டிருக்கிறது. இருக்கட்டும், நான் இப்போது உன் தங்கையை அழைத்துப்போகமாட்டேன்! அவளுக்கு நன்றாய் வாசிக்கவும் பாடவும் தெரியவேண்டும். அப்படித் தெரிந்தபிறகுதான் அழைத்துச் செல்வேன். அதற்காக எத்தனை வருஷம் சென்றாலும் சரி; இப்போதிருக்கிற நிலைமையில் நானிவளை அழைத்துச் சென்றால் நான் என் நண்பர்களிடம் அவமானம் அடைவேன். முதலாவது உன் தங்கைக்குத் துணியைச் சரியாக உடுக்கத் தெரியவில்லை. ஒரு மூட்டை கொசவம் பின்னே தொங்குகிறது! சீ;—கோபங் கொள்ளாதே! திருந்த வேண்டும் என்கிற பரிதாபமேலிட்டுச் சொன்னேன்" என்று சொற்களைக் கல்மாரிபோலப் பொழிந்து இடியிடித் தற்கொப்பான தொனியுடன் பேசி முடித்தார்.

இதற்குள் வாய்க்காலுக்கு இருவரும் வந்து சேர்ந்தனர். ஜடாவல்லவர், மாப்பிள்ளையின் பேச்சாகிய கல்மாரியிலே அகப்பட்டுக்கொண்டமையால் தமது வாயைத் திறவாமல் கேட்டுக்கொண்டே வந்தார். வாய்க்காலைக் கடந்துசெல்ல ஒரு பாலமுண்டிங்கே. இவர்களிருவரும் அந்தப் பாலத்தின்மீதுட்கார்ந்தனர். அப்பொழுது ஜடாவல்லவர், "இவனுக்கு நாம் புத்தி சொன்னால் குரங்குக்குப்புத்தி சொல்லிய தூக்கணாங்குருவியின் கதி நமக்குக் கிடைக்கும்—ஆகையினால் இப்போது இவனை யநுஸரித்துத்தான் பேசவேண்டும்"—என்று கருதி, "மாப்பிள்ளே பெண்களுக்குக் கல்வியும் ஸங்கீத ஞானமும் வேண்டியது அவசியந்தானே?"

—என்று மெதுவாய்க் கேட்டார். மாப்பிள்ளை, "சந்திரசேகரா, நீ கூட ஆலோசனை யென்பதில்லாமற் பேசுகின்றாயே! படித்த ஒருவனும் படிப்பில்லாத ஒரு பெண்ணும் ஒத்து வாழ்வதெப்படி யியலும்? ஒரு வண்டி மாட்டில் ஒரு மாடு கொழுத்த காளையா யும், ஒரு மாடு எருமையாயுமிருந்தால் எவ்வாறு வண்டி நடக்கு மோ அவ்வாறே படியாத மனைவியோடுகூடி வாழும் படித்த புருஷனுடைய வாழ்வும் நடைபெறும். இதில் ஏதாவது உனக்குச் சந்தேகமா? இதைச்சாதாரண மனிதரும் ஒப்புக்கொள்வார்களே யொழிய மறுக்கமாட்டார்கள். இவ்வூராருக்கு மாத்திரம் இது ஒவ்வாதென்றெண்ணுகின்றேன். ஒரு பெண்ணுக்கு ஸங்கீதத்தில் நல்ல பயிற்சி இருக்குமாயின் அவள் புருஷன், ஒழிந்த நேரத்தில் அவளைப் பாடும்படி சொல்லிக் கேட்டு ஆனந்தமடைவான். மேலும் ஸங்கீதத்திற்காசைப்பட்டு அநேக புருஷர்கள் பொருளை யழிப்பதும் தடைபட்டுப்போம். கல்வியறிவுள்ளவளா யிருந்தால் அவள், ஒழிந்தநேரங்களில் வேடிக்கைக் கதைகளையும், வர்த்தமானப் பத்திரிகைகளையும் படித்து மகிழ்வாள்; சில வேளை கணவனுக்கும் படித்துக் காட்டி அவனை மகிழ்விப்பாள்; தன் குழந்தைகளுக்கும் கல்வியறிவைப் புகட்டுவாள்; கடிதம் எங்கேனும் எழுத வேண்டியதா யிருந்தாலெழுதுவாள். தவிர இதனால் அளவற்ற நன்மைகள் விளையக்கூடும். மேலும் இவ்வூர் ஸ்திரீகளைப்போல் குளிக்குங் குளங்களிலும், ஒழிந்த நேரங்களிலும் ஓரிடத்திலே கூடி வம்பு பேசும் கொடிய வழக்கம் ஒழிந்து போகும்; வம்புச் சண்டைக்கும் இடமிராது. இதுகொண்டே இக்காலத்திலே கற்றறிந்தார் அநேகர் பெண்களுக்குக் கல்வியும் ஸங்கீதமும் அவசியமென்று கருதி அதற்காகத் தக்க ஏற்பாடு செய்துவருகின்றார்கள். அப்படியே நானும் கருதுகின்றேன்" என்றார். ஜடாவல்லவர் "மாப்பிள்ளே, நீர் சொல்லும் அபிப்பிராயங்கள் இருக்கட்டும்; நான் என் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கின்றேன். அதையுங் கேட்டு உமது மனத்துக்குச் சரியென்று தோன்றினல் ஒப்புக்கொள்ளும்; இன்றேல் விட்டு விடும். உமது அபிப்பிராயப்படி அநேக ஆடவர்கள் ஸங்கீதத்திற் காசைப்பட்டுப் பொருளை யழித்து விடுகிறார்கள என்றும், ஸங்கீத வித்பத்தியுடைய மனைவி இருப்பாளாயின் அக்கொடிய வழக்கத்திற்கு இடமிராதென்றும் அதனால் பெண்களுக்கு ஸங்கீத மவசியமெனவும் தெரியலானேன். அதுபோல் பரதநாட்டியத்திலே பிரியமுடைய ஒருவன் என்ன

செய்வான்? அவன் தாசி வீட்டிற்குப்போய்ப் பொருள்கொடுத்து நாட்டியம் பார்ப்பது கூடாதல்லவா? ஆகையால் பரதநாட்டியமும் பெண்களுக்கு அவசியம் தெரிந்திருக்க வேண்டும்போலும்! மனைவிக்கு நாட்டியம் தெரிந்திருந்தால் கணவன் பிரியப்படும்போது ஆடச்சொல்லிப் பார்த்து மகிழ்ச்சியடைவானல்லவா? இதைப்போலவே நாடகத்திற்குப்போய்ப் பொருளை வீண்செலவு செய்வதையும் ஒழித்துவிடக்கூடும்; ஒருவன் அவன் குடும்பத்திலுள்ள அக்காள் தங்கை மகள் மனைவி முதலிய ஏழெட்டு ஸ்திரீகளுக்கு ஸங்கீத வித்பத்தியும் சதிர் ஆட்டமும் கற்றுக் கொடுப்பானுயின், ஒரு சிறு நாடகம் வீட்டிலேயே நடத்திவிட்டுத் தலைவனும் அவனுடைய நண்பர் முதலியவர்களும் மற்றுமுள்ள அவ் வீட்டுக் கிழம் முதலியவர்களும் கண்குளிரக் கண்டு ஆனந்தமடைதல் கூடுமல்லவா? ஆகையால் ஒவ்வொரு வீட்டுப் பெண்களுக்கும் மேற்கண்ட சௌகரியங்களை உத்தேசித்து ஸங்கீதம், பரத நாட்டியம் முதலியன கற்றுக்கொடுக்க வேண்டியது மிக அவசியந்தானே? இதுபோல் கல்வியறிவுந் தங்கள் அபிப்பிராயப்படி பெண்பாலருக்கு இருக்குமாயின் ஒழிந்த நேரங்களில் வேடிக்கைக் கதைகளையும் வர்த்தமானப் பத்திரிகைகளையும் படித்துக் காண்பித்து மகிழ்ச்சியை உண்டாக்கக் கூடுமென்பதும் தவிர, கணவன் கல்வி யறிவில்லாதவனுயிருந்தால் கற்றறிந்த மனைவி தன் கணவனுக்குப் பதிலாகத் தான் உத்தியோகஞ்செய்து பொருள் தேடிக் கணவனைப் பாதுகாத்தலுங் கூடும். மனைவி உத்தியோகத்திலமர்ந்து விடுவாளாயின் கணவன் பரிசாரகஞ் செய்து அவள் கைக்கீழ் ஒரு வேலைக்காரனுக இருக்கலாம். பிறரிடத்துப் போய்ப் பல்லைக்கெஞ்சி வேலையிலமர்ந்து காலக்ஷேபம் செய்யவேண்டிய அவசியம் நேரிடாது. பிறரிடத்தில் வேலைக்காரனுக அமர்ந்து அவரிட்ட வேலையைக் கைகட்டி நின்று செய்வதிலும் ஒருவன் தன் மனைவிக்கும் தன் குடும்பத்தின் பொருட்டும் வேலை செய்வது சிறந்ததல்லவா? மேலும் புருஷன் அயலூருக்குச் சென்றிருந்தால் அவருக்குப் பிறர் உதவியின்றித் தாமே கடிதம் எழுதவும் கூடும். இன்னும் இதனுடைய சௌகரியத்தை விரிக்கிற் பெருகும். மேற்கண்ட சௌகரியங்கள் உமக்கும் உம்மைப்போன்ற நவீன நாகரிகப் பிரியருக்கும் வேண்டப்படுவனவாம். இவ்வூரிலிருக்கும் எங்களுக்கு வேண்டுமென்பதில்லை. ஆதலால் எங்கள் வீட்டுப் பெண்களுக்கு அவ்விதப் பயிற்சி செய்து வைக்கவில்லை. சமையல்

முதலிய வீட்டு வேலைகளைச் செய்தல், பிள்ளைகளைப் பாதுகாத்தல், செட்டாய்ச் செலவிடுதல், ஒழிந்த வேளைகளிலே நல்ல கிரந்தங்களைப் படித்தல் முதலியவைகளிற் பயிற்சி யேற்படின் போது மென்பது இவ்வூரினர் கொள்கை. எங்களுடைய நாகரிகம் உமக்குப் பிடியாது. உங்களுடைய நாகரிகம் எமக்குப் பிடியாது. இப்படி இருவருக்கும் இடையில் ஒரு பெரிய மாறுபாடு மலைபோ லிருக்கையில் சம்பந்தம் ஏற்பட்டுவிட்டது. யார் செய்த பாபமோ இவ்வித அசந்தர்ப்பமான சம்பந்தஞ் செய்ய நேரிட்டது. நா மென்ன செய்யலாம்'' என்றார்.

மாப்பிள்ளை "உன்னுடைய புராண இதிகாசங்களாகிற அத்தைப் பாட்டிக் கதையைக்கேட்க எனக்கு நேரமில்லை; நீ பரிதாசம் பேசுகின்றாய்; நீ இதுவரையில் சொன்னதெல்லாம் நான் கூறியவற்றைப் பகுத்தறிந்து பேசினதாகக் காணப் படவில்லை. புத்தியிருந்தால் உலகத்திலே பிழைக்கவழியுண்டு என்று கூறின், தேகத்திலே சக்தியுண்டானால் சண்டைக்குப் போகலா மென்கிற குருட்டு வழியைக்கொண்டு பேசவருகின்றாய். நீ என்ன பண்ணுவாய்? உனக்கு மாத்திரம் எங்கிருந்து நாகரிகம் உண்டாய் விடும்? பனந்தோப்பில் கள் அகப்படுமே யல்லது பால் எங்கிருந்து கிடைக்கும்? நீ என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள். எனக்கு என் மனைவி படித்தவளாயும் பாடத் தெரிந்தவளாயு மிருக்க வேண்டுமென்பது என் எண்ணம். நான் இப்பொழுது சொல்லியபடி உன் அப்பாவிடம் சொல்லி, உன் தங்கையை இவ்விடமே மூன்றுமாதம் வரையில் வைத்திருந்து பிடில் கற்றுக் கொடுத்துப் பின் நான் கடிதம் போட்டதும் அனுப்பிவிடு; இதைத் தவிர வேறொன்றும் மாப்பிள்ளைக் கென்று நீ செய்யவேண்டாம். இவைகளைப் பேசவே இங்குன்னை யழைத்து வந்தேன்—என்று கூறித் திரும்பினார். ஜடாவல்லவர், "உமதபிப்பிராயப்படியே யாகட்டும்; இதற்கென்ன கவலை? பெண் உமது சரக்கு; நாங்கள் என்ன செய்யப் போகின்றோம். இதற்காக இந்த வாய்க்காங்கரைக்கேன் அழைத்துவர வேண்டும்?'' என்று கூறினார். மாப்பிள்ளை தன் கோரிக்கைநிறைவேறியதாக வெண்ணி மகிழ்ந்தார்; அப்பொழுதே படித்த மனைவியொடு வாழ்வதாக வெண்ணி நிமிர்ந்தார். இப்படி யிவர் மகிழ்வுற்றதை அவர்முகம் தெரிவிக்கக்கண்ட ஜடாவல்லவர் "இவன் அற்ப ஸந்தோஷி; உலகவியல் புணராதவன்; தான் போலீஸ் உத்தியோ

கத்திலிருப்பது என்றைக்கும் சாசுவதம் என்றெண்ணிப் பேசியிருக்கின்றான்'' என்று கருதி "வீட்டிற்குப் போவோமே'' என்றார். மாப்பிள்ளை "போவோம்'' என்று எழுந்து "நான் சொன்னதை உன் தந்தைக்குச் சொல்லிவிடு; உன் தங்கைக்கும் சொல்லித் திட்டம் செய்; நீ இவ்விஷயத்திலே கவலை யெடுத்துக்கொண்டாலன்றிக் காரியம் முடியாது''— என்று சொல்லிக்கொண்டே வீடுவந்து சேர்ந்தார்.

மாப்பிள்ளை தம் அறைக்குச் சென்று சாய்ந்த நாற்காலியிலே சாய்ந்தார். ஜடாவல்லவர் உள்ளேசென்று லக்ஷ்மியம்மாளிடமும் ஜானகியிடமும் மாப்பிள்ளையின் கருத்தை வெளியிட்டு அவர்கள் அபிப்பிராயந் தெரிந்துகொண்டார்; பின்னர் ஐயர் வரவிற்கெதிர்பார்த்திருந்து அவரிடமுங் கூறிக் கலந்தார். ஐயர், "இப்படியொரு கூத்தா? இவர்களின் சம்பந்தத்தினால் இன்னுமென்னென்ன விபரீதங்கட் காளாகவேண்டுமோ தெரியவில்லையே!—தெய்வமே! இப்படியா என் செல்வக் குழந்தைக்குப் புருஷன் வாய்க்கவேண்டும்?'' என்றெண்ணி வருந்தி, "எல்லாம் ஆகட்டும்—என்று மாப்பிள்ளைக்குச் சொன்னாயல்லவா?—அதுதான் சரியான மறுமொழி. அவன் எப்படியாவது அமளியடங்கி ஊர்போய்ச் சேரட்டும்''—என்று கூறி வெறுத்தார். பிறகு அன்றைப்பொழுது இவரைப்பற்றிய பேச்சிலேயேகழிந்தது.

மறுநாள் பகல் மூன்றுமணியாயிற்று. இதற்குள் நிகழ்ந்த மாப்பிள்ளையின் அநாசாரச் செய்கைகள் பல. அவற்றை யெழுதப்புகின் புத்தக மடங்காது. ஆனால் அவருடைய அச்செய்கைகளில் இங்கு அவசியம் குறிப்பிடத்தக்க தொன்றுண்டு—அது அவர் பிறரின் நிலைமை யறியாமல் செய்த செய்கை! அதனைக் கூறுவோம்—அவர் அன்று பகல், போஜனத்திற்காக எழுந்து ஸ்நானஞ் செய்ததும் ஜானகி சாந்தைக் குழைத்துக் குச்சியிலேந்திக்கொண்டு கண்ணாடியும் கையுமாக முன்னே நிற்கவில்லையாம்! அதற்காகக் கோபங்கொண்டு மாப்பிள்ளை தமது போலீஸ் அதிகாரத்தையும் ஆண்மையையுங் காட்டி அவளை யிழுத்துத் தள்ளி ஓர் அறை முதுகில் அறைந்து, "குளித்ததும் சாந்து கொண்டுவரத் தெரியவேண்டாமா தடிக் கழுதைக்கு?'' என்று கூறி உறுமினார். இதை யறிந்தார் எல்லோரும் மாப்பிள்ளையின் அறிவை யளந்து தெரிந்துகொண்டனர். ஜடாவல்லவரும் ஐயரும், அறிவில்லா வெறியனென வெண்ணி வாய்பேசாமல் ஜான

கியை உள்ளே அழைத்துப்போய் அவளைச் சமாதானப்படுத்தினார்கள். ஆனால் மாப்பிள்ளை, தமது சொரூபங் காட்டச் சமயம் நேர்ந்ததுபற்றி மகிழ்ந்து புசித்தெழுந்தார்; அப்பால் அன்று மூன்றுமணி ரயிலுக்குத் தம்மூர் போகப்புறப்பட்டார்; போலீஸ் உடையுடன் கையிலே பிரம்பும் பிடித்துக்கொண்டார். முன்னே வேலைக்காரன் அவர் பெட்டியையும் படுக்கையையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டான். ஐயரும் ஜடாவல்லரும் அவரை வழியனுப்ப முன்வந்தனர். ஐயர் வீட்டு மாப்பிள்ளை ஊருக்குப் புறப்படுகின்றார் என்னும் செய்தி ஊரெங்கும் அதற்குள் பரவிவிட்டது. இங்ஙனம் புறப்பட்ட இவர் தெருவிற்குவந்து மேற்கு முகமாக நடந்தார்.

அந்தோ! என்னென்று சொல்வோம் அந்தத் தெருவிலே அப்பொழுது நடந்த அமளியை! ஒவ்வொரு வீட்டு வாயிலிலும், மேன் மாடியிலும் அளவற்ற சந்திரன் ஏககாலத்தில் உதித்துள்ளதென ஆச்சரியப்படும்படி ஸ்திரீகளும் சிறு கன்னிகைகளும் முகங்களை நீட்டி மாப்பிள்ளையைப் பார்த்துக்கொண்டு குசு, குசு, கசு, கசு, என்று பேசலாயினர். ஆடவர்களுள் சிலர் சிற்சில இடங்களில் கூடிப் பலபல விதமாகப் பேசிக்கொண்டு நின்றார்கள். இதைக்கண்ட மாப்பிள்ளை தம்முடைய அழகையும் உடுப்பையும் புகழ்ந்து பேசுகிறதாக எண்ணிக் கர்வங்கொண்டு, கையிலிருந்த பிரம்பைக் கரகரவென்று சுழற்றிக்கொண்டும் மீசையை முறுக்கிக்கொண்டும் போலீஸ் விறைப்போடு நிமிர்ந்த வண்ணத்தில் நடந்து பரிசற்றுறை போய்ச் சேர்ந்தார். பரிசலும் அப்பொழுது புறப்படுந் தருவாயிலிருந்தது. உடனே மாப்பிள்ளை பரிசலிலேறிக்கொண்டார். பெட்டியும் படுக்கையும் பரிசலில் வைக்கப்பட்டன. பரிசல் புறப்படத் தொடங்கியவுடன் ஐயரும், ஜடாவல்லரும் மாப்பிள்ளையை வழியனுப்பிவிட்டு வீட்டிற்குத் திரும்பினர். இருவரும் மாப்பிள்ளையின் புத்தியையும் தங்களுக்கு அப்படிப்பட்ட சம்பந்தஞ் செய்ய நேரிட்டதையும் பற்றிப் பேசிக்கொண்டே வீடுவந்து சேர்ந்தனர். ஐயர் வருத்தங் கண்ட ஜடாவல்லவர், "வருந்தவேண்டாம், இவன் ஆட்டமெல்லாம் வீண் கொழுப்பினாலும் அறியாமையினாலும் ஏற்பட்டவைகளாம். அவை அடங்கும்படியான காலம் விரைவிலே வரும். கோசார ரீதியாக இவனுக்குக் காலம் போதாது, ஒரு வேளை இவன் வேலைக்கே தீங்கு நேரிடவுங்கூடும்"!— என்று கூறித் தேற்றினார்.

# அத்தியாயம்—6.

" வாழ்வது வந்தபோது மனந்தனின் மகிழ வேண்டாம்
தாழ்வது வந்த தாஞல் தளர்வரோ தக்கோர்? மிக்க
ஊழ்வினை வந்த தாஞ லொருவரால் விலக்கப் போமோ
ஏழையா யிருந்தோர் பல்லக் கேறுதல் கண்டி லீரே!"

உலகத்தில் ஆறிடுமேடும் மடுவும்போல ஒருவனுக்கு வாழ்வுந் தாழ்வும் மாறி மாறி ஏற்படுவது இயல்பல்லவா? அவ்வாறேற்படுவது நல்வினை தீவினைகளுக்குத் தக்கபடி யென்பர் அறிஞர். நல்வினை தீவினைகள் இரண்டும் மனிதனுடைய செய்கைகளில் கலந்தே யிருக்கின்றன. அதுபோலவே நன்மைகளும் தீமைகளும் கலந்தே அநுபவிக்கப்படுகின்றன. இதன் தத்துவம் உணர்ந்தவர்கள் வாழ்வு வந்தபோது இறுமாந்து திரியாமலும் தாழ்வு வந்தபோது துயரக் கடலில் ஆழாமலும் தமக்குரிய ஒழுக்கங் காத்துப் பிறப்பின் பயனை நாடிச் செய்வன செய்வார்கள். அப்படிப்பட்ட உணர்வு நல்லோருடைய பழக்கத்திஞலும் நல்ல நூல்களை யோதி யுணர்வதாலும் கேள்வியிஞலு மேற்படுவதாம். அதனை யடையாத ஜன்மமே காமம் கோபம் லோபம் மோகம் மதம் மாற்சர்யமென்னும் அறுவகைப் பகைவர்களிடத் தகப்பட்டு இடைவிடாத் துன்பத் தாழ்ந்து செய்வன மறந்து கெடுகின்றது. ஐயருடைய மாப்பிள்ளையின் நடவடிக்கைகளைப் படித்துவந்த நமக்கு அவர் வாழ்வு தாழ்வுகளின் உண்மையை யுணர்ந்து நடப்பவராகத் தெரியவில்லை யல்லவா? அவர் இப்போது தாம் போலீஸ் இன்ஸ்பெக்டர் என்னும் உத்தியோக அந்தஸ்தி லிருப்பதை ஒரு பெரு வாழ்வாக வல்லவா கருதி நடக்கின்றனர்?—உடைமையும் வறுமையும் ஒரு வழி நில்லா— என்னும் திருவாக்குத் தமது செவியிலும் விழப் புண்யஞ்செய்யாதவரன்ரே இவர்? ஆகையால் இவர் தம் வாழ்வு சதமென நம்பியிருந்தார்.

வாழ்வையும் உடலையும் சதமென நம்பித் தாமேற்கொண்ட ஒரு காரியத்தில் கண்ணுங் கருத்துமாக இருந்து உழைத்தல் வேண்டும். உழைப்பின் பயனை எதிர் பார்ப்பது கூடாது. நமது வாழ்வும் உடலும் சதமல்லவென நினைப்பவனுடைய உள்ளத்தில் ஊக்கங் குறையும், ஊக்கங் குறையின் காரியம் நிறை

வேருது. அவ்வாறே பயன் கருதி வேலைசெய்பவன் தான் கருதியபடி பயன் கிடையாவிடத்து உழைப்பிலே சோர்வடைகின்றுன். சோர்வேற்படின் காரியம் நிறைவேருது. ஆதலின் உழைக்கப் பிறந்தோம்; உழைப்பவர் பங்கே சுகம். உழைப்பவர் உடல், ஓடும் கடியாரத்தைப்போலச் சுத்தமாயிருக்கும். உழைப்பில்லார், ஓடாத கடியாரம் துருப்பிடித்துக் கெடுவது போலச் சோம்பேறிகளாய்க் கெடுவர். உழைப்பவர்க்கே கடவுள் திருவருள் பாலித்துக் கூலி கொடுப்பர். உழைப்பிற்குக் கூலியில்லாமற் போகாது. உழைப்பவனை நன்மைகளெல்லாந் தாமாக வந்தடையும்—என்னும் போதனைகள், உலகம் சோம்பேறியாயிருந்து கெடாமல் அறிவையும் ஆற்றலையும் மனம் வாக்கு, காயம் என்னும் மூவகையிலும் உபயோகித் துழைத்துப் பயன் பெறும் வழியிலே செல்ல வேண்டும் என்னும் உயர்வான எண்ணமுடைய மகான்களின் திருவாய் மூலமாகப் பிறந்தவைகளாகும்.

உலகத்தையும் உலக வாழ்வையும் உன் உடலையும் நம்பாதே! யாவும் அழிவன!—ஆகையினுல் நாளைக்குச் செய்வோ மென்றிராதே! நீ நினைத்ததை உடனே செய்! நீ நினைப்ப தெதுவும் பெரியோர்களுக்குச் சம்மதமாயும் பிறர்க்கு இடையூறு தருவதாயில்லாமலு மிருக்கட்டும்—என்னும் போதனைகள், உலகம் அகங்காரத்திலாழ்ந்து கெடாமல் நற்கதியடைய வேண்டுமென்னும் இரக்கங்கொண்ட பெரியவர்கள் திருவாய் மலர்ந்த திருவாக்குகளாம்.

இவ்விரண்டு போதனைகளையும் மனத்தில் மறவாமற் கொள்பவனுடைய வாழ்வுதான் சீர்பெற நடைபெறும். அவன்றுன் இம்மையிலும் மறுமையிலும் சுகம் பெறுவான். மாப்பிள்ளை இவ்விரண்டு போதனையில் எதையும் அநுசரித்தவரல்லர். அவரை இம்மை மறுமையே தெரியாதவர் எனினும் பொருந்தும்.

இப்படி யிருக்கையில் மாந்தர்களின் நல்வினை தீவினைகளுக்குத் தக்க பயனை அளிக்கும் எல்லாம் வல்ல இறைவன் மாப்பிள்ளையின் செய்கைக்குப் பயனளிக்கத் திருவுளங்கொண்டான். ஆதலினுல் மாப்பிள்ளை பிள்ளையார் புத்தூரிலிருந்துபோன ஒரு வாரத்திற்கெல்லாம் அவரிடமிருந்து தாம் ஒரு வழக்கில் அலைந்துகொண்டிருப்பதாயும் அது முடிவாக இன்னும் இரண்டு வாரஞ் செல்லுமென்றும் அதுவரையிற் கடிதமெழுதக்கூட ஒழிவிராதென்றும் ஐயருக்குக் கடிதம் வந்தது. ஐயர், அதனைப்

பார்த்ததும் "சந்திரசேகரா, நீ கூறியபடி மாப்பிள்ளைக்கு ஏதோ இடையூறு நேரிட்டிருக்கிறது! வீணகங்காரங் கொண்ட மூடனுன இவனுக்கு நல்லறிவு புகட்டவே இவ்விடையூறு நேரிட்டிருக்கிறது போலும்!" என்று வருந்தினுர். ஜடாவல்லவரும் "தங்கள் நிலை தெரியாமல் இறுமாந்து திரிபவர் கதி இவ்வாறு தான் முடியும்" என்று கூறி வருத்தமுற்றுர். அப்பால் அடுத்த வாரப்பத்திரிகையில்—மதுரை—போலீஸ் இன்ஸ்பெக்டர்—என். சுந்தரம் ஒரு வழக்கில் பரிதானம் வாங்கிய குற்றத்திற்குள்ளாய்த் தாழ்ந்த உத்தியோகத்துக்கு மாற்றப்பட்டார்—என்று செய்தி வெளியாயிற்று. இதைப் பார்த்த ஐயரும் ஜடாவல்லவரும் பகர முடியாத துயரமடைந்தனர்.

சில ஆப்த நேயர்களும் உறவினரும் ஐயரைப் பார்த்து "என்ன உனக்கு நமது வகையருவில் பிள்ளை யில்லாமலா போயிற்று? நன்னடக்கை யில்லாதவனைத் தேடிப் பெண் கொடுக்கப் போனுய்; நல்ல நடக்கைதானே ஒருவனை யுயர்த்துவது? அதனை உயிரைப்போலப் பாதுகாப்பவனன்றே முன்னுக்கு வருவான்? போலீஸ் உத்தியோகஸ்தன் ஒருவன் அதை யெப்படிக் காக்க வல்லவனுவான்? அந்த உத்தியோகத்தின் வாழ்வு இவ்வளவுதான்! மேலும் இதுவரையில் வழக்கமில்லாத புது வழக்கம் செய்ததினுல் வந்த பயனிது! உனக்கு இது தகும்; உன் மாப்பிள்ளையின் வீச்சையும் விறைப்பையும் பார்த்தபொழுதே அவன் வேலையைக் காப்பாற்றி முன்னுக்கு வருவானென்று நாங்களொருவரும் நினைக்கவில்லை. என்ன டம்பம்! என்ன ஒழுங்கீனம்! இவையெல்லாம் ஸர்வ சாக்ஷியாக விளங்கும் தெய்வத்திற்குச் சம்மதமாகுமா?" என்று பலவாறு இகழ்ந்து பேசிக் காட்டினுர்கள். இது ஐயரையும் ஜடாவல்லவரையும் புண்படுத்தியது! லக்ஷ்மியம்மாளிடத்தும் இவ்வாறே ஸ்திரீகள் குறைகூறி யிகழ்ந்தனர். ஜானகியின் தோழிகளும், ஜானகியைப் பலவாறு பேசி யேசினர். ஆகவே, இப்பிறவிக்கும் இனி யெடுக்கும் பலகோடி பிறவிகட்கும் இப்பொழுது பெண்ணைப் பெற்றுச் சம்பந்தஞ் செய்ததே போதுமென ஐயரும் லக்ஷ்மியம்மாளும் எண்ணி வருந்தினர். அடுத்தநாள் காலையில் மாப்பிள்ளையிடமிருந்து,

"இக் கடிதங் கண்ட மறுநாளே தவறுமல் சௌ. ஜானகியை யழைத்துக் கொண்டு வந்துவிடும்படி கேட்டுக் கொள்கிறேன். நான் ரயில் ஸ்டேஷனுக்கு வந்திருப்பேன்,

தவருமல் அழைத்துக்கொண்டு வரவும். மற்ற விஷயம் நேரில் பேசிக்கொள்வோம்''—என்ற விஷயம் அடங்கிய கடிதம் வந்தது.

இக்கடிதங் கண்டதும் ஐயர் ஜடாவல்லவரைக் கூப்பிட்டு "அப்பா, மாப்பிள்ளை யசட்டுப்பயல் கடிதம் எழுதியிருக்கின்ருன் பார்!'' என்று கடிதத்தைக் கொடுத்தார். அதை ஜடாவல்லவர் பார்த்து "அன்று நான் சொன்னதென்ன! நடந்ததென்ன! பார்த்தீர்களா? லோகங்களிலே உயர்வான தங்கமும் கனலிலிட்டுக் காய்ச்சிய பின்புதான் வேலைக்கு உபயோகமாகிறது. லோகங்களில் தாழ்வான இரும்பும் அப்படியே கனலிலிட்டுக் காய்ச்சி யடித்த பின்புதான் வேலைக்கு உபயோகமாகிறது. இருப்பினும் தங்கத்தைவிட இரும்புக்குச் செம்மட்டியடி அதிகமாக வேண்டியதா யிருக்கின்றது. அதுபோல மனிதர்கட்குள் அவரவர் பாபச் செய்கைகட்குத் தக்கபடி கடவுள் தண்டனை விதித்து வழிப்படுத்துகின்ருர். ஆதலால் இப்பொழுது மாப்பிள்ளையை நல்லவழிப் படுத்தக் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட தண்டனை இது. இவன் ஸங்கீதம் என்னும் பேச்சு இனிப்பேசான்; பல்பிடுங்கின பாம்புபோல் அடங்கிக் கிடப்பான். பசி வந்திடப் பத்தும் பறந்துபோமன்ருே? இருக்கட்டும்; ஜானகியை யழைத்துவரும்படி யெழுதி யிருக்கின்ருனே, நீங்கள் போகிறீர்களா?'' என்ருர். ஐயர் "இப்போது எனக்கு வெளிப்புறப்பட வெட்கமா யிருக்கின்றது. அந்தப் பாபியின் முகத்தை நான் பார்க்கமாட்டேன். நீதான் ஜானகியை அழைத்துக்கொண்டு போகவேண்டும். ஆகையால் நாளை மாலை ரயிலிலேயே புறப்பட்டு விடு; அங்கே போய் அவனேடு ஒன்றும் பேசாதே; அவன் என்ன சொன்னபோதிலும் சரி சரி யென்று தலையை யசைத்து விட்டு வந்து சேர்'' என்று சொன்ஞர். ஜடாவல்லவரும் தாமே போய் வருவதாக நிச்சயம் செய்துகொண்டார்.

மறுநாள் மாலை ஜடாவல்லவர் ஜானகியை அழைத்துக் கொண்டு ரயிலுக்குப் புறப்பட்டார். அப்பொழுது ஐயர் "ஆ! இந்நாள்வரை அருமை பெருமையாக வளர்த்துவந்த நமது குழந்தை யெப்படி மாப்பிள்ளையினுடைய நாஸ்திக புத்தியையும், அவனுடைய அநாசாரத்தையும் அநுஸரித்து நடக்கப்போகின்ருள்'' என்றெண்ணிக் கண்களில் நீர் ததும்ப நின்று ஜானகியைப் பக்கத்திலழைத்து "அம்மா! போய்வா, புத்திசாலியா

யிரு, நான் அடிக்கடி கடிதம் போடுகின்றேன்" என்று சொல்லி யனுப்பினர். லக்ஷ்மியம்மாளும் "ஐயோ! குழந்தை யெப்படி மகா கோபியான மாப்பிள்ளையிடம்போய் அவன் மனமறிந்து நடக்கப்போகின்றாள்! யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்வதுபோல் இதற்கு நானே காரணமானேன். இல்லாவிட்டால் அடங்கி நடக்கும் குணமுள்ள மாப்பிள்ளை கிடைத்திருப்பான். இவ்வளவு இகழ்ச்சியும் மனவருத்தமும் நேர்ந்திரா. ஏதோ உத்தியோகஞ் செய்கிறானே கௌரவமாய்ப் பிழைப்பான் என்று பார்த்தேன்; இப்படிக் குரங்காய் விளங்குவானென்று கனவிற்கூட எண்ணவில்லையே" என்று கருதிக் கண்ணீர் விட்டழுது தன் குழந்தை ஜானகியை "அம்மா கண்மணீ! இங்கே வா" என்று மோவாய்க்கட்டையைப் பிடித்து முகாரவிந்தத்தைப் பார்த்து முத்தமிட்டு "என் தங்கமே! நீ போய்வா, புத்திசாலியாய் இரு; நான் உன் அப்பாவைக் கூட்டிக் கொண்டு அடுத்த மாதம் மதுரைக்கு வருகின்றேன்" என்று சொல்லி அனுப்பினாள். ஜானகியோ தன் தாய் தந்தையரின் பிரிவாற்றாமைக்கும், அவர்கள் தன் கணவன்மீது கொண்டிருக்கும் வெறுப்பிற்கும், பிறந்தது முதல் இதுவரையில் இணைபிரியாமல் ஒருவர்மேல் ஒருவர், காற்றடிப்பினும் மனம் சகியாத நேயம் பாராட்டிவந்த தன் செல்வத் தங்கை ஸ்ரீமதியின் பிரிவாற்றாமைக்கும் மனம் வருந்தி, இரண்டு கண்களினின்றும் மேகம் மழை பொழிவதுபோலத் தாரை தாரையாய் நீர் பெருக நின்று, தன் தாய் தந்தையரைப் பார்த்துப் "போய் வருகின்றேன்" என்று விடை பெற்றுக்கொண்டு பின்பு தங்கை ஸ்ரீமதியை அருகிலழைத்து முத்தமிட்டுக் "கண்ணே! நான் வருகின்றேன்; சமத்தாயிரு" என்று சொல்லி அவளிடமும் விடைபெற்றுக் கொண்டாள். லக்ஷ்மியம்மாளும் ஸ்ரீமதியும் சிறிது தூரம் போய் வழியனுப்பிவிட்டுத் திரும்பிவிட்டனர். ஐயர் மாத்திரம் ரயில் ஸ்டேஷன் வரையில் போயிருந்தார். ஜடாவல்லவரும் ஜானகியும் ரயிலேறி அன்றிரவு இரண்டு மணிக்கு மதுரைபோய்ச் சேர்ந்தார்கள். மாப்பிள்ளையும் ரயில் ஸ்டேஷனுக்கு வந்திருந்து அவர்களைத் தமது வீட்டிற்கு அழைத்துப்போனார்.

மாப்பிள்ளை தமது வீட்டிற்குப் போனதும், தமக்கு நேர்ந்த இடையூறுகளை யெல்லாம் ஜடாவல்லவரிடஞ்சொல்லி வருந்தினர். ஜடாவல்லவர், மாப்பிள்ளை புலி பசுவானதுபோல வணக்கமாகப்

பேசுவதைக் கண்டு மகிழ்ந்து ஒன்றுந் தெரியாதவர்போல் " ஆ! அப்படியா! என்னகாலம்! 'வருந்தி யழைத்தாலும் வாராத வாரா, பொருந்துவன போமினென்றாற் போகா' என்ற ஆன்றோர் நீதிவாக்கியத்தின்படி நமதெண்ண மொன்றும் நடவாதென்பது திண்ணம். இம்மண்ணுலகத்திலே பிறந்தவர்கட்குத் துக்கமுஞ் சுகமும் மாறிமாறி யேற்படுவது இயல்பாம். அதுவும் நம்மைப்போன்ற பாபாத்மாக்களாகிய தெய்வ சிந்தனை யில்லாத பேர்களுக்குக் கேட்க வேண்டுமா ? வீணில் மனம் வருந்துவதில் எள்ளளவும் பயனில்லை. யாவும் காலத்தின் வசமாய்ச் சுழல்வன. ஆதலின் நேர்ந்ததையும் இனி நேரிடப்போவதையும் எண்ணி அஞ்சாமலும் அஞ்சி வருந்தாமலும் இருப்பவன் எவனோ அவனே ஆண்மகனாவன்! தைர்யம் என்பது அறிவுடைமை துணிவுடைமை என்னும் பொருள்படக்கூடிய ஒரு ஸமஸ்கிருதமொழி. இதனைத் தீரனென்பவன் ஒருவனுக்கு உரியதோர் இயற்கைக் குணமென்பர் அறிஞர். ஆதலின் தீரனே அறிவுடையவனாகின்றான். தீரனை யறிவுடையவ னென்னும்பொழுது தைர்யம் அதாவது துணிவுடையவன் எவனோ அவனே அறிவுடையவனாகின்றான். கண்டதற்கெல்லாம் அஞ்சு மியல்பினனாகிய கோழையொருவன் நூல்களின் கரைகண்ட நிபுணனே யெனினும் அறிஞனாகான்! அவன் இகபர நன்மை பெறுவதுமில்லை. அச்சம் என்பது உலக வாழ்வாகிய கடலிலே உலாவும் ஒரு பெரிய முதலை! இது, கோழைக் குணமுடையவனைப் பார்த்துக் கௌவி இழுத்து, கஷ்டம் என்னுங் கடலிலே யழுத்தும். அவன், ஓராற்றின் பெருஞ்சுழலி லகப்பட்டவன் வருந்தி யிறப்பதுபோல் பிறந்த பிறப்பின் பயனிழந்தழிவான். ஆதலின், நேர்வதெதையும் பொருட்படுத்தாமல தைர்யம் என்னும் குன்றேறி நின்று எதிர்த்து நல்லவழியில் நடப்பதே மேன்மை தருவதாகும்—என்று நீதி யெடுத்தோதி மாப்பிள்ளையைத் தேற்றினர். மாப்பிள்ளை, " சந்திர சேகரா, இப்படிப்பட்ட நீதி போதிக்கும் தன்மை யுன்னிட மிருக்குமென்று நான் நினைக்கவில்லை. ஸமஸ்கிருதமும் தமிழும் இப்படிப்பட்ட தெளிவை யளிக்கும் என்பதை நான் உணராதவனாக விருந்தேன். உன்னுடைய உயர்வான பேச்சு என் சித்தத்திலே சிதையாத தீபம்போல இனி என்றும் பிரகாசித்து என்னைக் காக்கும் என்பது திண்ணம்"—என்னும் மறுமொழிகளை ஜடாவல்லவர் செவிக்கினிக்கும் தெள்ளமுதம்போல

அளித்தார். ஜடாவல்லவர், மாப்பிள்ளையின் மனப்பாங்கு இங்ஙனம் மாறியது கண்டு, ஒரு மனிதனைத் தாழ்வு நல்லவழிக்குக் கொண்டுவருமொரு மருந்தாகிறது! ஆதலின் தாழ்வை வெறுத்தல் அறிவீனம்—என்னும் உயர்ந்த கருத்தை யுணர்ந்தார். "நல்ல காலம்! கடவுள் கிருபை!"—என்றுஞ் சிந்தித்தார். உடனே திரும்பிவிட வேண்டுமென்று எண்ணிக்கொண்டு வந்த இவர் இவ்வூரிற் சிலநாள் தங்கி மாப்பிள்ளையோடு வசிக்கவும் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்று விசேஷமும் அமையப் பெற்று ஒப்புயர்வில்லாத பெருமையோடு விளங்கும் அந்த மதுரையம்பதியைப் பார்க்கவும் மீனாட்சி சுந்தரேசுவரரின் தரிசனஞ் செய்யவும் திருவுளங் கொண்டார். நல்லவை நாடி நலம் பெறும் வழியிலே நிற்பவர் தாம் விரும்பியவை வாய்த்த சமயம் அடையப் பின் வாங்காரன்றோ? அப்படிப்பட்ட அருங்குணமுடையவராதலின் ஜடாவல்லவர் அவ்வூரிலே தங்கி யிருக்கப் பொறுமை கொண்டார்; அவ்வூரிலே ஒரு வாரந் தங்கியிருந்து பார்த்துவிட்டு ஊர்வந்து சேர்ந்து தமது தந்தையிடம் யாவுங் கூறி மகிழ்ந்தார். ஐயருங் கேட்டு மன வாறுதலடைந்தார்; இருப்பினும் இந்தச் சம்பந்தத்தால் தமக்கு நேர்ந்த கண்ணியக் குறைவை யெண்ணி யெண்ணி மனம் புண்ணாக வருந்தினார்.



## அத்தியாயம்—7



### கடனுண்டே வாழாமை காண்ட லினிதே.

*உயிரு முடம்பும் பிரிவுண்மை யுள்ளிச்*
*செயிருஞ் சினமுங் கடிந்து—பயிரிடைப்*
*புற்களைந்து நெற்பயன் கொள்ளு மொருவன்போல்*
*நற்பயன் கொண்டிருக்கப் பாற்று—*

என்னும் கட்டளை கடைப்பிடித்தொழுகுந் தூயகுண முடையவராகிய ஐயர், தமது பெண்கட்கும் பிள்ளைக்கும் மண முதலியன செய்து பட்டபாடுகளை நினைக்கும்போது வருந்துவாரெனினும் சாதுக்கள் எங்குச் சென்றாலும் அங்கு அவர்கட்கு உதவி புரிவோர் ஏற்படுவதுபோல, அவருடைய தெளிந்த உள்ளத்திலே அடிக்கடி பிரகாசிக்கும் நல்லறிவு,—விதிவலிது, அதனை வெல்லும் சமர்த்தனில்லை! எந்தக்காலத்தி லேது நடக்குமோ அது நடக்கும்!

கடல் பெருகி மேலிட்டா லதற்குக் கரையேது!—என்று போதித்து அந்த நினைவை மேலெழ வொட்டாமற் றடுக்கும். அதனால் ஐயர் கொஞ்ச நாளையிலே அவைகளை மறந்தார். அல்லாமலும் உள்ளத்திலகும் நல்லறிவே உதித்ததெனச் சொல்லத் தக்க செல்வப் புதல்வராகிய ஜடாவல்லவரின் அரிய குணங்களும் நடவடிக்கைகளும் அவர்க்குக் கவலை யகற்றும் அருமருந்துகளாயின.

இப்படி யிருந்து வருகையில் ஐயருக்கு விவாகத்திற்கும் வேறு செலவுகளுக்கும் வாங்கிய கடனாலாகிய தொந்தரவு, நிர்மலமான வானத்திலே பிரகாசித்துக் கொண்டிருக்கும் நிலவை மேகந் தோன்றிச் சூழ்ந்து கவிந்து கொள்வதுபோலச் சூழ்ந்து கவிந்து கொண்டது! அந்தோ! கடலைப் பார்க்கினும் ஒருவனுக்குத் தொந்தரவு தருவது வேறுண்டோ உலகத்தில்? இதனாலன்றோ "கடன்பட்டார் நெஞ்சம்போலக் கலங்கினான் இலங்கை வேந்தன்"—என்று பெரியோர் பாடினர். கடன்கொண்டு வாழ்தலினும் பிச்சையெடுத்துண்பதே சிறந்ததாம்—எனக் கூறுவதும் கடனாலாகும் தொந்தரை பொறுக்கொணாதது என்பதை உணர்த்தவல்லவா? வாசகர்களே!—கடன் வாங்குவது யாவர்க்கும் எளிது; அதனைப் பின் கொடுப்பது யாவர்க்கும் கஷ்ட சாத்தியமானது! அந்தோ! கடன் அடிமைப்படுத்துமொரு காதகன்! கடன் வாங்குகிறவன் முயற்சியோடு துயரத்தை விலைக்கு வாங்குகிறவனாகின்றான். கடனால் உள்ளம் நீங்காத நோயிலுழலும்! உடலுக்கு வரும் நோய்க்கு மருந்துண்டு, உள்ளத்திலுண்டாகும் நோய்க்கு மருந்தில்லை—என்னும் இவ்வாக்குகளும் கடனின் தொந்தரவை உணர்ந்த உலகம் பேசுவனவாம்.

இத்தகைய அருந் துயரந்தரும் கடனுக்குள்ளான ஐயரைப் பற்றி என்ன நினைக்கும் அவர் சரித்திரம் உணர்ந்தவருடைய உள்ளம்? கடனென்னும் முதலை வாயிலே சிக்குண்டு கலங்க இவர் செய்த தீவினையாதோ வென்றல்லவோ பரிதாபப்படும்? ஏன்? "மண்ணிடை யாவ ரிராகவ னன்றி மாதவ மறத்தோடும் வளர்த்தார்" என்று பாடிய கம்பர் இப்போதிருப்பின் இவரையுமல்லவா பாடியிருப்பர் என்று புகழ விளங்குவதன்றோ ஐயருடைய தரும குணம்? சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாலே பீடை வருதலும் யானையும் பறவையும் பாம்பும் கட்டுப்படுதலும் புத்தி சாலிகளுக்கு வறுமை வருதலும் தெய்வத்தின் மகிமையே யல்லா

மல் வேறல்ல என்பது பெரியார் கருத்தாகையால் ஐயரவர்கட்குக் கடனுண்டானதும் அந்த நியாயத்திற் சேர்க்கப்படுமெனினும், தன் மறுப்பிலும் உழைப்பிலும் ஊக்கத்திலும் முற்பட்டவரும் "போனக மேன்பது தானுழன்றுண்டல்" என்னும் போதனை கடைப்பிடித்தாரும் ஐயர் தம்முடைய உழைப்பினால் ஊதியம்பெற முயலாமல் நிலத்தில் கிடைக்கும் குத்தகையில் காலங் கடத்தி வந்ததே முக்கிய காரணமெனக் குறை கூறினர். சிந்தித்துப் பார்க்கின் அது மெய்யெனவே காணப்படும். அவ்வூரினர் எல்லோரும் பிதிரார்ஜித சொத்துடையவரென்று கூறியுள்ளோமன்றோ? ஆதலின், நிலத்தைப் பிறர்பால் குத்தகைக்கு விடுவதும் குத்தகைக்குப் பெற்ற ஏழைகள் அதில் உழைத்து நெல் அளக்க, தாம் நிழலிலிருந்து மெய் வருந்தாமல் உண்பதும் அவர்களுக்கு வழக்கமாய்விட்டன. இவ்வழக்கத்தினால் சொற்ப பூஸ்திதி யுடையவரிற் பலர் வறுமை யென்னும் கொடிய பாம்பின் வாய்ப்பட்டு நிலங்களை விற்கவும் கடன் வாங்கவுந் தலைப்பட்டனர். எப்படிப்பட்ட சொத்துக்காரர்களாக இருப்பினும் சொந்த முயற்சியும் உழைப்பு மில்லாவிடில் சொத்து, உடையவனை யறியாமலே அழியும்—என்பதை இவ்வூரினர் உணர்ந்தார்களில்லை. காரணம் அவர்களுக்குச் சுளுவில் பிரயாசையின்றிக் குத்தகை கிடைப்பதேயாம். அன்றியும் குடும்பமென்பது நாளடைவிலே விருத்தியாவதும் அதற்கேற்ப அதிலே செலவதிகரிப்பதும் உலக இயற்கையாக விருக்க, அதனை, சொத்திருக்கின்றது; அதிலிருந்து குத்தகை வருகின்றது; நமக்கென்ன குறை என்னும் மமதையினால் மறந்துபோய் வறுமைக் குள்ளானவர்களும் இவ்வூரிலுண்டு.

இவைகளொருபுறமிருக்க, உமாமகேசுவர ஐயர் வரதக்ஷிணை யென்னும் கொடிய கொள்ளைக்காரனிடம் அகப்பட்டுக்கொண்டாராதலால் அவருக்கு கஷ்டம் இரட்டித்தது. ஆயினும் ஐயருடைய பொறுமை என்னும் பெருங்குணமதனை மேலெழ விடாமல் தடுத்தது. பொருளை யிழந்தமையும் பொருளுடைமையும் தானமும் மானமும் அவமானமும் ஆயுளுமாகிய இவைகளைப் புத்திமான் வெளியிடான்—என்னும் பெரியாரது நீதியுரையை யுணர்ந்தவராதலின் ஐயர் எதனையும் வெளிக்குக் காட்டாமல் வாழ்வு மாறுமியல்பினனதுதானே என வெண்ணிச் சில நாளைக் கடத்தினர். இப்பொழுது ஐயருக்கு விதி பிரதிகூலமாக இருந்தமையின் அவருடைய முயற்சியும் வன்மையும் அறிவும் செல்வாக்

கும் வீணையின ! அந்தோ ! என்னசெய்வார் பாவம் ஐயர் ! உலகத்திலே நித்திய தரித்திரனுகப் பிறந்த ஒருவன் ஒருவேளை புசிக்க அன்னமில்லாவிடின் நான்கு வீடுசென்று பிச்சையெடுத்து வயிருர வுண்டு தன் பெண்டு பிள்ளைகளுடன் கவலையற்றுக் களித்திருப்பான். பரம்பரையாக கண்யமுள்ள குலத்திலே பிறந்தவரும் கஷ்டமென்பதைக் கனவிலுங் கண்டறியாதவரும் மானமென்னும் காவலுக்குள் கட்டுண்டவருமாகிய ஒருவர் தமது நிலை கெடில் எங்ஙனம் துன்பத்தினின்று நீங்குவர்? யாருடன் மானத்தைவிட்டு மனக் கவலைகளைச் சொல்லி உதவியைப் பெற்றுக் கஷ்டங்களைப் பரிகரித்துக்கொள்வர்? ஒருவிதத்திலும் பிரவேசிக்கத் துணியாமல் இச்சமயம் ஜீவனை யிழக்க நேரிடின் அதனை மேலென்று நினைப்பாரன்றோ? ஐயரும் கண்யமுள்ள குலத்திற் பிறந்த வித்பந்நராதலால், பொறுத்தற்கரிய கடன்காரரின் தொந்தரவுகளைப் பொறுத்துக்கொண்டு எப்பாடு பட்டேனுங் கடனை யொழிப்பதே முதலிற் செய்யத்தக்கதெனத் துணிந்து அதிலேயே கவனஞ் செலுத்திவந்தார்.

இவ்வாறு கடனென்னும் மேகம் பரவி வெளிக் கிளம்பவொட்டாமல் ஐயரைச் சூழ்ந்துகொண்டிருக்கையில் ஜடாவல்லவருடைய மனைவியை வீட்டுக்கழைக்க வேண்டிய அவசியமும் அவர் தங்கை ஸ்ரீமதியை புக்ககத்திற்கு அனுப்பவேண்டிய அவசியமும் நேர்ந்தன. அவ்விரண்டும் கோடைமழை யாரம்பத்திலே யுண்டாகும் இடிகள்போலக் காணப்பட்டமையால் ஐயர் திடுக்கிட்டார் ! அப்பால், 'மேகஞ் சூழ்ந்து கவிந்து கொண்டபின் இடியிடிப்பதும் சகஜந்தானே'—எனவெண்ணி நடக்கவேண்டிய காரியத்திற் கவனஞ் செலுத்துவாராயினர்; அதுபற்றித் தஞ்சையிலே பி. ஏ., வகுப்பிற் படித்துக்கொண்டிருந்த ஸ்ரீமதியின் புருஷனுக்குக் கடித மெழுதினர். அவர், தாம் பி. ஏ., பாஸ் செய்த பின்பே பெண்ணை அழைத்துக்கொள்ள நிச்சயித்திருப்பதாக மறு கடிதம் எழுதி யனுப்பிவிட்டார். ஐயர் அக்கடிதம் கண்டதும் "கஷ்டத்தோடு கஷ்டமாக ஒழிக்க வேண்டியதை ஒழித்து ஓய்வுறுவோ மென்றிருந்த எண்ணத்திற்குத் தடை யேற்பட்டதும் ஈசன் செயலேயோ !—ஈசா ! இவன் வேறு கூத்துக்கட்டச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறன் போலிருக்கிறது ! மகத்தான பாபஞ்செய்துள்ள பாபியாகிய என்னை வேறு தண்டனைக்குள்ளாக்கி யிருக்கப்படாதா?—அநாசாரர்களும் ஈனமதி

யினருமாகிய மாப்பிள்ளைக ளென்னும் பேய்களிடமா என்னைக் காட்டிக் கொடுக்கவேண்டும்! நரகதுன்பம் வேறிருக்குமோ எனக்கு?''—என்றெண்ணி வருந்தி, மேகச்சாயை, துஷ்டனுடைய தயை, யௌவனம், பொருள் இவைகள் வெகு நாளைக்கு நில்லா. இதுபோல் நம்மை பாதிக்கு மித்துயரமும் விரைவிலே மாறும். ஆதலால் இனிச் செய்வன செய்தலே கடனென நிச்சயித்துத் தன் மருமகளை ஒரு நல்ல நாளிலே சுபவேளையிலே வீட்டிற்கழைத்தார். ஐயர் வறுமையுற்றவரா யிருப்பினும் இக்காலத்தில் எது செய்யத் தக்கதோ அதனைச் செய்து மகிழ்ந்தார். புலி பசித்தாலும் புல்லைத் தின்னுதன்றோ?—

திரிபுரசுந்தரி யென்னும் திவ்ய திருநாமம் புனைந்த ஜடாவல்லவரின் மனைவி வீட்டிற்கு வந்ததும் ஐயர் திருமகளே வீட்டிற்கு வந்ததாக எண்ணிக்கொண்டு தமக்கிருந்த கவலைகளையெல்லாம் மறந்தார்; காணுதகதி கண்டதாக மகிழ்ந்தார்; கருணைக் கடலாகிய கடவுளைத் தியானஞ்செய்தார். "கொடு நரகுற்றுலு முனைக்கூறுந் திடமொழியேன்" என்று பரமபக்தன் கூறியபடி—நன்மையிலும் தீமையிலும் லோக நாயகனைத் தியானிப்பது நல்லோர் இயல்பன்றோ?—

ஜடாவல்லவர் இப்பொழுது தந்தை வகித்த குடும்ப பாரத்தைத்தாம் வகிக்கவும் அவரைச் சிரமத்தினின்று நீக்கிக்காக்கவும் திருவுளங்கொண்டு முயற்சிசெய்வாராயினர். அங்ஙனம் அவர் முன்வந்ததைக் கண்ட ஐயர், தன் அரசுரிமையைத் தநயன்பாலொப்புவிக்கத் திருவுளங்கொண்டு ஸ்ரீராமனை யழைத்து அரசுரிமை யேற்கப் பணித்தபொழுது அவன், "அங்ஙனமே செய்வன்" எனக் கரங்குவித்து விடைதந்தது கண்டு உவந்த தசரதர் போல மகிழ்வுற்றார். ஆனல் அதே நிமிஷத்தில் கைகேயி வரங் கேட்டதும் துயருற்ற தசரதர்போலத் தாம் தமது தநயனைக் கடன் என்னும் பகைவர்பால் காட்டிக்கொடுக்க நேர்ந்தமையை எண்ணிக் கலங்கித் துயருற்றார். பின்னர், "விளங்கும் பரம்பொருளின் விளையாட்டையல்லாமல் வேறுபடும் கருத்துண்டோ?—எல்லாம் அவன் செயல்"—எனக் கருதிச் சாந்தமுற்றார். தெய்வ நம்பிக்கை கொண்டு இந்திரிய மென்னுங் குஞ்சரத்தை ஞான மென்னும் கயிற்றினல் சிந்தனையென்கிற தூணிலே சேர்த்துப் பிணித்து இருளே உலகத்தியற்கை—என்னும் உணர்விலே விளங்குமவர்கட்கு, எல்லாம் இறைவன் செயல் என்னும் மெய்வாக்கு

முன்னின்று சித்தத்தைத் தெளிவிக்குமென்னும் உண்மையை ஐயர் சரித்திரத்திலே காண்பது ஒரு வியப்பாகுமா?—ஐயர்,—

" இறந்த பிறப்பிற்ருஞ் செய்த வினையைப்
பிறந்த பிறப்பா லறிக—பிறந்திருந்து
செய்யும் வினையா லறிக வினிப்பிறந்
தெய்தும் வினையின் பயன் "

என்னும் உண்மை விளக்க முடையவரன்றே?—

நிற்க—இங்ஙனம் ஸம்ஸாரமாகிய துயரக் கடலிலே உழலும் ஐயர் இதினின்று என்று நம்மைக் கரையேற்றுவாளோ ஜகதீசன் தெரியவில்லையே என ஒவ்வொரு நாளுமன்றி ஒவ்வொரு கணமும் எதிர்பார்த்துக்கொண் டிருந்தமையினால் அவருடைய திருவுளக் கருத்து முற்றுப்பெறும் நாள் கூடிற்று. கூடவே ஐயர் மரணத் திற்குக் காரணமாக ஒரு சிறு நோயின் வாய்ப்பட்டுப் பரகதி யடைந்தார். ஜடாவல்லவர், தந்தையிறந்ததும் சாற்றொணாத துயருற்றனரெனினும் அவருள்ளத்தில்—

" இன்றுளார் இன்றேயும் மாய்வ ரவருடைமை
அன்றே பிறருடைமை யாயிருக்கும்—நின்ற
கருமத்த தல்லாத கூற்றின் கீழ் வாழ்வார்
தருமந் தலைநிற்ற னன்று "

என்னும் அருமைத் திருவாக்காகிய விளக்கு உலக மயக்கமாகிய இருள்பிரிந் தோடத் தோன்றியது. தோன்றியவளவில் ஜடா வல்லவர் தெளிவுற்றுத் தந்தைக்குச் செய்ய வேண்டிய நீர்க்கடன் முதலியன செய்து முடித்துத் தமக்குரிய ஒழுக்கம் என்னும் குன்றின்கண் நின்று தமது கடமையிலே முயலச் சிந்தை செலுத் துவாராயினர்.



## அத்தியாயம்—8

" மருவிய காதன் மனையாளுந் தானும்
இருவரும் பூண்டீர்ப்பி னல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை என்னும் இயல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று "

உலக வாழ்விலே அநுபவமுடையவர்கள் குடும்பத்தை ஓர் இராஜ்யத்திற்கு ஒப்பிட்டுப் பேசுவதை நாம் கேட்கின்றோம்,

ஏன்?—குடும்பத்தை நிர்வகிப்பவர்க்கு, ஓர் அரசனுக்குத் தன் இராஜ்யத்தை நிர்வகிப்பதில் எவ்வளவு கஷ்டமிருக்கின்றதோ அவ்வளவு கஷ்டமுண்டென்பது குடும்ப அநுபவமுடையா ரனைவர்க்கும் நன்கு விளங்கும். அதுபற்றியே அதனை இராஜ்யபாரத்திற்கு நேராகக் கூறுகின்றனர். ஓர் அரசன் தன் அரசைக் காப்பாற்ற ஏராளமான செல்வமும் மந்திரிகளின் பலமும் சேனைபலமும் குடிகளின் விசுவாச பலமும் இன்றியமையாத சாதனங்களாகக் கொண்டிருக்கிறானல்லவா? இருப்பினும் அரசனுக்குத் தன் பொக்கிஷத்தைக் காப்பதிலும் விருத்தி செய்வதிலும் கோமுறைகோடாமல் அரசியற்றுவதிலும் குடிகளுக்கு வேண்டுவன அறிந்துதவுவதிலும் பெருங் கவலைகளேற்படும். 'உனக்கென்ன குறைவு! நீ மஹாராஜன்! என்பது உபசார வழக்கிலே சாதாரண ஜனங்களிடத்தில் பிறக்கும் மொழிகளாம். ஆழ்ந்த கருத்தினராகிய அறிஞர் அவ்வாறு கூறார்; அரசுரிமையையும் ஒரு பெரிதாக நினையார்.

இவ்வாறே குடும்பத்திற்கு—பொருள் வருவாய், வாழ்க்கைத் துணைவியாகிய மந்திரி, சுற்றத்தினராகிய சேனை, ஊராரின் உயர்ந்த மதிப்பிலே பிறக்கும் அன்பு முதலியன இன்றியமையாத சாதனங்களாகின்றன. அரசனுக்கு அவனரசை யாளுதற்குரிய சகல சாதனங்களும் குறைவின்றி அமைந்தவிடத்தும் எப்படிக் கவலை குறைவுறாமலிருக்கின்றதோ அப்படியே குடும்பத் தலைவனுக்கும் அவனுடைய குடும்பத்தை நடத்தற்குரிய சாதனங்களனைத்தும் அமைந்திருப்பினும் கவலை நீங்கிற்றென்று சொல்வதற்கிடமிராது. இப்படி யிருக்கின்றமையின், குறிப்பிடப்பட்ட சாதனங்களிலே குறைவேற்படின் குடும்பபாரம் வகிப்பதில் கஷ்டமும் கவலையும் மிகுமென்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா?—எத்தனை பேர் பொருளில்லாக் குறைவால் கடனுக்குள்ளாகிக் குடும்பத்தை விட்டு ஓடியிருக்கின்றனர்? எத்தனை பேர் தற்கொலை செய்துகொண்டிருக்கின்றனர்? எத்தனை பேர் இல்லிற்கியைந்த மனைவி வாய்க்கப் பெறாமையினால் பெருந் தொந்தரைக்காளாய்க் குடும்பத்தை வெறுத்திருக்கின்றனர்? இத்தகைய குடும்ப வாழ்வை ஒளவைப் பிராட்டியார் "இல்லறமல்லது நல்லறமன்று"—என்று சிறப்பித்துப் பேசியிருப்பதேனெனில், இல்லறம் துறவறம் என்னும் இரண்டு வழிகளில் துறவறத்திற் செல்வது கஷ்டமானதென்றும் இல்லறத்

திற் செல்வதே எளிதென்றும் பெரியார் அநுபவத்திலே கண்டறிந்துள்ளாராதலின் மாந்தர்கள் எளிய வழியிலே நின்று உய்யுமாறு இரக்கங்கொண்டு உபதேசித்ததாம். இல்லறத்திற் பெருங் கஷ்டமிருப்பதாகக் காணப்படினும் அதனைச் சுளுவிலே நடத்தற்குரிய முக்கியமான சாதனம் மனைமாட்சி என்பது பெரியார் அநுபவத்திலே கண்டதாகும். இதனாலேதான்,

"இல்லதென் இல்லவள் மாண்பானால்; உள்ளதென்
இல்லவள் மாணக் கடை"

என்றார் திருவள்ளுவர் என்னும் இல்லறஞானியார். அன்றியும்—

"பர்த்தாவிற் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி வாழலாம்—சற்றேனும்
ஏறு மாறாக இருப்பாளே யாமாகில்
கூறாமற் சன்னியாசங் கொள்"

என்று போந்த போதனையும் மனைமாண்பமையின், குடும்பம் எப்படியும் நடைபெறும் என்பதை உறுதிப்படுத்தவேயாம். தவிரவும்—"இல்லாளகத்திருக்க இல்லாத தொன்றில்லை" என்றார் இன்னொருவர்.

உலகத்திலே ஒருவனுக்கு இல்விற்கியைந்த மாண்புடைய ஒரு மனைவி யமைவது பெரிய புண்யவசமென்றும் அது அரிதினும் அரிதான பேறென்றும் அநுபவ முதிர்ச்சியுடையோர் பேசுகின்றனர். நூல்களும் இங்ஙனமே முறையிடுகின்றன. உலகத்திலே உயர்குணமமைந்த மனைவியினால் ஒருவன் உயர்வதையும் தாழ்ந்த குணமுள்ள மனைவியினால் ஒருவன் தாழ்வதையும் பிரத்தியக்ஷத்திலும் பார்க்கின்றோம். அல்லாமலும் மகாகவி கம்பர் இராமாயணத்திலே—

"எண்பொருட் டொன்றநின் றெவரு மெண்ணினால்
விண்பொருட் டொன்றிய வுயர்வு மீட்சியும்
பெண்பொருட் டன்றியும் பிறிதுண்டா மெனில்
மண்பொருட் டன்றியும் வரவும் வல்லதோ"

என்று உயர்வும் தாழ்வும் ஒருவனுக்குப் பெண் மண் இவற்றினால் வருவனவென விளக்கி யிருப்பதும் அநுபவ மொழியன்றோ?

இப்படிப்பட்ட குடும்பபாரத்தைத் தமது குமாரனாகிய ஜடாவல்லவர் மீது சுமத்திச் சென்ற ஐயர், அதற்கேற்ற சாதனங்களில் இன்றியமையாததான பொருள் என்பதை வைக்கா

விடினும் நன்மை தீமையுணர்ந்து நடக்கத்தக்க கல்விச் செல்வத்தை அவருக்குக் கொடுத்திருப்பதையும் நல்ல குணசாலியான பெண்ணைத் தேடி மணஞ் செய்வித்திருப்பதையும் கண்ட புத்திமான்களனைவரும் ஐயர் தமது குமாரனுக்குக் கடனை வைத்துவிட்டுப் போனதைப் பற்றி வருந்தினார்களில்லை. ஜடாவல்லவரும் தமது தந்தை தமக்குக் கடன் வைத்துவிட்டுக் காலஞ்சென்றதைக் குறித்து வருந்தவில்லை.

"இல்லாரை யெல்லாரு மெள்ளுவர்,
செல்வரை யெல்லாருஞ் செய்வர் சிறப்பு"

என்னும் பொய்யா மொழியும் இவரிடம் பொய்யாயது. இவரை எவரும் இல்லாமை கண்டு இகழ்வதில்லை; படித்தவர் என்று மதித்து வந்தனர்; குணங்கண்டு மணங்கொண்ட மலரெனமகிழ்ந்தேற்றனர். ஆதலின் ஜடாவல்லவர் இல்லாமையினால் இகழ்ச்சியேற்படு மென்பதை யுணர்ந்தும் உணராதவர் போலிருந்தார். பரிசுத்தமான சித்தமுடையவர் 'இகழ்ச்சியுமொன்றே, புகழ்ச்சியுமொன்றே, இன்பதுன்பங்க ளெல்லாமொன்றே' என்றிருப்பவரன்றோ?—

ஜடாவல்லவரின் மனைவி திரிபுரசுந்தரியும், நல்ல அழகும் பசும் பொன்னை யொத்த மேனியும் பொறுமை, அடக்கம், அருள், பெரியாரைப் பேணுதல், கணவனுக்கடங்கி நடத்தல், தெய்வபக்தி—முதலிய உத்தம குணங்களும், நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு முதலிய குலமகட்குரிய இலக்ஷணங்களும் பொருந்தியவள்; தாய் பாஷையாகிய தமிழிலே இராமாயணம், பாரதம், பாகவதங்களைப் படித்துணரக்கூடிய கல்வியறிவுடையவள். ஆதலின் திரிபுரசுந்தரி,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை சான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்ற விதியை மேற்கொண்டு தன் பதியைப் பெருமைப்படுத்தி வந்தாள்; தன் கணவனுடைய இல்லாமை கண்டு இகழும் ஈனமதியினராகிய சில பெண்களுக்குக் குருவைப் போலவும் விளங்கினாள். அது கண்டார் "இல்லானை இல்லாளும் வேண்டாள்" என்னும் வாக்கினைப் பொய்ப்பிக்க வந்தவள் இந்த உத்தமி யெனவும் பேசிக்கொண்டனர். திரிபுரசுந்தரியின் தாய் தந்தையரும் உயர்ந்த குணமுடையவர்கள்; பரம்பரையாக ஒழுக்கம் பிழை

யாத மரபிலுத்தவர்கள். இவர்களுடைய தன்மையுணர்ந்த அவ் வூரினர், "குலத்தளவேயாகுங் குணம் என்னும் உண்மை இம் மங்கையிடத்துக் காண்கின்றோம்" என்று புகழ்ந்தனர். திரிபுரசுந் தரியின் இனிமையான பேச்சையும் தன்னடக்கத்தையும் தயாள சிந்தையையும் நடையுடை பாவனைகளையும் காணும் விவேகிகள், "இவளால் இக்குடியுயரும்" என்று பேசிக்கொண்டனர்; "அறிவு அறிவொடு சேர்ந்ததுபோலிருக்கின்றது இந்நங்கை ஜடாவல்லவ ருக்கு மனையாளாக வாய்த்தது" என்றும் பேசி வியந்தனர். 'இந் தப் புண்யவதி, பிறந்த குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் நற்கதி காட்டவந்தவளென்பதி லையமில்லை" என்றும் எண்ணி மகிழ்ந் தனர். ஸ்திரீகளுட் பெரும்பான்மையர் பர்த்தாவிற்கேற்ற பதிவி ரதை என்று அடிக்கடி பேசுவாராயினர். திரிபுரசுந்தரியின், இப் படிப்பட்ட பெருங்குண மனைத்தும் ஜடாவல்லவரின் கவலையை மாற்றும் அருமருந்துகளாயின. ஆதலின் ஜடாவல்லவர் கடவுளின் திருவருள் வாய்த்ததுபோல அகமகிழ்ந்தார்; தந்தையிருந்து காண்பதற்கில்லையே யென்றும் வருந்திஞர்; ஆனல், கடவுளுண்டு என்பதையும் உலகம் கடவுளின் பிரேரேபணைப்படி செல்வது என் னும் உண்மையையும் உணர்ந்த மேலோர், நாஸ்திகர் கூட்டத் திலே ஒட்டியும் ஒட்டாமலு மிருப்பதுபோலத் தமது உள்ளக் கிடக்கையை ஒருவரிடமும் காட்டாமல் உலாவிவந்தார்; இவரிப் படி யிருப்பதை "உள்ளத்தினுள்ளதை யுரையின் முந்துற, மேள் ளத் தம் முகங்களே விளம்புமாகலான்...." எனக் கம்பர் கூறியபடி இவருடைய முகங்காட்டக் கண்டுணர்ந்த சில விவேகசீலர்கள் பெருமகிழ்வெய்தினர். அறிவுடைய உள்ளத்திற்கு யாவும் பளிங்கி னுட் பண்டம்போல் விளங்குமன்றோ?—இப்பொழுது லக்ஷ்மி யம்மாள் தான் தன் கணவனை யிழந்ததையும் மறந்து தன் மரு மகளாகிய திரிபுரசுந்தரியின் குணங்கண்டு மகிழ்ந்தாள். இவ ளுடைய உள்ளம் ஜடாவல்லவரைத் தன் வயிற்றுப் பிள்ளையைப் போலன்றோ பார்க்கின்றது? இது என்னுடையது பிறனுடை யது என்னும் வித்தியாசங் காணும்போ தல்லவா அகங்காரம், அழுக்காறு, வெறுப்பு முதலிய தீய குணங்கள் தோன்றித் தொல்லைகளுக் குள்ளாக்குகின்றன? இதனாலன்றோ ஞானிகள்— நான், நீ, என்னுடையது, உன்னுடையது என்னும் வித்தியாச மொழிந்த சமபாவனை யுடையவர்க்கன்றி ஏனையவர்க் கின்பமில்லை என்று போதிக்கின்றனர் அடிக்கடி. பரிசுத்தம் எப்போதும்

பரிசுத்தத்தையே காட்டும் என்பது உண்மை மொழியல்லவா? வித்தியாசமில்லாத உணர்ச்சியிருக்கும் வரையில் சந்தர்ப்பங்களும் சமயங்களும் காற்றுகளும் அலைகளுங்கூடச் சாதகமா யிருக்கும் என்பது பெரியார் கண்ட உண்மையல்லவா? பேத எண்ணம் ஏற்பட்ட அப்போதே உற்றாரும் உறவினரும் நண்பரும் பகையாவர் என்பதும் பெரியார் அநுபவமொழியன்றோ? லக்ஷ்மியம்மாள் இப்பொழுதுகொண்டுள்ள இந்த எண்ணத்தையே முற்று முடையவளா யிருப்பின் பேரும்புகழும் கண்ணியமுமடைந்து விளங்குவாளாதலால் வாசகர்கள் கவனித்து வருவார்களாக—

நிற்க—ஜடாவல்லவர் குடும்பத்தை நடத்த அநுபவமில்லாதவராய் இருப்பினும் தம்மால் கூடியவரையில் தமது புத்தியைக் கொண்டு அதை ஒழுங்காக நடத்திவந்தார். ஆனால் இவர்க்கு விவசாயத்திலே சிறிதும் பழக்கமில்லாமற்போனது சில கஷ்டங்களை விளைவித்தது. ஆனதுபற்றி ஜடாவல்லவர் அப்போது தமக்கிருந்த நிலங்களைக் குத்தகைக்கடைத்து, அதனால் கிடைக்கும் சொற்ப வருவாயினால் காலக்ஷேபத்திற்கு வசதி தேடிக்கொண்டார். இவர் சொந்தத்திலே நிலத்தைச் சாகுபடி செய்துவருவாராயின், வருவாய் அதிகமாகக் கிடைக்கும். அப்பொழுது கடனுக்குக் கொஞ்சம் வருஷந்தோறுங் கொடுத்து வரவுங்கூடும். அதற்கியலாமற்போனது பற்றி இவர் வருத்தங் கொண்டார். ஆனால் கடனை யடைப்பதிலே பெருமுயற்சி செய்யவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. இப்பொழுது தான் ஜடாவல்லவர் பொருளில்லாத குறைவை யுணர்ந்தார்; தமது தந்தை வீண் டம்பக்காரர்களின் டாம்பீகத்திற் கிணங்கி விவாக முதலியவற்றிற்கு மிகுந்த பணச் செலவு செய்தது தவறென்பதை யறிந்தார்; இச்சமயம் தாம் செய்ய வேண்டியதையும் அறிய முடியாதவராயிருந்தார். அவருடைய அறிவிற்கு ஒரு மயக்கமேற்பட்டது. நெஞ்சம் சஞ்சலமடைந்தது. ஆயினும் வீட்டில் திரிபுரசுந்தரி சமயத்திற்கேற்றபடி நடந்து தம்மை மகிழ்விப்பது அவருக்குப் பெரிய ஆறுதலை யளித்தது

இக்காலத்தில் பி. ஏ. ஸீனியர் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த அவருடைய தங்கை ஸ்ரீமதியின் கணவனுக்குத் தமது தந்தை வாக்களித்திருந்தபடி பள்ளிக்கூடத்துச் சம்பள முதலிய செலவுக்கு மாதந்தோறும் தவறாமல் கொடுத்து வரவேண்டிய

தாய் நேரிட்டிருந்த அவசியம் இவரை மிகவும் தொந்தரை செய்தது. இதனினும் கடன்காரர் தொந்தரவே பொறுக்க முடியாததாயிருந்தமையால் ஜடாவல்லவர், நஷ்டத்தைக் கவனியாமல் நிலங்களிற் சிலவற்றை விற்று நிர்ப்பந்தமான கடன்களை யொழித்துக் கவலை நீங்கிற்றென் றிருந்தார். ஆனால் தம்முடைய தங்கை ஸ்ரீமதியைக் கணவன் வீட்டிற்கனுப்பாமல் வைத்திருப்பதை யொரு பாபமாகக் கருதிக் கவலைகொண்டமையால் அது வாளைப் போல அவர் நெஞ்சை அறுத்துக்கொண்டிருந்தது.

இப்படி யிருக்கையில் மாப்பிள்ளை பி. ஏ. பாஸ் செய்து விட்டதாகக் கடிதம் வந்தது. கண்டதும், "போகட்டும்; பரீக்ஷையில் தேறினனே! தேறாமல் இன்னுமொரு வருஷம் படிக்கத் தொடங்கி நம்மைக் கஷ்டத்திற்குள்ளாக்காமல் இந்தமட்டோடு விட்டானே! இவன் புண்யவான்றான்—இனிப் பெண்ணை வீட்டிற்கு அழைத்துக்கொள்ள ஆக்ஷேபனை யிராது" என நினைத்து மாப்பிள்ளைக்குக் கடிதமொன்று எழுதினர். மாப்பிள்ளை தாம் பட்டணம்போய் லாக்காலேஜில் சேர்ந்து படிக்க உத்தேசித்திருப்பதாயும் அப்படிச் சேர்ந்து படித்துப் பரீக்ஷைதேறிய பிறகு தான் பெண்ணை யழைத்துக்கொள்ளக் கூடுமென்றும் அந்தப் படிப்பிற்கு ஏற்படுஞ் செலவை நீரே அனுப்பவேண்டுமென்றும் ஒரு பதிற் கடிதம் ஜடாவல்லவருக் கனுப்பினர். ஜடாவல்லவர் அதைக் கண்டதும் மரம்போலச் சற்று நேரம் திகைத்து நின்று விட்டார்; தங்களுக்கேற்பட்ட அந்த சம்பந்தத்தை யெண்ணி இது நாம் செய்தபாபம் போலும் என மயங்கினர். லக்ஷ்மியம்மாள் பணத்தின் அருமை தெரியாதவளாதலால், மாப்பிள்ளையின் எண்ணப்படி பொருள் கொடுத்து விடுவதென எண்ணினள். எண்ணி என்னசெய்வாள்! தன்னிஷ்டப்படி கூத்துப்பொம்மை போல் ஆடிவந்த தன் புருஷனில்லாமையாலும் பொருள் கிடைப்பதருமையா யிருந்தமையாலும் தன் எண்ணத்தை வாய்விட்டொருவரோடுஞ் சொல்லாமல் மனத்திற்குள்ளேயே வைத்துக்கொண்டு புழுங்கினள். ஜடாவல்லவர், பொருளைப் பொருட்படுத்துங் குணமுடையவரல்லர். ஆயினும், அப்பொழுது அவருக்குப் பொருள் கிடைப்பது கஷ்டமாயிருந்தமையால், ஆனதாகட்டு மென்றிருந்து விடுவோமாவென் றெண்ணினர்; பின்பு "இதனால் நமக்கும் நம் சிறிய தாயாருக்கும் வருத்தம் வருமே; அதைச்சகிக்க நம்மலாகாது; எதுபோனாலும் போகட்

டும்; நமக்கில்லாவிட்டால் நாம் பிச்சை யெடுத்துண்போம், இந்தப் பாபத்தைத் தொலைப்பதே நன்மை" என்று துணிந்து ஓர் ஏக்கர் நிலத்தை ரூபா ஐந்நூறுக்கு ஈடுவைத்து அத்தொகையை மாப்பிள்ளைக்கு அனுப்பித் தந்தார். மாப்பிள்ளை அதை மான வெட்கமின்றிப் பெற்றுக்கொண்டு படித்துப் பரீக்ஷையிலே தேறிப் பின்பு பெண்ணை யழைத்துக் கொண்டார். லக்ஷ்மியம்மாளுக்குப் புருஷன் இறந்த விசனமும் போய்விட்டது. முகமும் தெளிவடைந்தது. ஜடாவல்லவரும் பெருந் தொல்லைகள் பல விட்டொழிந்தனவென்றிருந்தார்.

இப்பொழுது ஜடாவல்லவர் மனம் சேற்றிலே தவறி விழுந்தவன் நல்ல ஆற்றிலே குளித்துச் சுத்தமடையப் பெற்றதுபோல் சமாதானமடைந்தது. திரிபுர சுந்தரியும் "முன் பட்ட கடன் போனு மிவையெல்லாம்; கடன் விடாது என்னும் உண்மை கண்டோம்"—எனவெண்ணிக் கடவுளின் திருவருணோக்கத்தை யெதிர்பார்த்தவளா யிருந்தாள்.

இப்படி யிருக்கையில் ஒருநாள் மாலை மூன்றுமணிக்கு ஜடாவல்லவர் தமது நில விற்பனை விஷயமாய் வேறோர் ஊருக்குச் சென்றிருந்து காவிரி நதியைக் கடந்து வேகமாக வந்துகொண்டிருந்தார். இவர் ஊரை நெருங்கியபோது ஒரு வாலிபனோடு நால்வர் சூழ்ந்து ஏதோ பேசிக்கொண்டு வருவதைக் கண்டார்; கண்டதும் அதனை யறிய அவாக்கொண்டார்; உடனே அவர்களில் ஒருவன் "இதோ ஜடாவல்லவர் வந்துவிட்டார்! நல்ல வேளையாயிற்று" என்று கூறக் கேட்டார். அவர்களும் நெருங்கிவந்தனர். ஜடாவல்லவர், "என்ன சங்கதி? இவன் யார்? இவனையேன் சூழ்ந்து செலகின்றீர்கள்?" என்று நால்வரையும் பார்த்துக் கேட்டார். அவர்கள் "உங்கள் வீட்டுச் செய்திதான்! வீட்டுக்குப் போங்கள் நீங்கள். இதோ இவனை யழைத்துக்கொண்டு வருகின்றோம்" என்றார்கள். ஜடாவல்லவர், இதைக் கேட்டதும் பிரமித்து, "என்ன இது! எங்கள்வீட்டுச் செய்தியாவது! இவன் எந்த ஊர்?" என்று கேட்டார். அவர்கள் "மதுரையிலிருக்கும் மாப்பிள்ளையிடமிருந்து வந்த ஆளிவன். இவனிடம் அவ்வூர்ச் செய்தி விசாரித்துக்கொண்டிருக்கின்றோம்" என்றனர். ஜடாவல்லவர் "இப்போது மதுரையிலிருந்து ஆள்வரக் காரணமென்ன?" என வினவ, அவர்கள் "வீட்டுக்குப் போங்கள் இதோ வருகின்றோம் இவனுடன்; விசேஷ மொன்றுமில்லை"

என்று கூறினர். ஜடாவல்லவர், பலபல ஆலோசனையோடு அங்கிருந்து வீடுவந்துசேர்ந்தார்; வீட்டுத் தெருக்கதவு தாளிட்டிருந்தமையால் அம்மா அம்மா என்று கூப்பிட்டிரண்டுமுறை கதவைத் தட்டினர். உடனே லக்ஷ்மியம்மாள் "என்னப்பா வாடா! குழந்தையைப் பாவி அநியாயமாய்க் கொன்றுவிட்டானடா" என்று சொல்லிக்கொண்டே கதவைத் திறந்தாள். ஜடாவல்லவர் இச்சொற்களைக் கேட்டதும் நடுநடுங்கிப்போய், "என்ன! என்ன! செய்தியென்ன!" என்று பரபரப்போடு கேட்டார். லக்ஷ்மியம்மாள், "வா சொல்லுகின்றேன்! குழந்தையைப் பாரடா! பாவிபடுத்தியிருக்கும் பாட்டை! யார் கண்டு சகிப்பார்களடா—" என்று சொல்லிக்கொண்டே உள்ளே போனள். ஜடாவல்லவரும் "என்ன கூத்திது" என்றெண்ணிக் கொண்டே வீட்டிற்குட் சென்ருர்; அங்கே ஜானகி தலை குனிந்தவாறு சுவரோரத்திலே கண்களிலிருந்து நீர் பெருகி நிலத்திலே சொட்ட நின்றுகொண்டிருக்கக் கண்டார். அந்தக் காட்சி நூலாசிரியராகிய எமக்குங் கிடைத்தமையால் அதனை விளக்க வந்த நாம் இங்கொரு படம்வரைந்து காட்டியிருப்போமாயின் உங்கட்குத்திருப்தியாயிருக்கும். அங்ஙனம் காட்டினல், உங்கள் மனம் அந்தப் பரிதாப நிலைமையைப் பார்க்கப் பொருமல் வருந்துமென அஞ்சி—பெரு மழையிலும் காற்றிலும் அடிபட்ட இளங் கொடிபோலிருந்தது அப்பெண்மணி நின்ற அத்தோற்றம்—என்று கூறி வேறு பேசுகின்ருேம்; மன்னிப்பீர்களாக:—

இங்ஙனம் கல்லும் புல்லுங் கனிந்துருகத் துயரமென்னுஞ் சுமை தாங்கமாட்டாமல் தலைகுனிந்து நின்றுகொண்டிருந்த சகோதரியைக் கண்டதும் ஜடாவல்லவர் கன்றைக் கண்ட பசுவென நெருங்கி, "என்ன நேர்ந்தது? காரணமென்ன? உன்னை யார் அழைத்துவந்தது?" என்று கேட்டார். ஜானகி அழுதுகொண்டே தன்னருகிலிருந்த பெட்டியைத் திறந்து ஒரு கடிதத்தை யெடுத்துக்கொடுத்தாள். ஜடாவல்லவர், வாங்கிப் படித்துப் பார்த்து, "ஓகோ! நல்ல புத்திசாலித்தனம்! கொண்ட மனைவியை ஆளத்தெரியாத இவனுக்கெல்லாம் உலகம் இடந்தருகின்றதே! என்ன அறிவீனம்! எங்கும் நிறைந்த கருணாநிதியாகிய ஜகதீசன் இதைப் பொறுப்பனே?—பட்ட பாடுகளையும் சொன்ன புத்திமதியையும் மறந்தானே மடையன்!—

" கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ உணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து "—(நீதிநெறி விளக்கம்.)

என்று நீதிநூல் போதிக்கும் உண்மை வெளிப்படுகிறது இவனிடம்! ஆகா! பி. ஏ. என்று வெளிவந்த இவனுக்குச் சாதாரண அறிவுகூட இல்லையே! அம்மா! மடையன் எழுதியிருப்பதைக் கவனியுங்கள்!—

உன் தங்கைக்கு என் அந்தஸ்திற்குரிய புடவைகளும் நகைகளுமில்லை. அவள் அப்படியிருப்பதெனக்கு வெட்கமாயிருக்கின்றது. அவளை இதனாலேதான் நான் **வெளியே உன் தலையைக் காட்டக்கூடாது** என்று கண்டித்திருந்தேன். அதனைக் கேளாமல் இவள் ஒருநாள் மாலைவேளையிலே மேன்மாடியிலிருந்து ஊரறிய உலாவினாள். என் அலுவலிலிருந்து வரும்போது நான் அதைப்பார்த்துக் கொண்டே வந்தேன். எனக்குக் கோபம் என்னை அறியாமல் வந்துவிட்டது. அதனாலேதான் நன்றாய்த் தண்டித்து அவள் குற்றமுணர்ந்து நல்வழிப்பட வெண்ணிக் குற்றவாளியைச் சிறைச்சாலைக் கனுப்புவதுபோல என் ஆள்வசமாய் அவளை யுன் வீட்டிற் கனுப்பியிருக்கின்றேன். இன்னும் ஆறுமாதம்வரையில் அவள் என் முகத்திலே விழிப்பது கூடாது.—அதற்குள் அவளுயிரை விடினும் எனக்குச் சம்மதமே! வேறு மணம் வரதக்ஷிணையோடு செய்து கொண்டு சுகமாக இருப்பேன்—நீ வருத்தப்பட்டால் அது அறிவுடைமையாகாது—

என். சுந்தரம்—

"பார்த்தாயா ஓர் உத்தியோகஸ்தனுடைய கடிதத்தை! என்ன பிச்சைக்காரத்தனம்! கொண்ட மனைவிக்கு நகைகளும் புடவைகளும் வாங்கித்தர வேண்டியவன் புருஷனை யல்லாமல் பின்னை யாவன்? என்ன விந்தை இது!"—என்று சொல்லிக்கொண்டே ஜானகியைப் பார்த்து, "அம்மா! ஜானகி, உண்மை யென்ன?" என்று கேட்டார். ஜானகி "அண்ணா! நானெதைச் சொல்லட்டும் இச்சமயம்! நீங்கள் கோபங்கொள்வது கூடாது; தங்களுக்குக் கோபம் வராதென்பது நிச்சயம்; நான் செய்த தீவினையை நான் அநுபவிக்கின்றேன்"—

எனக் கூறி யழுதாள். ஜடாவல்லவர், "வருந்தாதே! சொல் உண்மையை" எனக் கேட்க, ஜானகி, "அண்ணு! அவரெழுதி யுள்ளதிலே, கோபங்கொண்டு என்னை யடித்தது மாத்திரம் உண்மையேயன்றி நான் மாடிமீதுலாவியதாக எழுதியிருப்பது பொய்! அவர் கையி லிப்போது ஒரு காசு கிடையாது. வரும் வரும்படி யெல்லாம் ஒரு மூடனுடைய நட்பினுலே வீண் செலவி லழிகின்றன. அதை வெளியிட எனக்கு விருப்பமில்லை. தாங்கள், ஸ்ரீமதி புருஷனுக்குச் சென்னையிற் படிக்கப் பணமனுப்பிய போது வந்த கோபமாகிய தீ இது! அது வெகு நாளாய்ப் புகைந்து கொண்டிருந்தது. அப்புகையி லகப்பட்டு நான் பல தொல்லைகளடைந்தேன். அவைகளைச் சொல்ல வேண்டுமெனில் இந்த ஒரு வாயும் என் ஆயுளும் போதா!—அந்தத் தீ நாளுக்கு நாள் கொழுந்துவிட்டு எரியத்தொடங்கியது. அதற்கேற்ப இல் லாமையும் சூறுவளி போலச் சேர்ந்தது. ஆகவே அவர் என்னை இக்கதியாக்கி யனுப்பி யிருக்கின்றார்—நான் உயிரைவிடத் தீர்மா னித்து விட்டேன்! தாங்கள் என்னை யிழப்பதுபற்றி வருந்த வேண்டாம்"—என்று கூறிக் கண்கலங்கினுள்.

ஜடாவல்லவர், "தெரிந்துகொண்டேன்! பணம்பறிக்க வழி யிது; அவனுக்குக் கொடுத்தவர்கள் நமக்கேன் கொடுக்கப்படா தென்னும் குரோதத்திலே விளைந்துள்ள கொடுமையிது! நல் லது!—ஜானகி! நீ துயரப்படவேண்டாம். நான் வேண்டுவன செய்கின்றேன்; உன்னைவந்து கும்பிடுபோட்டழைத்துப் போகும் படியான வழியைத் தேடுகின்றேன். பணம் வேண்டுமென்று கேட்டால் நாய்க்கெறிவதுபோலக் காசை யெறிந்துவிட்டு, இவை முன்ஜன்மத்திலே பட்ட கடனென நினைத்துக்கொள்கின்றேன்! இதற்கு இந்த யுக்தி தேடினுனை ஞான சூனியன்!" என்று பேசிக் கொண்டிருந்து பின்:—

"ஆன முதலி லதிகஞ் செலவானுல்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனு யேழ்பிறப்புந் தீயனுய்
நல்லார்க்கும் பொல்லானு நாடு"

என்பது போலாயிற்று மூடனின் கதி! சி! இவர்கள் வஞ்சகர் கள்!—இவர்களின் இயல்பு ஒரு நிலையி லிராது—இது திண்ணம்!

"விண்டுழி யொருநிலை நிற்பர் மெய்ம்முகம்
கண்டுழி யொருநிலை நிற்பர் கைப்பொருள்

கொண்டுழி யொருநிலை நிற்பர் கூழுடன்
உண்டுழி யொருநிலை நிற்பர் உற்றவர்"

என வஞ்சகரியல்பைப் பாடிக்காட்டிய கம்பரது திருவாய்மொழி பொய்யாகுமா ?—என்று கருதிப் பெண்பாவம் விடாது ! எனக் கூறித் தமது வேலையைக் கவனிக்கலாயினர்.



## அத்தியாயம்—9

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்"

மாமி யென்பவள் பெண்ணா, பேயா, பிரமராக்ஷஸியா, புலியா, குரங்கா—என்று கேள்வி கேட்போமாயின், மருமகளை மாடாகவெண்ணி நடத்தும் மாமிமார்களின் கீழ் வாழும் பெண், மாமியைப் பேயெனவும் பிரமராக்ஷஸியெனவும் புலி யெனவும் குரங்கென்வும் சொல்லப் பின் வாங்காள் ! சிந்திப்போமாயின் பிரமஹத்தியென்றும் மூதேவியென்றும் என்னைப் பிடித்து ஆட்ட வந்த சனியனென்றும் கூறத்துணிவாள் என்பது விளங்கும். மருமகளைத் தன் வயிற்றுப் பெண்ணைப்போல வெண்ணி நடத்தும் மாமிமார்களின் கீழ் வாழும் பெண், மாமியைத் தன்னை யீன்ற தாயாகிய மாதே யிவள் என்று அருள்கனியுந் திருமுகப் பொலிவொடு கூறுவாள் ; பின்னும் தன்னை யடிமைகொண்டு நல்ல வழியிலே நடத்தி யாளவந்த பிரத்யக்ஷமான தெய்வம் என்றுங் கரங்குவித்துக்கொண்டு திருமுகப்பொலிவொடு விடை பகர்வாள். இப்படிப்பட்ட வேற்றுமை காணப்படுவதேன் ?—

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கில்லை இருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்"—

என்னும் தமிழ்வேதத்திருவாக்கு, நெஞ்சில் அருளுடையவர்க்கு அதாவது கருணை யுடையவர்க்கு, தன்னுயிர்போலப் பிறவுயிரையும் எண்ணும் நல்லுணர்வுடையவர்க்கு நரகம் புகுதல் இல்லையென்று நமக்கு முன்னின்று போதிக்கின்றமையின், அருளாளாத மாமி துன்பத்தைக்கொடுக்கும் இகழ்ச்சியையும் அருளுடைமையையே தனக்குரிய ஆபரணமாய்க் கொண்ட மாமி இன்பத்தைக் கொடுக்கும் புகழ்ச்சியையும் அடைகின்றார்கள் என்பது

திண்ணம்! இப்பொழுது அருணிறைந்த மனமுடையவளாய்த் தன் மருமகள் தன்னை அன்னையாகப் பாவித்துப் பணி புரிய இன்பமநுபவிக்கும் பாக்கியசாலியான மாமியையும், தன் கணவனையீன்ற அன்னையை அதாவது தன் கணவனுக்கு முன்னறி தெய்வமாக விளங்குபவளைத் தானும் தனக்கு அன்னையாகவும் தெய்வமாகவுங்கொண்டு பணி புரிதலே தன் கடமையென்றுணர்ந்து உணர்ந்தவாறு தன் கடமையைச் செலுத்தித் தனக்கும் தன் கணவனுக்கும் புகழ்ச்சியைத் தேடும் மருமகளையுங் காண்பது குதிரைக் கொம்பெனவே வேண்டும். ஆனால் அப்படிப்பட்டவர்களிருக்கின்றார்கள் என்பது மாத்திரம் உண்மை! அதனாலேதான் சிறு மழையேனும் பெய்கின்றது. நல்லார் ஒருவருளரேல் அவர்பொருட் டெல்லார்க்கும் பெய்யுமழை—என்பது பெரியார் திருவாக்கன்றோ?—அந்தோ! மாமியாய் உயர்ந்தவள் தான் ஒரு மாமியின் கீழ் மருமகளா யிருந்தபோது தான் அவளிடம் பட்ட பாடுகளையும் தன்னுடைய மாமியிடங்கண்ட குறைகளையும் மறந்து தன் பதவியைப் பெரிதாக எண்ணி மருமகளைத் தன் அதிகாரத்திற் குட்படுத்தி வேலை வாங்குவதே தன் தொழிலெனத் தீர்மானிக்கின்றாள். அந்தத் தீர்மானங் குடிகொண்டவளவில், அது மருமகள் உலக அநுபவ மில்லாத ஒரு சிறுமியென்பதை நினைக்க வொட்டாமற் றடுக்கிறது. அப்படித் தடையேற்பட்டதும் செக்கிழுக்க வாணியன் சந்தையிலே மாடு விலைக்கு வாங்கிக்கொண்டு வருவதுபோலப் பெண்ணைப் பெற்றவர்களிடம் மருமகளைத் தன் வீட்டிற்குழைக்க விலைக்குக் கொண்ட மாடாக எண்ணுகின்றாள். எண்ணிய மாத்திரத்தில் மக்களாய்ப் பிறந்தவர்கட் கியற்கையாகவிருக்கும் அருள், மேகஞ் சூழ்ந்ததும் சந்திரன் மறைவதுபோல மறைகிறது. சந்திரன் மறைந்ததும் இருள் பரவுவதுபோல மாமியின் நெஞ்சிலே மடமையாகிய இருள் பரவுகிறது. மடமையாகிய இருள் பரவியதும் மாமி தன் மனம்போனவாறு நடக்கத்துணிகின்றாள்; பின், வாணியன் செக்கு மாட்டைத் தார்பாய்ச்சி இரக்கமின்றி ஒட்டுவதுபோல, தூறுதல், அவமதித்தல், பழி சுமத்தல், கடுஞ்சொற் கூறல், கோட்சொல்லல் முதலியனவாகிய பல தார்களைப் பாய்ச்சி மருமகளிடம் வேலை வாங்கி மகிழ்கின்றாள். அதே மாமி தன் மகளை அவள் மாமி கொடுமையாய் நடத்துவதாகச் செவியிற் கேட்கின் வருந்துகின்றாள்! அந்த மாமியைக் கெட்டவள்,

கொடுஞ்சூரி யென்று திட்டிச் சாகாளா இவள் எனவுஞ் சாபமிடு கின்ருள்! தன் மாப்பிள்ளையை அசடு, புத்தியில்லாதவன் என்று திட்டி வெறுக்கின்ருள்! மாப்பிள்ளை தன் வீடு வந்த போது அவனுக்குக் காசையும் நாவிற்கினிய சுவையுள்ள உண்டி யையுங் கொடுத்துத் தன் மகள் பேச்சுக் கேட்டு நடக்க உபதே சிக்கின்ருள்; இவையே யன்றி மந்திரவாதியிடஞ் சென்று விபூதி மந்திரித்து மாப்பிள்ளைக்குக் கொடுக்கின்ருள். அஞ்ஞானியான வள், வசியஞ்செய்ய மருந்து வாங்கியும் கொடுக்கின்ருள்; ஆனல் அவள் தன் மருமகளின் தாயும் தன் மகளின் நல்வாழ்வை இப் படியே விரும்புவாளென்பதையும் தன்னையும் அவள் இப்படித் தானே திட்டுவாளென்பதையும் கட்டோடு மறந்துவிடுகின் ருள்:—ஆகா! மருமகளென்பவள் தன் மகனுடைய அன்பிற் குரியவளல்லவா? அவளை மாமி தனக்கு வந்த பகையாக நினைத்து இரக்கமின்றி வேலை வாங்கும்போது தன் மகன் மனம் வருந்துவானே யென்பதை நினைக்கின்ருளா? ஒருவன் தாயி டத்து நல்லன்புடைய மகனுயிருந்தால் தாயின் வாழ்வு மணக் கின்றது! இல்லாவிட்டால் அவன் தாயை யடித்துத் துரத்த தாய் மகனைத் தூறிக்கொண்டு தெருவிலேக வாழ்வு தெருச் சிரிக்கத் தாழ்கின்றது!—அந்தோ! சோழ நாட்டிலே சில ஊர்களில் மரு மகள் வீட்டிற்குவந்த மறுநாளே அதிகாலையில் அவள் படுக்கையி னின்று எழுந்திருந்ததும் மாமி சாணிச் சட்டியையும் விளக்கு மாற்றையும் கையிற்கொடுத்துத் "தெருவிற்குச் சாணி தெளித்துப் பெருக்கிவிட்டுவா" என்று கட்டளையிடும் வழக்கமொன்று இன் னும் இருந்துகொண்டிருப்பதாகக் கேட்கின்ருேம்! இதனினும் மடமை வேறுண்டோ?—

மாமியின் கொடுமை இவ்வாறு இருக்கின்றமையின் **மாமி யின் கோடுமையும் மருமக்களின் துயரமும்** என்ற புத்தகம் வெளி வந்துலாவுவதைக் காண்கின்ருேம். இனி **மருமக்களின் கோண் டாட்டமும் மாமியின் துயரமும்** என்னும் புத்தகமும் வெளிவரு மென்பது திண்ணம் என்று நிச்சயிக்கத்தக்க அறிகுறிகள் பல காணப்படுகின்றன. இதுபற்றி வேறிடத்திலே பேசுவோம்:—

"என் மகனுக்கு எப்போது விவாகம் நடக்கும்? எப்போது நான் கண் குளிரப்பார்ப்பேன்! ஈசா! உன் கிருபை எப்போதுண் டாகும்?"—என்றெண்ணி ஈசனைத் தொழுதும் பூசித்தும் மரு மகளை யடைந்தவர்கள் எத்தனை பேர்! தம் புருஷரை நோக்கி

"குழந்தைக்கு வயசாயிற்றே! விவாகம் எப்போதுதான் செய்ய நினைத்திருக்கிறீர்கள்? உங்களுக்கு அந்த எண்ணமே இல்லாமலிருக்கின்றதே! சின்னஞ் சிறுவயதில் மணமேடையில் உட்காரவைத்தால் அழகாக இருக்குமோ! ஒந்திமாதிரி யுயர்ந்த பின் உட்காரவைத்தால் அழகாக இருக்குமோ! உங்களுக்கேனிது தெரியாமற்போகிறது?"—என்று வினவிக் கணவனைத் துன்புறுத்தி மருமகளை மகிழ்வுட னடைந்தவர்கள் எத்தனைபேர்! காசையும் நகைகளையும் கொட்டிக் கொடுத்து மருமகளையடைந்தவர்கள் எத்தனைபேர்—மருமகளை யடையும் நாள், எந்தநாளென்றறியப் பூசாலியை உடுக்கடிப்பித்துக் கேட்பவர்களும் சோதிடனிடம் சோதிடங் கேட்பவர்களும் எத்தனைபேர்! இவை யன்றித் தற்கால நாகரிக முறைப்படி தோசைக்கடையும் சோற்றுக்கடையும் வைத்து மகனை ஆங்கிலம் படிக்க வைத்து மருமகளை யடைந்தவர்கள் எத்தனைபேர்! ஆயிரம் இரண்டாயிரம் என்னும் வரதக்ஷிணையுடனும் விதவிதமான நகைகளுடனும் மருமகளை யடைந்தவர்கள் எத்தனைபேர்! ஆகா! இவ்வாறு இவர்களடையும் மருமகளைத் திருமணநாளிலே பெரு மகிழ்ச்சியோடு அலங்கரித்துத் தம் மடிமீது உட்கார வைத்துக்கொண்டு முத்தமிட்டுக் கொஞ்சியவர்கள் எத்தனைபேர்—! பிரார்த்தனைப்படி அடைந்த மருமகளையும் மஞ்சள் வேஷ்டியுடன் மகனையும் அழைத்துக் கொண்டு திருப்பதி, பழனி முதலிய தெய்வ ஸ்தலங்களுக்குச் சென்று பிரார்த்தனை செலுத்துகிறவர்கள் எத்தனைபேர்! தாய்க்குப் பிறகுதாரம் என்னும் முதுமொழியினையும் ஒருவன் பொருளினால் தாரத்தையும் தாரத்தினால் தன்னையுங் காத்துக்கொள்ளக் கடவன் என்னும் பெரியார் கட்டளையையும் கண்டுணர்ந்த மாமி தன் மருமகளைக் கொடுமைக்குள்ளாக்கத் துணிவளோ? தன் வீட்டையும் வீட்டினுடைமையையும் தன் மகனையும் காத்துக் குடும்ப அபிவிருத்தியை யுண்டாக்கவந்த திருமகள் என்றல்லவா கொண்டு அந்நங்கையைப் போற்றி வளர்த்துத் தன் அநுபவத்திலே கண்ட குடும்பக் காரியங்களில் நன்றாய்ப் பழக்கிவைத்து, கொண்ட கணவனை யாதரித்தல் குடும்ப வேலைகளை யொழுங்காகச் செய்தல், செட்டாகச் செலவிடல், குழந்தைகளை நன்றாய் வளர்த்தல், வரும் விருந்தோம்பி இல்லறம் வளர்த்தல் முதலிய நன்னெறிகளிலேஎன்றுங் குறைவுறாமலிருக்கச் செய்து புகழ்பெறுவாள்? ஒரு சிறுவனுக்கு எப்படி குரு ஏற்படவேண்டியது இன்றியமை

யாததாகுமோ அப்படியே ஒரு சிறுமிக்கு மாமியும் ஏற்பட்டுப் போதிக்கவேண்டியது இன்றியமையாததாம். மாமியின் கீழிருந்து பழகாத மருமகளின் அறிவு, குருமுக மறியாதவன் அறிவைப்போல் அவலமுறுமாதலின், அப்பெண்ணின் கீழ் நடைபெறும் குடும்பம் சீர்பெற நடவாதென்பது திண்ணம்! ஆகலின் குரு மாணவரின் நன்மையை நாடித் தமது கடமைப்படி மாணவனுக்குப் படிப்பை யளித்து அறிவென்னும் அழியாச் செல்வத்தைக் கொடுப்பதுபோல, மாமியும் மருமகளுக்குக் குடும்பத்தின் நன்மையை நாடிக் குடும்பப் பாதுகாப்புக்குரியவைகளை மகிழ்ச்சியொடு போதிப்பது தன் கடமை யென்றுணர்ந்தா லன்றி அவள் தன் மரியாதை கெடாமல் வாழ்வதரிதாகும். இதனையுணராத மாதர்க ளுலகில் மிகுதி யென்பதை ஒவ்வொருவரும் தமது அநுபவத்தி லுணர்வர். எனினும் மருமகளைத் துன்பத்திற்குள்ளாக்க வெண்ணித் தன் மகனுக்கு மருந்திட்டுக் கொன்று மருமகளை அமங்கலியாக்கி மகிழ்ந்த மாமியென்னும் கொலைகாரியும், மருமகளின்மேல் அபாண்டமான பழி சுமத்தி அதற்குத் தண்டனையாக அவளுக்குச் சூடிட்ட மாமியென்னும் காதகியும், சீர்கொண்டு வராமைக்காகச் சினந்து துன்பப்படுத்தி மருமகளைத் தாய் வீட்டிற்குத் துரத்திய மாமியென்னும் சண்டாளியும் வெட்கமிழந்து உலகத்திலுலாவுகின்றனர்கள் என்பது சிந்திக்கத்தக்கதாகும். கொலைகாரியாகவும் காதகியாகவும் சண்டாளியாகவும் இன்னும் பேய், பிசாசு, நாய், நரி முதலிய விலங்கினமாகவும் உலாவும் மாமிகளை யல்லாமல், தன் மருமகளின் புத்திசாலித்தனத்தையும் அவளுக்கும் தன் மகனுக்குமிருக்கும் அநுகூல தாம்பத்யத்தையுங் கண்டு, ஐயோ! நமது பெண்ணும் மருமகனும் இவ்வாறு ஒற்றுமை பாராட்டவில்லையேயென வருந்தி மருமகளிடம் பொறாமைகொண்டு அந்தப் பொறாமையிலிருந்து வெளிப்படும் கோபம், தாபம், அகங்காரம், மதம், மாற்சரியம் முதலியபாணங்களைப் பிரயோகித்து மருமகளைத் துன்பப்படுகுழியிலே வீழ்த்தி ஆனந்தமடையும் மாமியு முண்டென்பதைக் கவனிக்கும் வஞ்சமிலார் நெஞ்சம் அவர்களைச் சாபமிடுவதுந் தவிர அப்படிப் பட்டவர்கட்கு எமன் விதிக்கும் நகரதண்டனை யாதாகுமோ வென்றும் ஊகிக்குமல்லவா?—

*நிர்க*—இவ்வளவு தூரம் மாமியின் குணங்களைப் பேசிவந்ததேனெனின், ஒன்றைக் குறிப்பிட்டுப் பேச வரும்போது அதற்

குரிய எல்லைகளையும் மற்றும் ஏனைய அடையாளங்களையும் குறிப்பிடுவது இன்றியமையாததாகுமன்றோ? இப்படிப் பேசாவிடின், அது ஒரு பெரிய மனுஷன் முன்பு அஃதாவது ஒரு ஜமீன்தார் முன்பு அவனுடைய தயைபெற விரும்பிக் காத்துக்கொண்டிருக்கும் ஒருவன், அவன் கேட்ட ஒரு விஷயத்திற்கு விடைகூறத் தானறியாதவனாக விருந்தும் அறிந்தவன் போலப் பேசித் தானடைய வேண்டிய அவன் மதிப்பை இழந்தானென்னுங் கதையைப் போலல்லவா முடியும்? உலகத்தில் மாமியின் கொடுமையை யாவரு முணர்வாரெனினும் தீங்கைப் பல வகையாலும் எடுத்து எடுத்துக் காட்டி நலம் பெறச் செய்யும் வழியிலே நிற்க வேண்டியது நமது கடனெனக் கொண்டதே இதனை விரித்து எழுதத் தூண்டியதாம்—

வாசகர்களே!—உலகத்தில் இவை யனைத்தும் சேர்ந்த மாமி மகளுக்கிடையே காணப்படும் போராட்டமாக இருக்கும்போது லக்ஷ்மியம்மாளுக்கும் திரிபுரசுந்தரிக்கும் இடையில் ஒற்றுமையென்னும் ஒரு விளக்கு விளங்குவதெப்படி? பொறாமை,கோபம், வீண் பெருமை முதலிய இவை போன்ற பல வகையான காற்றுகள் வீசி விளக்கை யணைக்குமென்பது திண்ணமல்லவா? அப்படியே மேலே நாம் கூறியபடி மாமியென்கிற பர்வதத்திலிருந்து பொறாமை என்னும் காற்று வீசத்தொடங்கியது; தொடங்கிய சில நாட்களிலே பலத்து ஒற்றுமை யென்னும் விளக்கை யவித்ததுமன்றி ஜடாவல்லவர், திரிபுரசுந்தரி இவ்விருவர் மனத்தையுங் கலக்கிற்று! திரிபுரசுந்தரியின் குணங்கண்டு மகிழ்ந்துகொண்டிருந்த லக்ஷ்மியம்மாளுடைய மனத்திலே இப்படிப்பட்ட பொறாமை எப்படிப் புகுந்ததெனின், திரிபுரசுந்தரிக்கும் ஜடாவல்லவருக்கும் ஏற்பட்டிருக்கும் அநுகூலதாம்பத்தியம் நம்முடைய பெண் ஜானகிக்கு வாய்க்கவில்லையே யென்னுங் கவலையினால் பேதபுத்தி கொண்டமையாலேயாம்! பொறாமை பிறந்ததெனின், அது எதைச் செய்யத்தான் துணியாது—

"அரம்பொருத பொன்போலத் தேயும், உரம்பொரு
துட்பகை உற்ற குடி"

என்று தமிழ்வேதம் பேசுகிறபடி அது ஒரு குடியைக் கெடுக்குங் கொடுமைக் குணமன்றோ?

அந்தக் குணம் லக்ஷ்மியம்மாளைப் பிடித்ததும் அவள் பேய் பிடித்தவள் போலானாள். அவளது பேச்சும் செய்கையும்

மாறின. திரிபுரசுந்தரி தன் சிறு வயதில் மாமியின் மகிமையைப் பற்றித் தான் கேள்விப்பட்டவைகளை யெல்லாம் நேரிலே பார்த்து வருவதுமன்றி அநுபவத்திலும் அறியலானாள். திரிபுர சுந்தரி வயதிலே சிறியவளெனினும் பொறுமையிலே பூமிதேவி போலப் பெரியவளானதினால் தன்னுடைய மாமி என்ன சொன்ன போதிலும் யெதிர்த்து வாயாடாமல் பொறுமையி னாலே அவளை யெதிர்த்துக்கொண்டு வந்தாள். இந்த நற்குண மணியின் பொறுமை வளரவளர லக்ஷ்மியம்மாளின் பொறாமை மாலை வேளை வெயிலிலே விருத்தியாகும் நிழல்போல் வெகு வேக மாக வளர்ந்து வந்தது; அதனாலே லக்ஷ்மியம்மாளுக்குத் துக்க மும் தொடர்ந்து வளர்ந்தது. அவள் முகத்திலே மூதேவி குடி புகுந்தாள். திரிபுரசுந்தரி தன் மாமியின் உள்ளத்தை அவளு டைய முகக்குறிப்பினாலே தெரிந்துகொண்டு தனக்குத் தெரிந்த வரையில் குடும்ப வேலைகளை ஒழுங்காகச் செய்துவந்தாள்; வம்பு பேசுவது பெரிய துன்பந்தரும் என்பதை யுணர்ந்து தன் வேலை களைச் செய்து முடித்ததும் இராமாயணம் பாரதம் முதலிய நூல்களை யெடுத்துக்கொண்டு வெகு அமைதியாக ஓரிடத்தில் உட்கார்ந்து பொறுமை யென்னும் குணமே ஒரு பெண்ணுருக் கொண்டு வந்ததென்று அறிஞர் புகழுமாறு விஷயத்திலே கவ னஞ்செல்லத் தன் மனத்திற்குள் படித்துவரத் தொடங்கினாள்; தன்னைச் சூழ இருப்பவர்களிடம் மிகுந்த நேசம் பாராட்டினாள்; அறிஞர்களிடம் தெய்வபாவனை செய்துவந்தாள்; அவர்களுடைய வழியைப் பின்பற்றுவதிலே ஆவல் கொண்டாள்; ஏழைகளிடம் மிகுந்த இரக்கம் பாராட்டி வந்தாள்—இவையனைத்தும் மானிட ரிடம் கடவுள் விரும்பும் அருமையான குணங்கள் என்பதை ஜடாவல்லவர் அறிந்தமையினால் மிக மகிழ்ந்து, அப்பெண்மணியி னிடம் முன்னினும் அதிகமான நேயம் பாராட்டத் தொடங்கி னாடோறும் தமக்கொழிவு கிடைத்த சமயம் தாம் ஸமஸ்கிருதத் திலே படித்த பல நீதிக்கதைகளை யெடுத்துக்காட்டி வேண்டுவன போதித்துவந்தார்; அவ்வாறு போதிக்கும்படியான தருணம் தமக்குக் கிடைத்தது பற்றிக் கரைகடந்த மகிழ்ச்சி யடைந்தார். இவர்கள் அந்யோந்யமாய்ப் பேசக் காணும்போதெல்லாம் லக்ஷ்மியம்மாள் முணுமுணுப்பாள். அப்படி யவள் முணு முணுப்பதை ஜடாவல்லவர் தெரிந்துகொண்டார்; ஆயினும்,

அவள் அறியாமையினாலே செய்கின்றாள் என்று எண்ணி அதைப் பொருட்படுத்தாமல் தமது காரியத்தைக் கவனித்து வந்தார்.

இப்படி இருவரும் பொறுமையை மேற்கொள்ளவே, லக்ஷுமியம்மாள் தனக்குள் ஆத்திரங்கொண்டு குடும்ப வேலைகளை யெல்லாந் திரிபுரசுந்தரியின் தலையிலே சுமத்திவிட்டுப் பொழுதெல்லாம் காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து தெரியாததைக் கேட்டால் வாய்திறந்து சொல்ல மனங்கசந்து, ஒருவேளை இப்படிச் செய்யென்று சொல்வதும் ஒருவேளை தாறுமாறாய்ச் சொல்லி முகத்தைச் சுளிப்பதுமாயிருந்து வந்தாள். அடிக்கடி, "மகாராஜி நீவந்து வீட்டில் கால்வைக்கும்போதே மாமனாரை விழுங்கி விட்டுத் தரித்திரத்தைக் கூடவே யழைத்துவந்துவிட்டாய்; இன்னும் இந்த உமாமகேசுவர ஐயன் குடும்பத்தை எப்படித்திருப்பப் போகிறாயோ!" என்று கூறி அவளை இகழ்ந்தும் வந்தாள். திரிபுரசுந்தரி ஓர் ஏழைவீட்டுப் பெண்ணாதலால், அதிகமான சீர்வரிசைகள் தன் பிறந்த வீட்டிலிருந்து கொண்டுவரவில்லை. அதனால் அவளை லக்ஷுமியம்மாள் "இந்த ஒன்றுமற்ற ஏழைக்கு வந்த வாழ்வு என்ன வாழ்வு! தான் ஒரு பாத்திரமும் கொண்டுவராவிட்டாலும், நாம் கொண்டுவந்த பாத்திரத்தை ஆண்டுடைக்கின்றாள்" என்றெண்ணி ஒருநாள் தன் பாத்திரங்களை உபயோகிக்கச் சொல்வாள்; ஒருநாள் உபயோகிக்க உத்தரவு கொடாமல் திண்டாட வைப்பாள்; திரிபுரசுந்தரி ஒழிந்த வேளைகளில் படிக்க ஆரம்பித்தால், "பெண் பிள்ளைக்குப் படிப்பென்ன வேண்டியிருக்கிறது" என்று பழிப்பாள்; இராமாயண பாரத வசனங்களைக் காதிற் கேட்கவுங்கூட வெறுத்து அந்த வேலையைச் செய் இந்த வேலையைச் செய் என்று அடிக்கடி ஏவிப் படிக்க வொட்டாமல் தடுப்பாள். திரிபுரசுந்தரி லக்ஷுமியம்மாள் என்ன சொன்னாலும் வாய் திறவாமல் தனக்கியன்றதைச் செய்துவிட்டுப் பேசாமலிருந்துவிடுவாள். அப்படிப் பேசாமலிருக்கும்போது, லக்ஷுமியம்மாள் பல்லைக் கடித்துக்கொண்டு ஒரு பார்வை திரிபுரசுந்தரியைப்பார்த்து "மண்ணாந்தையைப்போல் உட்கார்ந்திருப்பதைப் பார் வாய்திறக்காமல்! நல்ல இழவு" என்று கொடிய மொழிகளைப் பலவாறான பழமொழிகளுடன் சரமாரியாகப் பொழிந்துவிட்டு வீட்டுவேலை செய்யப் புறப்படுவாள். அப்படிச் செய்ய நேரும் நாளில், திரிபுரசுந்தரி ஒன்றும் பேசாமலிருந்துவிடுவாள். இவ்வாறு சில நாட்கள் சென்றன. பின்னொருநாள் லக்ஷுமி

யம்மாள் இரத்த வெறிகொண்ட காளிபோல் பெருங்கோபங் கொண்டு ஆவேசத்துடன் சமையலறையிலே நுழைந்து அங்கு வேலை செய்துகொண் டிருப்பதுபோலிருந்து சமைத்து வைத் திருந்த குழம்பில் சிறிது உப்பையள்ளிப் போட்டுவிட்டு வெளியே வந்து பூனைபோலிருந்து விட்டாள். பின், ஜடாவல்லவர் சாப் பிடும்போது "குழம்பு ஏன் உப்பாயிருக்கிறது?" என்று கேட்க, திரிபுரசுந்தரி "தவறி இருமுறை உப்புப்போட்டிருப்பேன்" என்று கூறிச் சும்மா இருந்தாள்; ஆனால் தன் கணவன் உப்பான குழம்பு சாப்பிட நேர்ந்ததேயென்று வருந்தினாள். அப்பால் இன்னொருநாள் லக்ஷ்மியம்மாள் காளியாக மாறினாள்; அப் போது எழுந்து திரிபுரசுந்தரி சமையலறையிலில்லாத சமையம் பார்த்து அங்கு நுழைந்து அங்கிருந்த ஒரு செம்பு ஜலத்தை யெடுத்துக் குழம்பிலே ஊற்றிக் குழம்பைக் கெடுத்தாள். அப் பொழுது திரிபுரசுந்தரி பார்த்துவிட்டாள். இதையறிந்த லக்ஷ்மியம்மாள், "ஐயோ! பாவி முண்டைக்கு ஒரு நினைவா இழவா? செம்பு ஜலத்தை யெடுத்தேன்; குழம்பிலே கொட்டி விட்டேன்!"—என்று கூறி மறைத்தாள். அப்படி மறைப்ப தைத் திரிபுரசுந்தரி தெரிந்துகொண்டமையால் அன்று குழம்பு உப்பானதற்குக் காரணமும் இவள்தான் என்று நிச்சயித்து, "அம்மா! அதனாலென்ன இப்போது கெட்டுப்போயிற்று. அடுப்பைமூட்டி வேறு குழம்பு வைத்துவிடுகின்றேன்" என்று வெகு பொறுமையோடு விடை பகர்ந்தாள். உலகத்தில் இவை யெல்லாம் சகஜமென்பதுணர்ந்த உள்ளமுடையவளல்லவா திரி புரசுந்தரி? அவளிடம் பொறுமை விளங்குவது வியப்பாமா? லக்ஷ்மியம்மாள் வெறிகொண்ட நாயைப்போலத் திரிபுரசுந்தரி பக்கம் திரும்பி, "வேறு குழம்பு வைக்கிறாயா?—உப்பும் புளியும் சாக்குச் சாக்காகக் கொட்டிவைத்திருக்கும் வீட்டிலே பேசுவது போலல்லவா பேசுகின்றாய்? பிறந்தவீடும் தரித்திரம்! புகுந்த வீடும் நீ கால்வைத்தவுடன் துடைத்துப்போயிற்று! பேச்சு மட்டும் அதற்கென்ன போனால் போகிறது என்கிற அடைமொழி யோடு வெளியாகிறது—ஒன்றுங்குற்றமில்லை. இந்தக் குழம் போடு இன்றைப் பொழுதை ஓட்டு!" என்று உறுமினாள். திரிபுர சுந்தரி, இராஜாளிமுன் அகப்பட்ட சிறுபறவைபோல் குறுகி நடுக்கங்கொண்டு ஒரு மூலைக்குப்போய், "கடவுளின் திருவரு ளால் புருஷனுடைய அன்பும் ஆதரவும் கிடைத்திருக்கின்றனவே!

இவைபோதும். இனி நாம் ஈசனிடத்து அவனடியார் தமக்குத் தம்முடைய பகைவர்களால் ஏற்படும் இடர்களை உள்ளபடி கூறி அவன் அருளுக் கெதிர்பார்த்திருப்பதுபோல் நாமும் இங்கு நடப்பதையெல்லாம் நமக்குக் கடவுளாகிய நாயகனிடம் உள்ளபடி கூறி நற்காலத்திற்கு எதிர்பார்த்திருப்போம்! பிறகு நடப்பது நடக்கட்டும்! ஸத்தியம் தலைகாக்குமன்றோ?'' என்று கருதி நல்லகாலத்தை யெதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

லக்ஷ்மியம்மாளின் கெட்ட குணங்களெல்லாம் ஜானகிக்குப் பிடிப்பதில்லை. ஜானகிக்கு ஜடாவல்லவரிடத்திலும் திரிபுரசுந்தரியிடத்திலும் தெய்வ விசுவாசமுண்டு. லக்ஷ்மியம்மாள் அவளை அடிக்கடி கலைப்பாள். கலைத்தாலும் ஜானகி அவளிடத்தில் அவளுக் கிணங்கியதுபோலக் காட்டிப் பின் நியாயவழியிலேயே நிற்பாள். அப்படி ஜானகி தன் பேச்சைக் கேளாமல் நடப்பதை லக்ஷ்மியம்மாள் வெறுத்து அடிக்கடி "மூதேவி! நீயேன் வாழாப்பெண்ணாக வந்து அண்ணன் வீட்டுச் சோற்றுக்குக் காத்துக்கொண்டிருக்கின்றாய் தெரியுமா? இந்த அவலமதி படைத்திருப்பதினாலேதான்'' என்று இடித்துக்கூறி இகழ்வாள். இதனால் அவர்களுக்குள் பெரிய சண்டை சிலசமயம் விளைவதுண்டு. ஆனால் அதனை இருவரும் ஜடாவல்லவரிடங் காட்டிக் கொள்ளமாட்டார்கள். லக்ஷ்மியம்மாள் மாத்திரம் அண்டையயல் வீட்டுப் பெண்களோடு வம்பளக்கும்போது சிலசமயம் சொல்லி அழுவாள்! லக்ஷ்மியம்மாளுக்கு அவள் கண்ணின் இமையிலே எப்போதும் அழுகையாகிய மேகம் சூழ்ந்துகொண்டேயிருக்கும். அது பொறாமையாகிய நெருப்புக் காற்றுப்படும் போதெல்லாம் நீர்த்துளியைப் பெருக்கும். ஒருசமயம் ஜானகி தன் தாயாரை நோக்கி, "உனக்கேன் கவலை? என் வினையை நான் அநுபவித்து வருகின்றேன். இனி உனக்கு வேண்டியதெதுவோ அவ்வழியிலிருந்து உன் காலத்தை ஒழிக்கும் வழியைப்பாரேன்'' என்று கூறினள். அதைக் கேட்டதும் லக்ஷ்மியம்மாள் பிடாரியாக மாறித் தன் வயிற்றுப் பெண்ணெனப் பாராமல், "நேற்றுப் பிறந்த சிறுக்கி நீ எனக்குப் புத்தி சொல்ல வந்துவிட்டாயே! நீ நாசமாய்ப் போய்விடு!'' என்று கூறி உலக்கையைத் தூக்கிக்கொண்டு அடிக்கவந்து தெருச்சிரிக்க நின்றாள். ஜானகி இச்சமயம் இங்கு வந்திருப்பது திரிபுரசுந்தரிக்கு அவளுடைய நற்குணமே துணைவந்திருப்பதுபோலிருந்தது!

ஜானகி யெப்படி யிருக்கவேண்டியவள்? தன் தாயாகிய தீய்க்குச் சூறுவளிபோலிருக்க வேண்டியவளல்லவா? உலகத்தில் நாத்திக்கும் அண்ணிக்கும் ஒற்றுமை ஏற்பட்டிருந்தது என்று கேட்பதும் அருமையன்றோ?—அப்படிப்பட்ட நாத்தி இவ்வாறு நாம் எழுதிப்புகழவும் நீங்கள் படித்து மகிழவும் ஏற்ற சற்குணவதியாக விளங்கியது, நல்லவர்களுக்கு மலையும், கடலும் சிறு பிராணிகளும், கொடிய விலங்கினங்களும் உதவிசெய்யும் என்னும் பெரியார் வாக்குப்படியே யிருக்கிறதன்றோ? ஸ்ரீராமபிரானுக்குக் கடலும், மைநாகமென்னும் மலையும், அணிலென்னும் சிறு ஜீவ ஜந்துவும், வானரமும் உதவிபுரியவில்லையா? கொடியவர்களாகிய அரக்கிகளுக்கிடையே அசோகவனத்திலிருந்த ஸீதா பிராட்டிக்கு அக்கொடியவர் குலத்திலுதித்தவளாகிய திரிஜடை சற்குணவதியாக விளங்கித் தேவிக்குத் தேறுதல் கூறவில்லையா?

நிற்க-இவ்வாறிருக்கையில், ஒருநாள் மாலை ஜடாவல்லவருக்கு ஜானகியின் புருஷனிடமிருந்து ஒரு தந்தி வந்தது. அதில் அவர் தம் மனைவியை உடனே அழைத்துக் கொண்டுவந்து விடும்படி அடித்திருந்தார். உடனே அதுகண்ட ஜடாவல்லவர், "ஓகோ! புத்தி வந்துவிட்டதுபோலிருக்கின்றது மாப்பிள்ளைக்கு" என்று கருதி மகிழ்ந்தார். லக்ஷ்மியம்மாள், மறு நாளே பெண்ணையழைத்துக் கொண்டுபோய் விடவேண்டுமென்று ஜடாவல்லவர்க்குக் கட்டளையிட்டாள்; ஆனால், சேலையிலும் வேறு சில நகைகளிலும் பக்ஷணவகைகளிலும் பாத்திரங்களிலுமாக ரூபா ஐந்நூறுக்கு மேலாகச் செலவு சொன்னாள். ஜானகி தன் வாயைத்திறந்து ஒன்றுங் கேட்கவில்லை; "என்னைப் புருஷன் வீட்டுக்குக் கொண்டுபோய் விட்டுவிட்டாற் போதும்; நான் அங்கு எப்படிப்பட்ட கஷ்டத்தை யநுபவித்தாலும் இனித் திரும்புவதில்லை இங்கே! எனக்கு என் தாயே பகையானாள்" என்று கூறினாள். ஜடாவல்லவர் ஜானகியின் நற்குணத்திலீடுபட்டு மாப்பிள்ளையின் அறிவீனமான செய்கைகளை மறந்து அவளுக்குத் தன்தாயாரின் இச்சைப்படி வேண்டுவன கொடுத்தனுப்பத் துணிந்தார்: அடுத்தவாரம் ஜானகியை அனுபபிக்கொடுப்பதாக மாப்பிள்ளைக்கு ஒருகடிதமும் எழுதியனுப்பினார். அறிவீனருடைய செய்கையை அறிஞர்பொருட்படுத்துவரா? அவர்கள் அதனை உலக இயற்கை யென ஒதுக்கித் தங்கள் கடமையைச் செலுத்துவார்களல்லவா? "வெல்வது வேண்டின் வெகுளிவிடல்" "கெடுப்பின் வெகுளி கெடுத்துவிடல்"

என்னும் பெரியார் போதனைகளை யறிந்தவராகிய ஜடாவல்லவர், ஒருவன் எதைச் செய்யினுந் தானென்ன—மனம் வேறுவரோ? ஆயினும் அது, "நீர் கிழிய வெய்த வடுப்போல மாறுமே சீரொழுகு சான்ருேர்சினம்" என்ற பெரியார் வாக்கிற்கிணங்கத் தோன்றிய நிமிஷமே மாறுமியல்பினதா மன்ருே?

நிற்க-ஜடாவல்லவர் இங்ஙனம் மனமொப்பிய பின், 'பணத்திற்குப் பல விடங்களில் முயற்சி செய்தார்; கிடைக்காமையால் ஓர் ஏக்கர் நிலத்தின்மீது ஒருவரிடம் பணம் கடன் வாங்கி அதைக்கொண்டு ஜானகிக்கு வேண்டுவனயாவும் சேகரித்தனர். இந்த ஒருவாரமும் வீட்டிலே லக்ஷ்மியம்மாள் செய்த கொடுமைகளும் கூத்துகளும் பல; எழுதப்புகின் இப்புத்தகம் போலப் பல புத்தகங்க ளெழுதினும் அவை எழுதிமுடிவுபெரு. அவைகளையெல்லாம் திரிபுரசுந்தரியும் ஜடாவல்லவரும் தங்கள் பொறுமையினலேயே வென்று வந்தார்கள். அப்பால் ஜடாவல்லவர் தாயார் வாக்குப்படி ஜானகியை யழைத்துக்கொண்டு மதுரைக்குப் போய் அன்று அங்குத் தங்கியிருந்து விட்டு மறுநாள் புறப்பட்டு வந்து விட்டார். மாப்பிள்ளை, "உன் தங்கை எனக்குக் கோபம் வரும்படி நடந்தாள்; அதனல் அப்படிச் செய்தேன்" என்று கூறிச் சமாதானப் படுத்திக்கொண்டார். வெல்லும் போடுபவரைக் கண்டால் வாலையாட்டும் நாயின் தன்மைபோல மாப்பிள்ளை தம் மனைவி சீர் வரிசையுடன் வந்திருப்பதினலே மகிழ்ந்து தாம் செய்ததை மறந்தார்.

ஜடாவல்லவர் இம்முறை ஜானகியைப் புருஷன் வீட்டிற் கனுப்பியதைத் தாமொரு பெரிய காரியத்திலே வெற்றி பெற்றதாக எண்ணித் திருப்தியடைந்தார். ஆனல் லக்ஷ்மியம்மாளுடைய மனது மாத்திரம் திருப்தியடையவில்லை. பொருமை குடிகொண்டிருக்கும்போது அங்கே திருப்திக்கு இருக்க இடமேது? இதனல் லக்ஷ்மியம்மாள் பொருமை என்னும் மலைமீது விளங்கும் பத்ரகாளியாகவே விளங்கினள்.

ஆகவே திரிபுரசுந்தரிக்கும் லக்ஷ்மியம்மாளுக்கும் பொழுது விடிந்தால் போராட்டமும் பொழுது போனல் ஒருவரை ஒருவர் அறியாமல் மாமி மருமகள் பேரிலும், மருமகள் மாமி பேரிலும் ஜடாவல்லவரிடம் குறைகூறி முறையிட்டுக் கண்ணீர்விட்டழுவதும் வழக்கமாயின. என்ன செய்வார் ஜடாவல்லவர் பாபம்! திரிபுர சுந்தரி மாமியாருக்குந் தமக்கும் கீழ்ப்படிந்து நடக்குஞ் சிறந்த

குணமுடையவ ளென்பதை அவர் அறிவார்; அறிந்தாரெனினும் தமது தாயைக் கண்டிக்க மனமஞ்சினுர்; குற்ற மற்ற மனைவியையும் மனச்சாட்சிக்கு விரோதமாகக் கண்டிப்பது தருமமல்லவே யென்று நினைத்து வருந்தினுர்; இருதலைக்கொள்ளி எறும்புபோலத் தவித்தார். ஒவ்வொரு நாளும் திரிபுரசுந்தரி மாமியால் ஏற்படுந் தொந்தரவைச் சமயம்பார்த்துத் தம்மிடஞ்சொல்லிக் கண்ணீர் விட்டுக் கதறுகையில் ஜடாவல்லவர் மனத்திற்குள் "ஐயோ! எக்குடும்பத்திலேனும் ஒரு மருமகள் தன் கண்ணீரில் ஒரு சொட்டுத் தரையில்விழ மனம் வருந்துவாளாயின் அக்குடும்பம் நசித்துப் போகும்" என்பது ஸ்மிருதி வசனமாயிற்றே! நிரபராதியான ஒரு மருமகளின் கண்களிலிருந்து இப்பாவியின் வீட்டிலே வீழ்ந்த நீர்த்துளிகள் கொஞ்சமா? ஐயோ பாபம் சுடுகின்றதே என் நெஞ்சை! இந்தப் பாபத்துக்கு என்னசெய்வேன்! தரும சங்கடமாக வல்லவா விருக்கிறது!" என்று நினைத்து வருந்தித் திரிபுரசுந்தரியைப்பார்த்து "நீ வருந்தாதே, அம்மா உன்னைத் திட்டினுலும் உன் வேலையிற் குறைகூறினுலும் அதைப்பற்றி யொன்றும் மனத்தில் வைத்து வருந்தாதே; ஒன்றும் பதிற் சொல்லாதே. மாமியார் மருமகளைத் தொந்தரவுக்குட்படுத்தினு ளென்பதிலும், மருமகள் மாமியாரைத் தூறி யவமதித்தாளென்னுஞ் சொல் வெளி வருமாயின், அது நம்மிருவருக்கும் நம்மாயுளளவும் அழியாத வசை யாகும். ஆகையால் திரிபுரசுந்தரி! நீ உன் மனச்சாட்சிக்கு விரோதமாகவும், தரும நியாயந் தவறியும் நடவாமல் பொறுமை யாகவிரு; பொறுமைதான் பெருமை தருவது; பொறுமைதான் வெற்றி தருவது; பாண்டவ முதல்வராகிய தரும புத்திரர் பொறு மையா லல்லவா துரியோதனுதியரை வென்றது? பொறுமை கட லினும் பெரிது! பொறுத்தார் பூமியாள்வார், பொங்கினுர் காடாள் வார் என்னும் பழமொழியை மறவாதே! நானுன்னை அக்நி சாட்சி யாகக் கைபிடித்து எனக்கு உரிமையாக்கிக் கொண்டேனுகை யால், உனக்கு இந்த புத்திமதி சொல்லும் பாத்தியதையைப் பெற் றேன். நீயும் நான் சொல்வதை யங்கீகரித்து நடக்கக் கடமைப் பட்டவளாகின்றுய். இந்தப் பேச்சை நான் என் அன்னையிடம் கூறி யிருப்பேனுயின், அவள், கட்டின மனைவியை யடக்கக் கையி லாகாதபேதை, பெற்றதாயை அடக்க முன்வந்தான் என்று சொல் லிப் பிரமாதமாக்கிவிடுவாள். ஆகையால், அம்மாளிடத்தில் வாய்திறக்க முடியாது. உனக்குத்தான் சொல்லலாகும். அம்மாள்

என்ன சோன்ஞலும் நீ வாய்திறந்து பதிற்சொல்லாதே'' என்று தமது மனைவிக்கு இனியமொழி கூறி யனுப்புவார். தன் நாயகனுடைய இன்னுரை கேட்டதும் மனமுவக்கும் இனியகுணமுடையவளாதலின் திரிபுரசுந்தரி, ஜடாவல்லவர் திருவாய்மொழியை உள்ளக் கனிவுடன் ஏற்றுக்கொண்டு தன் வேலைகளைக் கவனிக்கச்செல்வாள். அச்சமயம் ஜடாவல்லவர் தம் மனத்திலே பரிதாபங்கொள்வார்; தாயாரின் அறியாமைக்கு வருந்துவார்; சிலவேளை தமது அன்னைக்கு நல்லறிவளிக்குமாறு ஈசனைப் பிரார்த்திப்பார்; தாயை நோக்கி யொன்றுமே இதுபற்றிப் பேசார். இவர் மனம் நிர்மலமானதாதலின், அங்கு அடிக்கடி "அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்'' "ஈன்றுளின் என்ன கடவுளுமில்'' என்னும் தமிழ் நீதி வாக்கியங்களும், "மாதா பிதா குரு தெய்வம்'' என்னும் வடமொழி நீதி வாக்கியமும் தோன்றிச் சினமெழவொட்டாமல் தடுக்கும்.

இப்படித் தமது தாய்க்குக் கீழ்ப்படிந்து நடக்கும் சத்வ குணமுடைய ஜடாவல்லவரின்மேல், லக்ஷ்மியம்மாள் தான் என்ன சொன்னபோதிலும் கவனிப்பதில்லை யென்றும், மனைவியின் மொழியைக் கேட்டுக்கொண்டு அவளைக் கண்டியாமல் ஒன்றுந் தெரியாதவன்போ லிருந்து விடுகிருன் என்றும் ஊரெங்கும் பறையறைந்ததெனை முறையிட வாரம்பித்தாள். அந்தோ! தினம் சூரியோதயமாஞல் சோற்றுக்கு வழிதேடுவதிலும், கடன்காரர்களுக்கு ஈடுகொடுப்பதிலும், மாமி மருமகளுக்குண்டாகும் சண்டையைச் சமாதானஞ் செய்வதிலுமே ஒரு பிராமணன் காலங்கழிக்க நேரிடுமாயின், அதிகாலையில் ஸ்நானம், அக்நி ஹோத்ரம், அதிதி பூஜை, தேவ பூஜை முதலிய கிரகஸ்தாச்ரம நெறி எங்ஙனே நடைபெறும்? எப்படி ஒரு மனித சரீரம் பிராணன் என்னும் வாயுவின்றி யமையாதோ அப்படியே இல்லாளை யன்றி இல்லறம் அமையாது. எப்படிச் சரீரம் இயக்கமுறப் பிராணனைக் காப்பாற்றுகிறேமோ அப்படியே இல்லறம் நடைபெறவேண்டின் இல்லாளைக் காக்கவேண்டும். இதுபற்றியே 'ஒருவன் எப்பாடு பட்டேனும் பொருளைத் தேடவேண்டும். தேடிய பொருளைக்கொண்டு மனைவியைக் காக்கவேண்டும். மனைவியினுல் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும்'—என்று கட்டளையிட்டனர் ஆன்ருேர். ஆகவே குடும்ப சம்ரக்ஷணை யவசியமென்பதும் அதை யொழிக்கின் ஆசிரம நெறி நடத்த இயலாதென்பதும் ஏற்

படுகின்றனவல்லவா ! ஆகையால் ஜடாவல்லவர் பொறுக்க முடியாத கஷ்டத்தினால் இல்லறத்தை வெறுத்துத் துறவறத்திற் பிரவேசிப்போமா வெனக் கருதினர். கருதியவளவே ‘ இல்லற மல்லது நல்லறமன்று ’ என்னும் ஔவையார் மதுரவசனம் மனத்திலே பிரகாசித்தது. அதனால் வேறு ஆசிரமத்திற் புகின் அதை வகித்து நடத்த முடியுமோ முடியாதோ வெனும் ஐயம் நிகழ்ந்தது. பின்னர், அவர் “ துறவறம் மனத்தையடக்கி நிலைநிறுத்த வேண்டியதாகையால் அதனை மேற்கொள்வதில் தவறேற்படும்; ஏற்படின் அவ்வறங்கெடும்'; பின் நரகம் புகநேரிடும் ”—என்று தேறி அதை மறந்து, “ வருவது வந்து தானே தீரும் ; அதனை யநுபவிக்க உடம்பெடுத்தவன் அதை யநுபவியா தொழிதல் கூடுமோ ? கூடாதாதலால் ஏதொன்றையுங் குறித்து நெஞ்சங் கவலையுறாது, தஞ்சம் புகுந்தார்க்குச் சரணமளிக்கும் பரமபதியினிடம் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒப்புக்கொடுத்து அவன் திருவருள் பெறுமாறு நிற்றலே அறிஞனின் கடனாகும் ”—என்று கருதிச் சஞ்சலத்தையுங் கஷ்டத்தையுங் கவனியாமல்—

“ ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டா ரிசைந்து ”

என்ற ஆன்றோர் அமுதவாக்கியத்துக் கொப்ப வருவாய் குறைந்து கடனதிகரித்த இக்காலத்திலும் தமது தந்தையைப் போல் தாமும் நியமநிஷ்டை தானதரும முதலியவைகளைக் கைவிடாது தம் சக்திக்கியைந்தவாறு நடத்திவந்தார். ஆயினும் நாளாகநாளாகச் சிரமம் அதிகரித்தே வரலாயிற்று. முக்கியமான தடையாயிருந்த தம் சிற்றன்னையை ஜடாவல்லவர் சிறிதுங் கவனிக்கவில்லை ; “ பிராரப்தவினை போராடிக்கொண்டுதா னிருக்கும் ; அதற்காக ஒழுக்கம் தவறுவது சிறப்பாகுமா ! தேன் எடுக்கத் துணிந்தவன் தேனீயின் தொந்தரைக்கு அஞ்சினால் காரிய சித்தி பெறுவானா ?”—என்று எண்ணித் தேறுவார். புண்ணிய வசத்தால் மனைவியாக வாய்த்து மனமொத்து வாழ்ந்துவரும் திரிபுரசுந்தரியின் நற்குணமே ஜடாவல்லவருக்குண்டாகும் சிரமத்தை யொருவாறு ஆற்றி வந்தது.



# அத்தியாயம்—10

—

"ஒன்றை நினைப்பி னதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்"

உலக வாழ்விலே கஷ்டமும் சுகமும் மாறிமாறி வருவது போலக் காலமும் தன் இயல்பின்படி மாறியது. எல்லா வுயிர்களுக்கும் இன்பந் தரும்படியான வசந்தகாலம் பிறந்தது. இப்பொழுது காவிரியாற்றில் முழந்தாளளவு ஜலம் இங்குமங்குமாக ஓடுகிறது. சில இடங்களிலே ஊற்றுகள் போட்டு ஜனங்கள் நீரெடுக்கின்றனர்; சில இடங்களிலே சிறு சிறு கிணறுகள் தோண்டி ஜலவசதியை யுண்டாக்கிக் கொண்டிருக்கின்றனர். மரங்களெல்லாம் சருகுதிர்ந்து, தளிர்த்துக் கற்புடைய மகளிர் போலப் பிரகாசிக்கின்றன. பிள்ளையார்புத்தூர் சோலைகளும் கால்வாய்களும் கழனிகளும் நிறைந்த நல்ல நீராரம்பமானதினால் மகரிஷிகளின் ஆச்ரமம்போல் விளங்குகின்றது. கோடைகால உஷ்ணம் தெரியாமல் குளிர்ந்த மந்தமாருதம் இங்கே சதா காலமும் வெகு சுகமாக வீசிக்கொண்டிருக்கின்றது.

இப்படியிருக்கும் இந்த வசந்தகாலத்தி லொருநாள் ஜடாவல்லவர் தம் வழக்கப்படி வைகறையிலே துயில்நீங்கி எழுந்து காவிரியாற்றுக்குப் புறப்பட்டுச்சென்றார். வழியில், "நான் பெரிய துரதிர்ஷ்டக்காரன் என்பதிலையமில்லை. என்னை என்னுடைய தீவினை, தாழ்த்திப் புடைத்துத் தடுத்திழுத்துத் துயரத் தொடுகுழியிலே வீழ்த்தியிருக்கின்றது! உய்யும் வகையறிகிலேன்! வரவரக் கஷ்டமதிகரிக்கின்றதே யொழிய விலகிய பாடில்லை. நானெப்படி

'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை'—

என்னும் வேதமொழியின்படி என் தருமத்திலே தவறாதிருத்தல் கூடும்? இவ்வூரிலிருந்து இனிப்பயனில்லை. பட்டணங்களுக்குச் சென்று யாரிடமேனும் குமாஸ்தாவாக வமர்ந்தோ அல்லது எனக்குத்தெரிந்த வித்தையைப் பிறருக்குப் போதிக்கும் தொழிலைக் கைக்கொண்டோ குடும்பப் பாதுகாப்பிற்குத் தக்க வசதி தேடிக்

கொள்ளவேண்டும். இவ்வளவு கஷ்டஸ்திதியிலிருக்கும் எனக்குத் தான தருமம் என்னத்திற்கு?—தனக்கு மிஞ்சியல்லவா தருமம்?'' —என்று பலவாறாக நினைத்துக்கொண்டே சென்று நதியைப் பார்த்தார். இப்பொழுது சூரியோதயமாக அரை நாழிகை இருக்குமாதலால் சூரியனுதயமாகுந் தருணத்திற்குமுன் காணப் படும் பிரகாசம் நதியெங்கும் வீசுகிறது. நதி பார்ப்பதற்கு மனோ கரமாக இருக்கிறது. ஜடாவல்லவர் அத்தோற்றத்தைக் கண்ட தும் அவருள்ளத்திலிருந்த சஞ்சலமாகிய இருள் நீங்கியது. இருள் நீங்கவே—"ஆ! நாம் என்ன எண்ணம் எண்ணினோம்; முழு மூடனானோமே! இந்நதியுமல்லவா பெருக்கற்ற இக்காலத்திலும் தன்னாலியன்றவளவு தன்னை வந்தண்டினோர்க்கு இல்லையென்னாது ஊற்றுப் பெருக்கால் ஜலம் உதவிவருகின்றது! இதை நாம் மறந் தோமே! இனி நாமெப்பாடுபட்டேனும் தருமத்தை நிலைநாட்ட வேண்டும்'' என்னும் உயர்ந்த எண்ணம் பிரகாசித்தது. ஆகவே ஜடாவல்லவர், தம்மை ஆண்டவன் இவ்வாறு அடிக்கடி தேற்று வதைக்கண்டு பேருவகைகொண்டு நதியில் ஸ்நானஞ்செய்து அதன் கரைமீதிலகும் ஆலயஞ்சென்று தெய்வவழிபாடு புரிந்து வீட்டுக்குத் திரும்பினார். அப்பொழுது அவ்வழியே போய்க் கொண்டிருந்த தபாற்காரன் ஜடாவல்லவரைப்பார்த்து "சுவாமி தங்களுக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது'' என்று கடிதத்தை நீட்டினான். ஜடாவல்லவர் அதைப் பெற்றுக்கொண்டு அவ்விடத் திருந்த ஒரு பாலத்தின்மேலுட்கார்ந்து பிரித்து வாசித்துப் பார்த்தார். அதில்—

**தாசில்தார் ஆபீஸ்,**
**மு சி றி.**

பிள்ளையார் புத்தூர் கிராமத்திலிருக்கும் ஜடாவல்லவ ருக்குத் தெரிவிப்பது யாதெனில், மேற்படியூர் முனிஸீப் **பிச்சுக்குப்பையரைப்** புதையல் வழக்கில் சம்பந்தப்பட்ட குற்றத்திற்காக வேலையினின்று நீக்கி மேற்படி கிராம முனிஸீப் வேலை உமது பேரில் செய்விக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நீர் அடுத்த மாதம் பத்தாந்தேதி தாலூகாவுக்கு வந்து என் முன்னிலையில் வேலையை ஒப்புக்கொள்ள வேண் டியது—

**ஜம்புலிங்கமையர்,**
**தாசில்தார்.**

—என்றிருந்தது. அதனை ஜடாவல்லவர் பார்த்ததும் அடங்காத மகிழ்ச்சிகொண்டு ஆண்டவன் திருவருளென வெண்ணித் துரிதமாய் வீட்டுக்கு வந்து தமது மனமொத்த மனைவி திரிபுர சுந்தரியிடம் கடிதத்தைக் காட்டினர். திரிபுரசுந்தரி அக்கடிதத்தைப் பார்த்ததும் நல்லகாலம் என்று நினைத்து மனமகிழ்ந்திருந்தாள். லக்ஷ்மியம்மாள் ஞானியைப்போல் தன்னிலையிலேயேயிருந்தாள்; இதைக்கேட்டு ஸந்தோஷப்படவுமில்லை; விசனப்படவுமில்லை; ஆனால் தனித்த இடத்திலிருந்து திரிபுரசுந்தரியின் முகப்பொலிவை நோக்கி ஒரு பெருமூச்செறிந்து தான் பொறுமைக்கு அடிமையாயிருப்பதை வெளிப்படுத்திக்கொண்டாள். இப்படியிருக்க ஜடாவல்லவர் தம் வழக்கப்படி தேவாராதனையை முடித்துக்கொண்டு போஜனம் செய்து தம் வீட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்தார். அப்பொழுது அவ்வூர் கணக்கு தில்லை நாயகம்பிள்ளை வந்து "சுவாமி அடியேன், நமஸ்காரம்" என்று கூறி வணங்கி அவருக்கருகே உட்கார்ந்து, அவரைப் பார்த்து "சுவாமி! தங்களுக்கு இன்றையதினம் தாலூகாவிலிருந்து ஒரு கடிதம் வந்திருக்கவேண்டுமே; வந்து சேர்ந்ததா?" என்று விசாரித்தார். ஜடாவல்லவர் "ஆம் வந்திருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே வீட்டிற்குள் சென்று கடிதத்தை யெடுத்து வந்து காட்டி "இதை எப்படி நீர் அறிந்தீர்?" என, கணக்கப்பிள்ளை "இந்த வேலை தங்கள் நண்பர் செல்லமையர் சிபார்சில் உங்களுக்குக் கிடைத்தது; நேற்று நான் தாலூகாவிற்குப் போயிருந்தமையால் ஆர்டர் அனுப்பப்பட்டது எனக்குத் தெரியும்" என்றனர்.

அதுகேட்ட ஜடாவல்லவர் "ஆகா அப்படியா, எல்லாம் ஈசன் செயல்; நம்முடைய செயலில் என்னவிருக்கிறது! தாசில்தார் யார்; சின்ன வாய்க்கால் பாசனக்குறைவை நிவர்த்திசெய்தாரே அந்த மஹான் ஜம்புலிங்கமையரா? அவர் நீதியை அநுசரிக்கும் நிர்மலர் ஆயிற்றே; தெய்வத்திற்கு அஞ்சி நடக்கும் தீனதயாளரல்லவா?" என்று கேட்டார். கணக்கப்பிள்ளை "சுவாமி! அந்த மஹான்தான்; பின்னை யார்?" என்று சொல்லச் சற்றுநேரம் இருவரும் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் பிரிந்தனர்.

பின் அடுத்த மாதம் 10-ந்தேதி யன்று ஜடாவல்லவர் தாலூகாவுக்குச் சென்று தாசில்தார் முன்பு வேலையை யொப்புக்

கொண்டார். அன்றுமுதல் அவர் அஜாக்கிரதையா யில்லாமலும், நீதி வழுவாமலும் வேலே பார்த்து அதிகாரஞ் செலுத்தி வந்தார். ஜடாவல்லவருக்கு இவ்வேலேயில் தமது குடும்பப் பாதுகாப்பின் பொருட்டுச் சம்மதமே தவிர், பரம்பரையாய் வழக்கமில்லாத சேவகத் தொழிலிற் பிரவேசித்தது அவர் மனத்துக்கு ஒவ்வாம லிருந்தது. இப்பொழுதுந் தம் வழக்கம் தவருமல் ஸ்நானம் பூஜை முதலியன செய்த பிறகே மற்ற அலுவல்களிற் பிரவேசிப்பதும், கிஸ்தி வசூல் செய்வதுமாயிருந்தார். சிலவேளே கிராமத் தலே யாரியைக் கிஸ்திவசூலுக் கனுப்புவதுமுண்டு. அவர் தம் வீட்டி லிருந்து கணக்கு வழக்குகளேப் பார்ப்பதில்லே; அக்கிராமத்தில் காவிரி நதிக்கருகில் கட்டப்பட்டிருக்கும் ஸர்க்கார் சாவடிக்குச் சென்று தான் பார்ப்பது வழக்கம்.

கிராம முனிஸீப் வேலேயென்பது சொற்ப சம்பளமுள்ள ஒருவேலே யெனினும் பெரிய உத்தரவாதமுடையது. அதில் சங் கடமடைந்தாரும் அடைவாரும் பலர். ஆனல் நல்ல கிராமமாக இருப்பின் குடிகளால் வருஷ முடிவிலே வரும்படி கிடைப்ப துண்டு. சில கிராம முனிஸீப்கள் வீண் வழக்குகள் உண்டுபண்ணி இருபக்கமும் காசு வாங்கிக் கொள்வதுமுண்டு. இந்த வேலே எப் படிப்பட்ட யோக்கியனேயும் காசு வாங்கிக்கொள்ளவும் வீண் வழக்கிலே தலேயிட்டுப் புரட்டு, பொய் முதலியவற்றிற் குள்ளாக வும் இழுத்துவிடும். இதில் தினம் ஆபத்தும் ஸம்பத்துமாக இருக்கும். இந்நிலேயினேயுடையது இவ்வுத்தியோக மெனினும் இத்தொழிலிலே அமர்ந்த சில அற்பர்கள் கண் தலே தெரியாமல் திரிவதுண்டு. அப்படித் திரியுமவர்களின் செயலின்வன்மை கிராமத்திற்குக் கலெக்டர், தாசில்தார் யாரேனும் வருகிற நாளில் நன்கு விளங்கும். அப்பொழுது அவர்களின் நிலேமை பரிதாப மாக விருக்கும். கலெக்டருக்கும் தாசில்தாருக்கும் வேண்டியவை களேச் சேகரித்துக்கொடுத்து அவர்களே ஊரைவிட்டப்புறப் படுத்துவதற்குள் இவர்கள் படும்பாடு, மானி யொருவனின் மனத்தைப் புண் படுத்தாமலிராது. என்ன செய்யலாம்! வயிற் றுக் கொடுமையால் இப்படிப்பட்ட சேவகத் தொழிலிலும் ஜனங் கள் புகுந்துழல்கின்றுர்கள். கருணேக்கடலாக விளங்கும் ஜடா வல்லவரும் வயிற்றுக் கொடுமையாற்றுனே இதிலகப்பட்டுக் கொண்டார். இது இத்தன்மையான தொழிலென்பதை இவர் அறியாதவரல்லர். என்ன செய்வார் பாவம்! வறுமையின்

கொடுமை பெரிதாய்விட்டது. இவர் வறுமையின் பொருட்டு இதிலே பிரவேசித்தாரெனினும் ஏனையர்போல் வீண் விவாதங்களில் நுழையாமலும் பரிதானம் வாங்காமலும் தமது வேலையைப் பார்த்து வந்தார்; குடிகளின் அபிமானத்தையே தாம் தேடும் பொருளாகக் கொண்டிழைத்து நியாய மென்னும் குன்றின்மீ துதித்த மாசற்ற மார்த்தாண்டனென விளங்கினார். இதனால் வேண்டுவன வெல்லாம் வலிதிலிவரை யடைந்தன.



## அத்தியாயம்—11

"அறிவுடையா ரன்றி யதுபெறார் தம்பாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும்—பிறைநுதால்!
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு"

மழைவிட்டும் தூவானம் விடவில்லை—என்பது பழமொழி யல்லவா?—அதுபோல் இக்காலத்திலும் லக்ஷ்மியம்மாளின் தொந்தரவு குறையாமலிருந்தது. இத்தொந்தரைகள் பொறுமை யென்னும் கழனியிலே விளையும் பயிர்களல்லவா?—அவை லக்ஷ்மியம்மாளின் திருவருளால் வளர்க்கப்படுவனவன்றோ? அவற்றைக் கெடுக்கக் களைகள் தோன்றா! தோன்றினும் நிலைத்திரா! ஏன்? எனக்கு மான அவமானமும் நியாய அநியாயமு மில்லை என்னும் அடையாளமிட்ட பதாகையை நாட்டித் தன்னிச்சைப்படி அரசியற்றும் லக்ஷ்மியம்மாளின் மனமாகிய மன்னவன் அக்களைகளை அடிக்கடி மறத்தல், பொருட்படுத்தாமலிருத்தல் என்னும் மள்ளர்களைக்கொண்டு களைந்துவிடுகின்றானல்லவா? இப்படிக் களையெடுக்கப்படுவதுமன்றி லக்ஷ்மியம்மாளின் கண்களாகிய மடுக்களிலிருந்து குறைவின்றி நீர் பெருக ஜடாவல்லவரின் பொறுமையாகிய தேவதையின் அநுக்ரகமுமிருக்கின்றதல்லவா? இப்பயிர்கள் வளர்வதற்குத் தடை யாதாம்? ஆனால் அறுவடைக் காலத்தில் அவை எஞ்சப்போகின்றனவா?—ஒருகாலும் எஞ்சா!—

இப்படிப்பட்ட தொந்தரைகள், குடும்பமென்னும் பெரும் பார வண்டியை இழுத்துக்கொண்டு செல்கிறவர்களாகிய ஜடாவல்லவர்க்கும் திரிபுரசுந்தரிக்கும் முட்களும் கற்களும் நிறைந்த

பாதைகளாயிருந்து பாதித்தன! என்ன செய்வார் பாவம் ஜடாவல்லவர்! அவருடைய சித்தம் சிதைந்தது. அவருடைய கல்வியும் அறிவும் இருந்த இடந் தெரியாமல் மறைந்தன. அவர், தம் வீட்டுக்கு வந்தால் பித்தன் போலவும் வெளியே சென்றால் உயிரோடுலாவும் ஒரு பதுமைபோலவு மிருந்தார். லக்ஷ்மியம்மாளின் முகம், வீட்டிலிருந்தால் அறுந்து தொங்குவதுபோலிருக்கும்; வெளியே அடுத்த வீடு வாய்க்கால் காவிரி இப்பக்கங்களுக்குப் போனால் அதில் சிரிப்புத்தவழும். அது அறிவுடையர் கண்களுக்கு, அவளுள்ளத்தின் பொறாமையை நன்கு வெளிப்படுத்தும். திரிபுரசுந்தரியின் உள்ளம் தன் பதியாகிய ஜடாவல்லரின் திருவுருவத்திற்கு ஒருகோயிலாக விளங்குகின்றமையின், அவளுடைய முகம் அவள் கள்ளமில்லாத கற்புக்கரசி யென்பதை விளக்கிக் கொண்டிருக்கும். அவளுக்கு எப்போதும் உற்றதுணைகளாக இருந்தவைகள், புத்தகங்களும் அவளுக்குரிய கடமைகளுமேயாம்.

இப்படி யிருக்கையில், ஒருநாள் லக்ஷ்மியம்மாளுக்குப் படைத்த தோசை நன்றாய் வேகவில்லை. அப்படி வேகாமலிருக்கக் கண்டதும் சினங்கொண்டு லக்ஷ்மியம்மாள் அன்றிரவு தான் பட்டினியாயிருந்து எல்லோரையும் பட்டினிகிடக்கும்படி செய்தாள். தாய் பசித்திருக்கின்றாள் என்று ஜடாவல்லவர் போஜனஞ்செய்ய மறுத்தார். திரிபுரசுந்தரியும் கணவன் பசித்திருக்க மனைவி யுண்பது நியாயமல்ல வென்பதையெடுத்துப்பேசி மறுத்தாள். ஜடாவல்லவர், "செய்வன திருந்தச்செய்-என்பதை நீயேன் மறந்தாய்?" என்று கேட்டுத் திரிபுரசுந்தரியைத் தமது கையை யோங்கி யடிக்கச் சினந்தார். அப்பொழுது அவர் கோபமாகிய வில்லினின்று விடுபட்ட அவருடைய கையாகிய அம்பைக் குற்றமற்றவளும் மகா பதிவிரதா சிரோமணியுமாகிய திரிபுரசுந்தரி மீது விழவொட்டாமல் வீட்டிலே உயரக் கட்டியிருந்த கொடிக்கயிறு தடுத்துக் காத்தது!—நல்லவர்களுக்கு அசேதன வஸ்துக்களும் உதவிபுரியுமென்பது பெரியார் திருவாய்மொழியல்லவா?—அங்ஙனம் தடுக்கவே ஜடாவல்லவர், தம்முடைய இயற்கைக் குணத்திற்கேற்பச் சற்று அது பற்றிச் சிந்தித்துப் பார்த்தார்;—"ஓ! ஆறுவது சினம் என்னும் ஔவையின் கட்டளையை மறந்து என்றைக்குஞ் செய்ய மனத்திலும் நினையாத இக்கொடுஞ் செய்கையை இன்றைக்கு நாம் செய்யத்துணிந்த இது தகாத செய்கை என்பதை நமக்கறிவிக்கும் பொருட்டு ஈசன்

குறிப்பிட்டிருக்கின்றான்'' எனத் திடங்கொண்டு, "உண்மை வேறாக விருத்தல்வேண்டும், இதுபற்றி விசாரித்தல்வேண்டும்'' என்றுணர்ந்து, விசாரிக்கவே, திரிபுரசுந்தரி தோசை வார்க்கையில் அடுப்பெரியாமை பற்றி விறகுவாங்கிவந்த வேலைக்காரியிடம் "விறகு ஈரவிறகு, நன்றா யெரியவில்லை'' யென்று கூறியதைக்கேட்டுக் கொண்டிருந்த லக்ஷ்மியம்மாள், "மகா பாபஞ்செய்த மோட்டச்சியாகிய எனக்குத் தோசை வார்த்தால் அடுப்பு எரியாதுதான்! நீ யேனம்மா எனக்காகக் கஷ்டப்பட வேண்டும்?'' என்று கேட்டுக்கொண்டு சமையலறைக்குட் சென்று ஆத்திரத்தினால் அடுப்பிலே நீரைக் கொட்டியதுதான் காரணமென வெளியாயிற்று! வெளியாகவே ஜடாவல்லவர், தம்முடைய அன்னையின் குற்றத்தை மறந்து "நியாயமெங்கே இருக்கின்றதோ அங்கே ஜகதீசன் கிருபாகடாக்ஷமிருந்து துணைபுரியுமென்பதை நமக்கு ஈசன் இன்று பிரத்யக்ஷமாக விளக்கினான்'' — என்றுள்ளம் பூரித்து, "ஜகதீசனே! உன் அடிமையாகிய திரிபுரசுந்தரியின் அருங்குணம் என்றுங் குறைவுறாதிலக நீ திருவருள் புரிவாயாக'' —என மனத்திலேயே தியானித்துத் தம்முடைய காரியத்திலே கவனஞ் செலுத்துவாராயினர்.

இந்தத் தோசைச் சண்டை ஒருவாரம் வரையில் மாரிகால மழைபோல முழங்கிக்கொண்டிருந்தது. அப்பால் அம்மழையை யடக்கக் கிளம்பிய சூறாவளிபோலக் குடச்சண்டை கிளம்பியது. அது தொடங்கிய ஒருநாள் காலையில் சிறு சிறு தூறல்கள் தூறின. வானமெங்கும் மேகங் கவிந்து கொண்டிருந்தது; இது பெரும் பான்மையரின் மன உற்சாகத்தைக் குறைத்தது; அநேகரை வெளியே போகவொட்டாமற் றடுத்தது. பொழுதையே புலராவண்ணந் தடுத்த இத்தூறல், வெயிலுக்கும் மழைக்கும் தீய்க்கும் பயப்படும் இயல்பினராகிய மானிடரைத் தடுத்ததொரு வியப்பா?—ஆனால் கற்பிற் சிறந்த ஸ்திரீகளையும், உழைப்பிலே உறுதியும் ஊக்கமுங்கொண்டு ஒழுக்கந் தவறாதிருக்கும் ஆடவர்களையும் அது தடுத்தற்கு இயலாததாயிற்று.

ஆகவே, அத்தகைய நற்குணம் அமைந்தவர்களாகிய நமது ஜடாவல்லவரும் திரிபுரசுந்தரியும் தத்தம் கருமத்தை நாடுவாராயினர். ஜடாவல்லவர் தம்முடைய வழக்கம்போல் காவிரி ஸ்நானத்திற்குச் சென்றார். திரிபுரசுந்தரி, கணவன் எழுமுன் எழுதலாகிய தன் வழக்கப்படி எழுந்து வீட்டுவேலை செய்யத்

தொடங்கினள். லக்ஷ்மியம்மாள் எழுந்து மூலையிலே முக்கா டிட்ட தலை முழந்தாளிலேபடியக் கன்னத்தில் கையிருந்து தாங்க வீற்றிருந்தாள்; பெருஞ்சோம்பல் கொண்ட மூதேவியின் அவதா ரம்போல் விளங்கினள்; என்ன செய்வாள்; இவளுக்கு எப்படிச் சுறுசுறுப்பிருக்கும்? சோம்பல், நெடுந்துயில், அகால நித்திரை, வம்பு, பொய், கோள்—முதலிய கொடிய பாம்புகள் வாழும் பெரும்புற்றைப் போன்றதன்றோ இவள் உடல்? இஃதன்றி இவள் உள்ளத்தில் சென்ற வாரத்தில் நடந்த தோசைச் சண்டை யினால் விளைந்த கோபமாகிய கருநாகம் ஒன்று அவைகட்டு அர சாக நட்புக்கொண்டிருக்கின்றதன்றோ?

இந்தக் குணமணி இவ்வாறிருக்கையில் திரிபுரசுந்தரி வாய்க் காலுக்குப் போக இடுப்பிலே குடமெடுத்துக்கொண்டு புறப்பட் டாள். தான் பிறந்த வீட்டிலிருந்து கொண்டுவந்த குடத்தைத் தன் மருமகள் இடுப்பிலே கண்டதும், லக்ஷ்மியம்மாள் "ஓகோ! நமக்கநுகூலமில்லாத இந்த வரட்டுச் சிறுக்கி நமது பாத்திரத்தை யெடுத்தாண்டுடைக்குமட்டுமாயிற்று? சீ! இது கெட்டதே" என்று சினந்து படுத்துக்கொண்டிருந்த புலி பாயவெழுந்தது போல எழுந்து "அடியே ராங்கிக்காரி! குடத்தைக் கீழே வை; இனிமே லிந்தக் குடத்தை யெடுக்காதே; உன்னப்பன் வீட்டி லிருந்து கொண்டுவராவிட்டாலும் டம்பமா யெடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு வாய்க்காலுக்குப் போகமாட்டாயா? குடத் தைக் கீழே வை; அதோ உள்ளேயிருக்கிற உன் சொந்த மாமி யார் கொண்டுவந்த குடத்தை யெடுத்துக்கொண்டு போ; இதை ஸ்ரீமதிக்குக் கொடுக்கவேண்டும்; எடுத்து உடைக்காதே" என்று சொல்லி வேட்டை நாய்போல் விழுந்து குடத்தைப் பிடுங்கிக் கீழே வைத்துவிட்டுப் பழையபடி தானிருந்த மூலையில் வந்துட் கார்ந்து நடந்தவைகளைப் பன்னிப் பன்னி முணு முணுத்து விம்மிக் கண்ணீருகுக்கலானாள். திரிபுரசுந்தரி "ஐயோ! என்ன பாபம்! ஆ! தெய்வமே என்ன செய்வேன்!—எனக்கொரு சாவு வாராதா! நானிப்படித் தவிக்கவா பிறந்தேன்?" என்று மனம் நொந்து கண்ணீர் விட்டழுதுகொண்டு சமையலறைக்குட்சென்று அங்கே யிருந்த ஒரு பெருங் குடத்தை யெடுத்து இடுப்பில் வைத் துக்கொண்டு வாய்க்காலுக்குப் போனாள். அக்குடம் திரிபுர சுந்தரியை மறைத்தது. அவள் கர மதனைத் தழுவிப் பிடிக்கச் சிரம்பட்டது! உண்டோ இல்லையோவெனச் சந்தேகிக்கத் தக்க

இடை ஒசிந்தது! ஒரு பூங்கொடியின் மீது ஒரு பர்வதத்தைச் சுமக்கவைத்ததுபோலிருந்தது! இச்சமயம் இவளுக்கு இரங்குகிறவன் ஈசனை யன்றி யுண்டோ?—அரசு அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும் என்பது பழமொழியல்லவா?—பார்ப்போம் பொறுத்திருந்து—இப்படித் திரிபுரசுந்தரி வாய்க்காலுக்குச் சென்றதும், இவள் கற்பிற் சிறந்த உத்தமி, இவளை நாம் இம்சிப்பதாகாது—எனக்கருதி இரக்கங்காட்டியதுபோல் மழைத் தூறல் நின்றது. வானமும் வெளிவாங்கியது. ஈசுவர ஸந்நிதியிலே திரை நீக்கப்பட்ட தருணம் அறிந்து தரிசனஞ்செய்ய முன் வரும் பரமபக்தன்போல் மேகமாகிய திரை நீங்கியதும் அருணன் மகா பதிவிரதா சிரோமணியாகிய திரிபுரசுந்தரியைத் தரிசிக்க அவாக்கொண்ட பரமபக்தன்போலத் தோன்றினன். இப்பொழுது திரிபுரசுந்தரியினிடம் மிகுந்த அன்புடைய அடுத்த வீட்டு நாகம்மாளும் வாய்க்காலிலிருக்கக்கண்ட திரிபுரசுந்தரியின் உள்ளமும் மெய்யடியார் ஒருவரை யொருவர் சந்திக்கநேர்ந்த காலத்திலடையும் மகிழ்ச்சியை யடைந்தது!—திரிபுரசுந்தரி அவளுடன் பேச வெண்ணிக் குடத்தைத் துறையிலே வைத்துவிட்டு அவளிருந்த துறைக்குச் சென்றாள்.........இச்சமயம் லக்ஷ்மியம்மாள் அங்கு வந்தாளாதலால், குடம்மாத்திர மிருக்கக்கண்டதும் ஒரு கள்ள எண்ணத்துடன் அக்குடத்தை எடுத்துக்கொண்டு காற்றினுங் கடிய வேகமாய் வீட்டிற்குப் போய்விட்டாள். திரிபுரசுந்தரி பேசித் திரும்பவுந் துறைக்கு வந்து பார்த்துக் குடத்தைக் காணமையால் திடுக்கிட்டுவாய்க்காலிலே உருண்டு விழுந்து கிடக்குமோ வென்றெண்ணி ஜலத்திலே நெடுநேரந் தேடினாள். அகப்படாமையினால், அகதி பெறுவது பெண்பிள்ளை அதிலும் வெள்ளி பூராடம் என்பதுபோலிருக்கின்றதே நமது கதி! மாமி யென்னும் பத்ரகாளியினிடங்கிடந் துழலவேண்டியதுதான் இந்தப் பிறவிக்கு ஏற்பட்ட வினைக்கீடாக அநுபவிக்கவேண்டிய அநுபவம்போலிருக்கின்றது. என்ன செய்யலாம்!—பாபத்திற் கேற்பட்ட தண்டனையை அநுபவியாவிடில் தீருமா? அநுபவிக்கின்றேன்'' என்று கருதிக் குளித்துவிட்டு வெறுங்கையோடு வீட்டுக்குச் சென்றாள். மாமி ஒன்று மறியாதவள்போ லிருந்தாள். திரிபுரசுந்தரி சற்று நேரம் பார்த்துவிட்டுப் பிறகு மாமியினிடம் உண்மையைச் சொன்னாள். லக்ஷ்மியம்மாள், உடனே வெகுளி யென்னும் வெற்பின் மீதேறி யுட்கார்ந்துகொண்டு திரிபுரசுந்தரியை நோக்கி, பேச்சுக்

கொரு பழமொழியுடன் தன் மனங்கொண்ட மட்டும் இகழ்ந்து பேசி...........“இன்றைக்கு என் குடத்தையெடுத்துக்கொண்டு போ! நாளைக்கு இக்குடத்தையெடுக்கப்படாது. நாளைக்கு நீ வேறு குடம் எப்படியாவது தேடிக்கொள்” என்று உத்தரவு பிறப்பித்து அக்குன்றின் மீதிருந் திறங்கி அடுத்த வீட்டுக்குப் போய் விட்டாள். இப்பொழுது ஜடாவல்லவர், காவிரியிலிருந்து வீட்டுக்குள் வந்து நுழைந்தார். திரிபுரசுந்தரி அவரிடம் நடந்ததைத் தெரிவித்துத் தான் அடுத்தவீட்டு நாகம்மாளிடம் பேசச் சென்றதையும் அங்குத் தான் தாமதிக்க நேர்ந்தது ஒரு பரோபகாரத்தின் பொருட்டென்றும் கூறி விசனித்தாள். ஜடாவல்லவர், “குடம்போனாலென்ன குடி முழுகிப்போய்விடுமா? பரோபகாரத்தைப் பெரிதென நினைத்து வாய்த்த தருணத்தை வீணாக்காமல் நிறைவேற்றியதுபற்றி நான் மகிழ்கின்றேன்”—என்று சொல்லிவிட்டுப் பூஜைக்குப் போய்விட்டார்.

நிற்க—நாம் நிற்க என்னும் பதத்தை அடிக்கடி உபயோகித்து வருகின்றோமே யொழிய லக்ஷ்மியம்மாள் தன்னுடைய தீயகுணத்தை விட்டு நீங்கி நிற்கின்றாளில்லை. சொல்லிலே நிற்காமையினால், அந்தப் பிறப்பை வசைபாடி ஒழித்து விடுவோமா என்னும் நினைவு அடிக்கடி யுண்டாகின்றது. ஆனால் மகா பதிவிரதையாகிய திரிபுரசுந்தரி, முன் தமயந்தி வேடனை வனத்திலே எரித்ததுபோலக் கற்பினால் இவளை எரித்துவிடாமல் எதையும் பொறுத்திருப்பதை நோக்கும்போது பொறுமையினுஞ் சிறந்ததில்லை என்பதை மனமுணர்கின்றமையின் அவள் வழியேவிட்டுக் காலத்திற் கெதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதா யிருக்கின்றது. நாமிப்படி யிருக்கின்றமையின் லக்ஷ்மியம்மாள், பொறுமை பெருமைதரு மென்பதை மறந்து தன் வேலையை வெகு துணிவோடு செய்கின்றாள். அநுகூலமான காற்றடிக்கும்போது மரக்கலம் கடலிலே கலக்கமின்றிச் செல்வதுபோல அவள் தன் வழியிலே செல்கின்றாளாகையால், அவளுக்கும் இன்றைப்போது நல்லதாகவே கழிந்தது. மறுநாள் உதயமாயிற்று. திரிபுரசுந்தரி வழக்கம்போல் குடமெடுத்துக்கொண்டு நீர் திரட்டப் புறப்பட்டாள். கண்ட லக்ஷ்மியம்மாள், “வெறும் வாயை மெல்லுகிறவள் கொஞ்சம் அவலகப்பட்டால் விடுவாளா?” என்பதற் கேற்றபடி “நான் என்ன சொன்னேன்? குடத்தை மரியாதையோடு கீழே வை. நான்தான் இன்றைக்குக் குடந்தர

மாட்டேனென்று சொன்னேனே! எடுக்காதே! குடமில்லா விட்டால் இதோ இருக்கிற மண் தோண்டியை யெடுத்துக்கொண்டு போ" என்று கூறிக் கடுஞ்சினத்தோ டெழுந்திருந்து திரிபுரசுந்தரி இடுப்பிலிருந்த செப்புக் குடத்தை வெடுக்கென்று பிடுங்கிக் கீழேவைத்து மண் தோண்டியைக் கையிற் கொடுத்தாள். இது, நல்லதங்கைக்கு அவள் அண்ணி வாழைமட்டையைக் கொடுத்து அடுப்பெரிக்கும்படி கூறியதுபோ லிருந்தமையின், எழுதிக் கொண்டே வந்த எமது கை யிறகு அசைவற்று நிற்கவும் கண்கள் மூடவும் எமதுள்ளம் அந்தப் பதிவிரதையை யொரு கணநேரந் தியானித்தது! அப்பொழுது "ஆ ஜகதீசா! என்ன கஷ்டம்! என்ன கஷ்டம்!" என்று கூறிய திரிபுரசுந்தரியின் குரல்கேட்டுத் தியானத்திலிருந்து மனம் கலைந்தது. உடனே கையிறகு தன் வேலையைத் தொடங்கி யெழுதியது—திரிபுரசுந்தரி, "இந்த அநியாயத்தை ஊராருமறியட்டும்; இதென்ன ஒருகாலும் விடிவில்லாத பெருந் தொந்தரவாகப் போயிற்று; நாம் பொறுத்திருக்கப் பொறுத்திருக்கப் பொங்கி மேற் கிளம்புகிறது இவளகம்"—என்று நினைத்து, அந்த மண் தோண்டியை எடுத்துக்கொண்டு ஜலமெடுக்கப் புறப்பட்டுப் புறக்கடை வாயிற்படியைத்தாண்டிச் சுமார் இருபதடி தூரம் போனாள். உடனே லக்ஷ்மியம்மாள் "என்ன! ஒரு சிறுக்கிக்கு வந்த ரோஷத்தைப் பாரு; கல்லான குடத்தைத் தொலைத்தாள்; இப்போது வெட்கமில்லாமல் மண் தோண்டியை யெடுத்துக்கொண்டு புறப்பட்டு விட்டாள்? ஐயோ! ஊரார் கண்டால் நம்மையன்றோ இழிவு படுத்துவார்கள்? நம் மானம் போகுமே!" என்று நினைத்துக் கோபாவேசத்தோடு எழுந்து திரிபுரசுந்தரிக்கு முன்போய் மறித்து நின்று "ஏண்டீ சிறுக்கி! நான் சொன்னதுக்கு ரோஷம் பொத்துக்கொண்டு வந்து விட்டதோ! ஏன் உன் அப்பன் வீட்டிலிருந்து கொண்டு வருகிறதுதானே? இல்லா விட்டால் உன்னும் படையானைக் கேட்கிறதுதானே? இதற்கெல்லாம் அமுக்கமா யிருந்துவிட்டு இப்போது ரோஷம்வந்து என்ன பண்ணுவது? அதற்கு (பக்கத்திலிருந்த பாழுங் கிணற்றைக்காட்டி) இதில் விழுந்து உயிரை மாய்த்துக்கொள்கிறதுதானடி நொறடி"—என்று கையை மடக்கிக்கொண்டு ஓங்கி முகத்திலிடிக்கப் போனாள். அப்பொழுது திரிபுர சுந்தரி அவள் கையிடிக்குப் பயந்து-சற்றுப் பின்னே நகர்ந்தாள். நகரவே லக்ஷ்மியம்மாள்

இடிக்கப்போன வேகத்தினாலும், இடிக்கத் தவறிவிட்டதாலும் அங்கிருந்த பாழுங் கிணற்றில் அப்படியே திடீரென்று விழுந்து விட்டாள். அந்தோ! லக்ஷ்மியம்மாள் விழுந்த தக்ஷணமே அந்தக் கிணற்றோரத்திலிருந்த தென்னைமரத்தில் தேங்காய் பிடுங்கிக்கொண்டிருந்தவன் கைக்குலை நழுவி லக்ஷ்மியம்மாள் முழந்தாளில் (இழந்தாளென்று சொல்லும்படி) விழுந்தது. தவிர மொட்டைத்தலையிலடிபட்டு இரத்தம் ஊற்றுப் பெருகுவது போல் பெருக ஆரம்பித்துவிட்டது. தேங்காய் பிடுங்கினவன் தன்மேல் பழிவந்துவிடுமென்றஞ்சித் தக்ஷணமே மரத்தைவிட்டிறங்கி மாயமாய் ஓடிவிட்டான். தன்னைத் துன்பத்துக்காளாக்கி வந்த மாமியார்தானே விழுந்தாள் நமக்கென்ன வென்றிராமல் "ஐயோ! கிணற்றில் விழுந்துவிட்டாளே!" என்று முதலைவாயிற்பட்ட கஜேந்திரனைப் போல் திரிபுரசுந்தரி வீறிட்டு ஒரு பெருஞ் சப்தம் போட்டுவிட்டு வீட்டிற்குள்ளோடி வாசல் விளக்கும் சௌந்தரத்தை யழைத்து "யாராவது புருஷர்களை யழைத்து வா"வென்று கூறிவிட்டுத் தான் சென்றதும் வந்ததும் தெரியாதபடி கிணற்றுக்கருகில் வந்துவிட்டாள். நல்லவேளையாய் இதற்குள், பக்கத்து வீட்டு மாடியிலிருந்து பாழுங் கிணற்றண்டை மாமியார் மருமகளிருவருக்கும் நடந்த வாக்குவாதத்தையும், பின் லக்ஷ்மியம்மாள் கிணற்றில் விழுந்ததையும் ஆதியோடந்தமாய்ப் பார்த்துக்கொண்டிருந்த துரைசாமி யென்னும் இருபத்தைந்து வயதுள்ள பிராமணச் சிறுவன் சரேலென்று மாடியிலிருந்து கீழேயிறங்கி, இன்னும் இரண்டுபேர்களை யழைத்துக்கொண்டு, கிணற்றண்டை வந்து "அடாது செய்தாள் படாது படுகின்றாள்! சிறுபெண்ணைக் கன்னத்தி லிடித்துக் கிணற்றில் தள்ளப் பார்த்தாள் பாவி! கேடுவான் கேடு நினைப்பான் என்கிறபடி தனக்கே கேடு தேடிக்கொண்டாள்! தன்வினை தன்னைச்சுடும்"— என்று ஏசிக் கெடுமதிகொண்ட லக்ஷ்மியம்மாளை வெளியேற்ற முயற்சி செய்தான். இந்தத் துரைசாமி இங்ஙனம் தோன்றி நியாயம் பேசியதைக் கேட்டதும் திரிபுரசுந்தரி, கடவுளிடத்தில் சித்தஞ் செலுத்தி 'எங்கும் நிறைந்த பரம்பொருளாகிய உனக்குத் தெரியாத செயலுண்டோ? உன்னை யொளித்தொன்றைச் செய்வதியலுமா? உன் அடிமையை நீ காட்டிக் கொடுப்பாயா? உன் தன்மை கண்டேன்? இனி உன்னை எந்த நாளும் மறவேன்"—என்றெண்ணிப் பரம்பொருளைத் துதித்துத்

தொழுதாள். நன்றுங் காலத்தும் அன்றுங்காலத்தும், ஈசன் திருவடியையே நல்லாருள்ளந் தியானிக்கு மல்லது பிறிதிற் செல்லாது. மாசற்றார்க்கு ஈசன் திருவருளு மிப்படித்தான் தருணத்திலே வியப்புறுமாறு வந்து வாய்க்கும்!" "**கொழுநன் சொற்கடவாதுரை கொள்கையே, பழுதில் கற்புடைப் பாவையர் செய்கையே**"—என்னும் உயரிய இலக்கண மமைந்தவளன்றோ திரிபுரசுந்தரி? இவள்பால் இரக்கங் கொள்ள ஈசனு மறப்பனோ? கேடு நினைப்பவர்களுக்குப் பாடுகொடுத்துப் படுநரகுய்ப்பதும் அவன் கடனே யன்றோ? அதனை யியற்றுவதிலே அவன் சோம்புவனோ? ஆகலின் நல்வினை தீவினை யிரண்டின் பயனும் ஒருங்கே நிகழ இன்றைப்பொழுது புலர்ந்தது. புலர்ந்தபொழுது, 'மகாபாபியும் கொடு நீலியுமாகிய மாமியை நாம் பார்க்கவேண்டியதாயிருக்கின்றதே! இந்தக் காலையில் பாபியின் தரிசனத்தை மறைக்கலாகாதா" என்று ஈசனிடம் முறையிட அதற்கிரங்கிய ஈசன் பாபியைப் பார்க்கவொட்டாமல் மறைத்ததுபோல ஒரு மேக படலந் தோன்றி அதனை மறைத்தது. இச்சமயம் லக்ஷ்மியம்மாளை மூவரும் சேர்ந்து கிணற்றிலிருந்து தூக்கிப் பிணம்போலக் கரையிலே போட்டார்கள்.

அப்பால் சற்றுப் பொறுத்து லக்ஷ்மியம்மாள் பிரஞ்ஞை யடைந்தாள். இதற்குள் அவ்வூரினர் யாவரும் வந்து கூடிவிட்டனர். லக்ஷ்மியம்மாளுக்கு எழுந்து நடக்க முடியாமையால் அவளை நான்கு பேராகத் தூக்கிக்கொண்டுபோய், பிணத்தைக் காட்டிலே சேர்ப்பதுபோல வீட்டிலே சேர்த்தார்கள்,........ ...............இப்பொழுது ஜடாவல்லவரும் வீடுவந்து சேர்ந்தார். அவரிடம் பக்கத்திலிருந்த நண்பரொருவரும், துரைசாமியும், சௌந்தரமும் காலையில் நடந்த கூத்துக்களை விவரமாய்த் தெரிவித்தனர். இச்செய்தி அவர் செவியைத் துளைத்தது; மனத்தைச் சுட்டது. அவமானம் அவர் பிடரியிலே ஏறி யுட்கார்ந்து அழுத்திற்று. அவர் செவியை இருகரங்களும் பொத்திக்கொண்டன! அவர் தமது தொடையிலே முழங்கையை வைத்துக்கொண்டு குனிந்துவிட்டார். அவர் உடல் எரிவாய்ப் புழுவைப்போலத் துடித்தது. அவருக்குப் பேச நாவெழவில்லை. கண்கள் நீருகுத்தன. ஐயோ! இவர் நெஞ்சத்திற் குடிகொண்டிருப்பது மானமல்லவா? இப்பொழுது மணி பதினொன்றடித்தது. உறவினரும் நண்பரும் விடைகொண்டு சென்றனர். லக்ஷ்மியம்மாளுஞ்

சிறிது தெளிவடைந்து பேசத் தொடங்கினாள். பின்பு ஜடாவல்லவர் ஸ்நானஞ் செய்து பூஜை செய்யப் போய்விட்டார். திரிபுரசுந்தரியும் ஸ்நானஞ்செய்து சமையல் செய்யத் தொடங்கினாள். பின்பிருவரும் பகல் ஒருமணிக்கு அன்று போஜனஞ் செய்தார்கள். போஜனமான பின்பு ஜடாவல்லவர் திரிபுரசுந்தரியை ஆதியோடந்தமாய் விசாரித்தார்; அவள் நடந்ததை நடந்தபடி சொல்லக்கேட்டு ஆச்சரியமடைந்து "அந்தோ! ஒரு பெண்பிள்ளைக்கு இவ்வளவு பொறுமையும், இவ்வளவு கோபமும், இவ்வளவு தாபமுமா இருக்கவேண்டும்! இவர்களெல்லாம் ராக்ஷஸ கணத்தைச் சேர்ந்தவர்களா யிருக்கவேண்டும். ஆ! நாம் எவ்வளவோ பொறுத்து மனத்திற் கபடமில்லாமல் அன்னை என்கிற மரியாதை தவறாமல் நடந்துவந்தோம்; நாமே இப்பாடு படும்படியாயிற்று. சகித்தற்கரிய அவமானமடைய நேரிட்டது! ஆ! ஒரு வீட்டில் மாமி, மருமகள், பிள்ளை மூவரும் கோபிகளாயும், மானஹீனராயும், மனம் பொறுக்காதவராயும் இருப்பாராயின், அவ்வீட்டிலுண்டாகும் அநர்த்தங்களை இவ்வளவு அவ்வளவென்று அளவிடப்படுமா? இந்த வைபவத்தில் பால்யவிதந்துவான நாத்தி ஒருத்தி சேருவாளாயின் அதைச் சொல்லவும்வேண்டுமா? இதனாலன்றோ அநேக ஏழைக் குடும்பங்களில் தலைவனாயிருப்பவன் அவமானமடைவதோடு பிறர் நகைக்கும்படியான ஈனஸ்திதிக்கும் வந்துவிடுகிறான். இத்தகைய குடும்பத்திலிருந்து எவனும் நல்லபேர் வாங்குவதருமை! எவனொருவன் நல்லபேரெடுக்கின்றானோ அவனைத் தெய்வமென்றெண்ணவேண்டும்" என்றெண்ணி எப்பொழுது உன் திருவடிக்குப் பாத்திரவானாகக் கொண்டு, கவலைக் கடலினின்று கரையேற்றுவாயெனக் கடவுளைத் தியானித்தவாறே தம் வேலைக்குச் சென்றார்.



## அத்தியாயம்—12



"அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது"—(குறள்)

மானிடர்களுக்குரிய குணங்கள் ஒவ்வொன்றும் தன்னையடைந்தவனைத் தன் வழியிலே செல்லும்படி வைத்துத் தன்னால் அடையத்தக்க பயனையும் அடையும்படி செய்கின்றது. நல்ல

குணங்களை யடைந்தவன் நன்மைகளையும் கெட்ட குணங்களை யடைந்தவன் தீமைகளையும் அடைந்து வருவதைப் பிரத்யக்ஷத்திலே கண்டும், உலகத்திலே தீயகுணங்களைக் கைக்கொண்டு அவற்றால் தீமைகளை யடைந்து வருந்துகிறவர்களே மிகுதியாகக் காணப்படுகின்றனர். அப்படிப்பட்டவர்கள், சையெனத் திரியேல்— என்ற ஔவைப் பிராட்டியின் திருவாக்கை மறப்பதனால், அவர்களைச் சை யென்று பேசி ஊராரும் உறவினரும் இகழ்ந்து ஏசுகின்றனர். இந்த கதிக்கே லக்ஷ்மியம்மாளும் பாத்திரமாயினள். இவளை மானிடப் பிறவியிற் சேர்ந்தவளாக எண்ணி ஒருவரும் மதிப்பதில்லை. அப்படித் தன்னை யொருவரு மதியாதிருப்பதனால் இவளுக்கொரு அவமானமும் மனத்திலே தோன்றுவதில்லை. இன்றைக்குச் சண்டை போட்டவளோடு மானவெட்கமின்றி நாளைக்கு உறவாடிப் பேசுவாள்; இன்றைக்கொன்றை நியாயம் தருமமென அநுஸரிப்பாள்; நாளைக்கு அதனையே நியாயமல்லவென்றும் தர்மமில்லையென்றும் கூறுவாள். இதனால் இவளைக் காணும் மதியூகிகள், அறத்தையும் அருளையுங் கொன்று தின்ற பூதமோ இவளென எண்ணி வியப்பார்கள். இத்தனை நாளாக வாசற்சண்டை, அடுப்பங்கரைச் சண்டை, புறக்கடைச் சண்டை, குழந்தைச் சண்டை, பெரியார் சண்டை, வாய்க்கால் சண்டை, ஆற்றங்கரைச் சண்டை, குளத்தங்கரைச் சண்டை இவைகளிலே காலந்தள்ளி வந்தவளல்லவா இந்த மகராஜி! இவளோடு உறவாடி இவள் மனப்படி விளையாடி வந்த பொறுமையாகிய உட்பகை இவள் காலை முறித்துவிட்டமையால், இவள் இப்போது தன் காலத்தைக் குத்துவலியோடு போராடுவதிலும் அரற்றுவதிலும் தனிச்சிறையிருப்பதிலும் கழிக்கலானாள்; ஜடாவல்லவரைப் பொறுக்கொணாத தொந்தரவுக்குள்ளாக்கினாள்; இரவெல்லாம் ஜடாவல்லவரைத் தூங்கவிடாமல் தன் பக்கமிருந்து ஒத்தடங் கொடுக்கவும் திரிபுரசுந்தரியை அவ்வப்போது வேண்டுவனவற்றைப் பக்குவப்படுத்திக் கொடுக்கவும் வருத்தி மகிழ்ந்தாள். அறிவுடையவரன்றோ தம்மால் பிறர் வருந்துவது கூடாதென்னுஞ் சிறந்த எண்ணங்கொண்டு தமது துன்பஞ் சகித்திருப்பர்?

இவ்வாறு இவள் நான்கு நாள் தொந்தரை செய்து வந்ததுமன்றி, பிறகு "நான் இறந்துபோய் விடுவேன்; இந்த கண்டத்திற்கு தப்பமாட்டேன்; என் கண்ணான குழந்தைகளை நான் பார்க்காமல் எப்படிச் சாவேன்!" என்று முணுமுணுத்து ஜடா

வல்லவரைக் கறையானைப்போல் அரித்தாள். ஜடாவல்லவர் ஸ்ரீமதி புருஷனுக்கும் ஜானகி புருஷனுக்கும் கடிதமெழுதினர். ஜானகியை அவள் புருஷன் நான்கு நாளில் அனுப்பித் தந்து நல்லவனானன். ஸ்ரீமதியின் புருஷனிடமிருந்து கடிதங்கூட வரவில்லை. அதன் பொருட்டு ஜடாவல்லவரை லக்ஷ்மியம்மாள், உயிரோடு மனிதனைத் தின்னுங் கழுகைப்போலக் கொத்திப் பிடுங்கினள். ஜடாவல்லவர், அத்துன்பம் பொறுக்கமாட்டாமல் தாமே தஞ்சாவூருக்குப் போய், மாப்பிள்ளையைக் கெஞ்சி யிரந்து ஸ்ரீமதியை யழைத்து வந்தார். ஸ்ரீமதியும் ஜானகியும் தங்கள் தாயின் அடாத செய்கைகளைக் கேட்டு, "இந்தப் பாவி வயிற்றிலா நாம் வந்து பிறக்க வேண்டும்? குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பாய் முளைத்தாளே" என்று கருதி வருத்தமும் அவமானமுமடைந்தனர்.

பின்னர்ச் சுமார் இருபது நாட்களுக்கெல்லாம் லக்ஷ்மியம்மாள் முற்றும் சௌக்கியமடைந்தாள். ஆனல் தேங்காய்க்குலை விழுந்த முழந்தாள் நடக்கச் சுவாதீனமற்றுக் கோலூன்றி நடக்கும்படியாயிற்று. "இது இவளுடைய துர்க்குணத்திற் கேற்பட்ட தண்டனை என உலகமறியக் கடவுளால் விதிக்கப்பட்டதுபோலும்" என்றனர் ஊரார். ஆனல் லக்ஷ்மியம்மாள் தன் குற்றம் உணர்ந்தாளில்லை. அவமானம் அவளைப் பாதித்தது. அதனல் அவள் வெகு நாள் வெளியே வராமலிருந்தாள். இப்பொழுது அவள் புதிதாகப் புருஷனை யிழந்தவள் போலக் காணப்பட்டாள்; ஜடாவல்லவருடன் சில வேளை பேசுவதும் சில வேளை பேசாமலும், திரிபுரசுந்தரியோடு அதுவுமில்லாமலுமிருந்தாள்; தன் குடத்தை யெடுக்க வேண்டாமென்று சொல்லிவந்ததையும் கட்டோடு நிறுத்திவிட்டாள்; ஸ்நானஞ்செய்து விபூதி ருத்ராக்ஷ மணிந்து இலையில் போட்டதை வாய் பேசாமல் தின்றுவிட்டுக் கையில் ருத்ராக்ஷமணி மாலை யொன்று வைத்துக்கொண்டு சதாசிவ சிவவென்று வாயில் முணுமுணுத்தபடி உருட்டி வரலானள். பின்ன ரொருநாள் ஜடாவல்லர் தம் நண்பருடன் பேசிக்கொண்டிருக்கையில் லக்ஷ்மியம்மாள் குடத்தை ஒளித்து வைத்தது வெளியாயிற்று. இதனலும் அவள் அவமான மடைந்தாள்; பின் உயிர்ப்பிணமானள்; அதன் பின் சில நாள் பைத்யமாயிருந்து பாய் சுரண்டினள்; அப்பால் அதே நோயாய் மரணமடைந்தாள்.

# அத்தியாயம்—13

"கைப்பொருள் கொடுத்துங் கற்றல் கற்றபின் கண்ணுமாகும்
மெய்ப்பொருள் விளக்கும் நெஞ்சின் மெலிவிற் கோர் துணையுமாகும்"—

இருந்தவன் வாழ்வு செத்த பிறகல்லவா தெரியும் என்பது முதுமொழி யல்லவா? லக்ஷ்மியம்மாள் இங்ஙனம் இறக்கவே அவ்வூராரும் உறவினரும், "அப்பா பொறுமையென்னும் வனத்தைத் திரிபுரசுந்தரி தன் பொறுமையால், முன் முக்கண்ணன் முப்புரத்தைச் சிரித்து எரித்ததுபோல் எரித்து அழித்தாள்—என்றும்—ஜடாவல்லவரைப் பிடித்த சனியன் விட்டது—என்றும்—பொறுத்தார் பூமியாள்வார் பொங்கினர் காடாள்வார்—என்றும்—பதிவிரதை பாவத்தைக் கொட்டிக்கொண்ட இந்த விதவை எதைத் தன்னோடு இப்போது வாரிக்கொண்டுபோனாள்; பாப மூட்டையைத்தவிர வேறுண்டோ?—என்றும்—அப்பப்பா! இவளுடைய நரகதண்டனை பெரிதேயாகும்!—என்றும்—கூறுவாராயினர். இவைகளையெல்லாம் ஜானகியும் ஸ்ரீமதியும் செவிகுளிரக் கேட்டு விட்டுத் தத்தம் புருஷனிடம் போய்ச் சேர்ந்தனர். லக்ஷ்மி யம்மாளின் உத்தரகிரியைகளுக்கும் அவள் பெண்களைப் புருஷன் வீட்டிற்கனுப்புவதற்கும் ஏற்பட்ட செலவிற்காக, ஜடாவல்லவர் தாம் ஈடாக வைத்திருந்த நிலங்களிற் சிலவற்றைச் சுத்தக் கிரயத்திற்கு விற்று விட்டார். பட்டகாலிலே படும் கெட்ட குடியே கெடும்—என்பதற்கிணங்க இப்படி அடிக்கடி எதிர்பாராத செலவுகளும் வீண் செலவுகளும் ஏற்பட்டமையின், கடைசியாக இவர்க்கு ஓர் ஏக்கர் நிலமும் ஒரு வீடும் முனிஸீப் வேலையுந்தான் மீந்தன.

ஜடாவல்லவர், துஷ்டர்களுடைய கூட்டுறவை ஒரு கணப்போதும் விரும்பாமல், பெருமை தரத்தக்க பெரியவர்களுடைய நட்பை எப்போதும் விரும்பித் தருமத்தைவிட வேறுகதியில்லை என வெண்ணித் தமது ஒழுக்கத்தினின்று சிறிதும் வழுவாதிருந்தமையின், பாமரர் முதல் பண்டிதர் ஈறாக யாவரும் இவருடைய பேச்சிலே நம்பிக்கையும் நடக்கையிலே மகிழ்ச்சியும் கொண்டு தங்கள் விசுவாசமாகிய அருந்துணையை அவர்க்கோர் அரணாக நிறுத்தினர். ஆகவே அந்நெறிதவறாத அருங்குணமணியாக

விளங்கும் ஜடாவல்லவர்க்கு நேரிட்ட வறுமைத் துன்பம், சந்திரன் முன்னே வெப்பம் போலவும், சாதுக்களின் முன் அறியாமையாகிய இருள்போலவும், கற்றோரின்முன் கயவரின் பேச்சுப் போலவும் நிலைத்திராமல் மாறியது. இப்பொழுது ஜடாவல்லவரின் உள்ளங் கரை கண்ட மாலுமியின் உள்ளம்போல மகிழ்ச்சியடைந்தது. தலைச்சுமையை யிறக்கிய கூலிபோல் அவர் தமது சிரமம் நீங்கியவரானார். திரிபுரசுந்தரி, தன் உடலிலே புறப்பட்ட இரத்தக் கட்டியைக் கத்திக்கிரையாக்கியதுபோல் மனச் சமாதான மடைந்தாள்; செய்கின்றேன் என்று பெரியார்முன் உறுதி கூறிவந்த ஸத்தியவாதி, தன் காரியத்தில் சித்திபெற்றபோது அடையும் மகிழ்ச்சியை யடைந்தாள்.

இப்படி யிவர்களிருக்கையில் ஒருநாள் கிஸ்தி வசூல் கணக்குகளைப் பரிசோதிப்பதற்காக ரெவினியூ இன்ஸ்பெக்டர் அவ்வூருக்கு வந்து கிராமச்சாவடியில் தங்கினார். அவரைக்காண ஜடாவல்லவரும் அவ்வூர் கணக்குத் தில்லைநாயகம் பிள்ளையும் சென்று அவரை வரவேற்று அவர்க்கு வேண்டியவைகளை அவர் விரும்புமுன் வரவழைத்துக் கொடுத்துபசரித்தார்கள்.......................... பின்னர் பகற்போஜனமானதும் இன்ஸ்பெக்டர் கணக்குகளைப் பரிசோதிக்க உட்கார்ந்தார். இவர் ஜாதியிலே கிறிஸ்தவர்; நல்ல யோக்கியர்; நன்மை கடைப்பிடித் தொழுகும் நற்குணசீலர்; ஆனால் நீதியிலே நெருப்புத்துண்டம் போன்றிருப்பவர். இவர் கச்சேரி செய்யத் தம்முன் தமது கைப்பெட்டியை வைத்துக்கொண்டு ஒரு ஜமக்காளத்தில் உட்கார்ந்தார். உட்கார்ந்த இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் வாயில் ஜாண் நீளச் சுருட்டொன்றை வைத்துப் பிடிக்கத் தொடங்கினார். ஜடாவல்லவர் அதுகண்டு வெறுப்புக்கொண்டார். இப்போது விசாரணையும் தொடங்கப்பட்டது.

இன்ஸ்பெக்டர்.—(ஜடாவல்லவரை நோக்கி) போஜனமாயிற்றா?

ஜடா.—ஆயிற்று.

இன்.—எங்கே உம்முடைய கிஸ்தி வசூல் கணக்கைக் கொண்டுவாரும் பார்ப்போம்.

ஜடாவல்லவர், கூனிக்குறுகிக்கொண்டு "ஐயா! இதோ கொண்டுவந்தேன்" என்று தம் கமுக்கட்டிலிருந்த கணக்கையெடுத்து இன்ஸ்பெக்டர் கைப்பெட்டிக்கருகில் வைத்துவிட்டு,

என்ன நேரிடுமோவென்று பயந்து கைகட்டிக்கொண்டு தேவ ஸந்நிதானத்தில் நிற்பதுபோல் நின்று கொண்டிருந்தார். இப்பொழுது இன்ஸ்பெக்டர் தமது வாய்ச்சுருட்டைத் தட்டிக் கைப்பெட்டியின் ஒரு மூலையில் வைத்துவிட்டு " எங்கே உமது கணக்கு இதுதானா?" என்று கையிலெடுத்துப் பிரித்துப் பார்த்தார்; பார்த்துக்கொண்டே "என்ன கடைசி வாயிதாக்கால முடிந்தும் இன்னும் பாக்கி வைத்திருக்கிறீர்? ஏன் இவ்வளவு தாமதம்? 'பிராமணா போஜனப் பிரியா' என்பதுபோல் நீர் போஜனத்திற்குத் தகுதியா யிருப்பவரே யல்லது வேலையில் சுறுசுறுப்பா யிருப்பவர்போல் தெரியவில்லை" என்று சொல்லிக்கொண்டே மறுபக்கம் பார்த்தார். அதில் இரண்டு மூன்று பேர்வழிகளின் சொத்து, பாக்கிக்காக ஜப்தி செய்யப்பட்டிருப்பதாகக் கண்டிருந்தது. இதைக் கண்டு இன்ஸ்பெக்டர் கக்கடகடவென நகைத்து "இதுவேறு லக்ஷணமா?" என்று தலையை யசைத்து "ஐயா! முனிஷீப்தாரே! ஜப்திசெய்த சொத்துக்களை வரவழையும்;இன்று எல்லாவற்றையும் ஏலம் போட்டுத் தாலூகாவுக்கு ரூபா அனுப்பவேண்டும். தாசீல்தார் இப்பொழுது நெருப்புத்துண்டா யிருக்கிறார். விரைவில் வரவழையும்" என்றார். இதைக்கேட்டதும் ஜடாவல்லவர்க்குத் தாம் தமது அத்தான் வெங்குவையர் வீட்டுக்கதவை ஜப்தி செய்திருப்பதைக் கணக்கிலே காட்டி, சொத்தை அவர் வீட்டைவிட்டு அப்புறப்படுத்திச் சாவடிக்குக் கொண்டுவந்து சேர்க்காமல் தாக்ஷண்யப்பட்டு விட்டிருப்பது ஞாபகத்துக்குவந்தது. வந்ததும் மனந்திடுக்கிட்டு " தாக்ஷண்யம் தன நாசம்—இனி என்ன செய்வது, மூடத்தனமாகவன்றோ முடிந்தது?" என்று தமக்குள்ளேயே நினைத்துக்கொண்டு இன்ஸ்பெக்டரிடம் "இதோ கொண்டுவந்து சேர்க்கிறேன்" என்று கூறிச், சாவடியில் ஓர் அறைக்குள் வைக்கப்பட்டிருந்த ஜப்தி சொத்துக்களைத் தலையாரியைக் கொண்டு இன்ஸ்பெக்டர் முன்னிலையில் சேர்க்கும்படி செய்தார்; பின்பு தாம் செய்த தப்பிதத்தினின்று தப்ப யாதொரு உபாயமுந் தோன்றாமல், "விஷயம் மிஞ்சிப்போயிற்று; இனி அதைக் குறித்து என்ன செய்வது" என்றெண்ணிச் சஞ்சலத்துடனின்றார். இப்பொழுது ஜடாவல்லவர் இன்ஸ்பெக்டர்முன், சீட்டு விளையாட்டில் மூன்றும் தடவை தோல்வி யடைந்து காசு பறிகொடுத்தவர்போலிருந்தார். இன்ஸ்பெக்டர் சற்றுப்பொறுத்து எழுதிக்கொண்டிருந்த பேனா நுனியைப் பல்லிற் கடித்துக்

கொண்டு "சொத்துக்கள் யாவும் வந்தனவா?" என்று கேட்டார். ஜடாவல்லவர் "யாவும் வந்தன"—என்று ஈனசுரத்துடன் பதிலளித்தார். இனிஸ்பெக்டர், "என்ன, ஜடாவல்லவரே, போஜனம் பூர்த்தியாயிற்றே இல்லையோ? ஏன் கிணற்றிலிருந்து பேசுவதுபோலப் பேசுகின்றீர்? எங்கே நான் சொல்லிவருகிற பேர்வழிகளின் சொத்துக்களைத் தனித்தனியே பிரித்துவைக்கச் சொல்லும் பார்ப்போம்"—என்று முறையே வாசித்தார். அவ்வாறே சொத்துக்கள் பிரித்து வைக்கப்பட்டு வருகையில் ஜப்தி செய்திருக்கும் வெங்குவையர் வீட்டுக்கதவு காணப்படவில்லை.

இன் :—எங்கே ஐயா முன்ஸீப்! ஒரு பேர்வழியின் சொத்தைக் காணோம். ஜப்தி செய்ததாக மாத்திரம் காட்டியிருக்கிறீரே?

ஜடா :—ஜப்தி செய்தது உண்மைதான். சாமானை இன்னும் சாவடிக்குக் கொண்டுவந்து சேர்க்கவில்லை.

இன் :—எனக்குத் தெரியுமே நீர் ஈனசுரத்துடன் ஆடு திருடிய குறவனைப்போல் விழித்துக்கொண்டு பதிற் சொன்னபோதே! வெங்குவையர் யார்? உமது பந்துவோ? அல்லது அவர் ஏதேனும் உம்மைக் கேட்டுக்கொண்டாரோ?

ஜடா :—ஆம் வெங்குவையர் என் பந்து; என்னை அவர் ஒன்றும் கேட்டுக்கொள்ளவில்லை. எடுத்துச் சாவடிக்கு அனுப்பச் சாவகாசமில்லாம லிருந்துவிட்டேன்.

இன் :—என்ன ஓய்! நீர் சொல்வது வேடிக்கையாக விருக்கிறது; ஜப்தியாய் இன்றைக்கு எத்தனை நாளாயிற்று? என்ன ஸ்டுபிடிடி (Stupidity)—மூடத்தனமாக ஆன்ஸர் (Answer)—மறுமொழி—பண்ணுகிறீர்! இப்போது யார் எமக்குத்தரம் சொல்வது? உமது பாட்டனா, அல்லது வெங்குவையனா? என்ன நீர் பிராமணராய் இருந்தும் வெட்டியானினுங் கேடுகெட்டுப் போனீர்? என்னெதிரில் நிற்கவேண்டாம்; இதற்கு ஸ்டேட்மெண்டு (Statement)—வாக்குமூலம்—கொடும்! நான் மேலே தாசில்தாருக் கெழுதவேண்டும்—" என்று கோபத்துடன் கூறிக் கிஸ்தி வசூல் கணக்கை மாத்திரம் வைத்துக்கொண்டு மற்ற கணக்குகளை வாரி ஜடாவல்லவர் முன்பு எறிந்தார்.

ஜடாவல்லவர் வாய் பேசாமல் "ஐயோ! இதுவும் ஒரு விதியா?—பேனாவைக் கடித்து எச்சில் செய்த கையினால் வாரி

யெறிந்த கணக்குகளைப் பொறுக்கி எடுக்கவேண்டியதா யிருக்கின்றதே! இந்தப் பாவத்திற் கென்ன செய்வது? ஜகதீசா!'' என்று நினைத்துக்கொண்டு இறைந்துபோன கணக்குகளை மூட்டையாகக் கட்டிக் கமுக்கட்டில் வைத்துக்கொண்டு எமதருமராஜன் முன்பு சித்திரபுத்திரன் நிற்பதுபோல் அவர் எதிரில் நின்றார்.

இன் :—என்ன ஓய் ! சொல்கிறீர் ; நேரமாயிற்று ?

ஜடா :—எஜமான் மன்னிக்கவேண்டும்.

இன் :—செய்த காரியமென்ன ? இப்போது பல்லைக் கெஞ்சுவதில் யாது பயன் ? என்றால் ஒன்றும் முடியாது. நான் மேலே தெரிவித்துவிடுகிறேன். நீர் அங்கே போய்க் கெஞ்சிக் கூத்தாடும் போம்—என்று சொல்லி எழுதுவதற்குப் பேனாவுங் கையுமாகச் சித்தமானார்.

ஜடாவல்லவர் இன்ஸ்பெக்டருக்குக் கோபவேளை யென்றறிந்து வேறு பேசாமல், தாம் இருபது நாட்களுக்கு முன் ஜப்தி செய்ததாகவும் அந்தச் சொத்துக்களைத் தலையாரி வசம் ஒப்புவித்து அப்புறப்படுத்தச் சாவகாச மில்லாமற் போயிற்றென்றும் வாக்குமூலங் கொடுத்தார். அப்பொழுது மணி ஐந்து அடித்தது. உடனே இன்ஸ்பெக்டர் தமது ஆபீஸைக் கலைத்துவிட்டுக் காவிரி நதிக்கரைக்கு உலாவப் புறப்பட்டார். கணக்கப்பிள்ளை முனிஷீப் இருவரும் கூடவே போனார்கள். மூவரும் கரையில் மெதுவாய் நடந்து கொஞ்சதூரம்போய் அங்கே ஒரு பக்கம் ஒரு கற்கட்டு வாகணையில் நதியைப் பார்த்துக்கொண்டு மேற்குமுகமாக உட்கார்ந்தார்கள்.

வசந்தகாலமாகையால் அப்பொழுது வந்துலாவிய மந்தமாருதம் ரமணீகரமா யிருந்தது ? பக்கத்திலிருந்த படுகைச் சோலையின் கண்ணுள்ள கோங்கு, அசோகு, குருந்தம், மரா, குரா, இந்தாலம், தமாலம், சுரபுன்னை, மா, பலா, தேவதாரம், அகில், சந்தனம், சண்பகம், பாதிரி, வேங்கை, நாவல், இலந்தை, அத்தி, அரசு, ஆல், புளி, நெல்லி, அருநெல்லி, புளிமா, தேக்கு முதலிய மரங்கள், கொடி செடி இவைகளில் சில சிவந்த துளிர்கள் விட்டும், சில துளிர்த்துப் பூத்தும், சில பூத்துச் சிறு பிஞ்சுகள் விட்டும் ஜொலித்துக்கொண்டிருந்தன. மேற்றிசை யெங்கும் செவ்வானம் பரந்திருந்தது. அப்பொழுது சூரியன் பிர்மாண்டமான அண்டகோள வட்டம்போல் சக்கர வடிவமாய்ச் சிவந்து காணப்பட்டான். பொன்னிறம் போன்ற இள

வெயில் எங்கும் வீசியது. அந்த வெயிலினால் மரங்களி னிளந் தளிர்களும் ஜலமிருக்கும் பாகங்கள் தவிர மணற்பாங்கான இடங்களும் பொன்மூலாம் பூசியதுபோலத் துலங்கின. மந்திகள் மரங்களெங்கும் ஊசலாடிக்கொண்டிருந்தன. இது ஜீவர்கள் இறப்பதும் பிறப்பது மிப்படித்தான் என்பதை விளக்கியது. சில குரங்குகள் தத்தம் குட்டிகளை அடிவயிற்றில் கட்டிக்கொண்டு கிளைக்குக்கிளை தாவித் தாவி விளையாடிக்கொண்டிருந்தன. இப்படிக் குட்டிகளோடு தாவிச் செல்வதானது மக்களுக்கும் தாய்க்கு மிருக்கும் அன்பை நன்கு விளக்கியது. சில குரங்குகள் ஒன்றுக்கொன்று பேனெடுத்துக்கொண்டு ஜோடியாய்க் கிளைகளிலுட்கார்ந்திருந்தன. இத்தோற்றம் ஆண்பெண்களின் நேசப் பான்மையை விளக்கிக்கொண்டிருந்தது. சில குரங்குகள் இருந்தவிடம் விட்டசையாமற் கண்களை மூடிக்கொண்டு வாயில் தாம் அடக்கிவைத்திருக்கும் உணவை மென்று கொண்டிருந்தன. இத்தோற்றம் "சீ! இவ்வுலகம் அநித்யம்" என்று வெறுத்து நித்யமாகிய மோக்ஷமடையக் கருணாகர மூர்த்தியைக் குறித்துத் தவம்புரியும் மகரிஷிகளின் தவக்கோலம்போல விளங்கியது. குயில், செம்போத்து, கிளி, மாடப்புறா, காட்டுப்புறா, காகம் மரங்கொத்தி, கொண்டைக்கொத்தி, தூக்கணம், மணிச்சிட்டு, சிட்டு, தகைவிலான் முதலிய பலவகைப்பறவைகள் கலகலவென்ற சப்தத்தோடு கூவிக்கொண்டிருந்தன. இது உலகத்திலே மாந்தர்கள் இந்தநேர மென்பதில்லாமல், நேற்றிருந்தவன் இன்றில்லையென்னும்படி இறப்பதைப் பிரத்தியக்ஷத்திலே கண்டும் தம்முடைய கதியும் இவ்வாறுதா னென்பதை யுணராமல் இறுமாந்து திரியும் மூடமதியினரை நோக்கிப் பரிகசித்துச் சிரிப்பதுபோலிருந்தது. குயில்கள் அக்கூ! அக்கூ! என்று கூவிக்கொண்டிருந்தன. இது பாவஞ் செய்பவர்களுக்குத் தண்டனை யுண்டு உண்டு என்று எச்சரிப்பதுபோ லிருந்தது. நதியானது பல பிரிவாகப் பிரிந்து கருமணல் செம்மணல் கீழும் மேலுமாகப் புரளத் தெளிந்து ஓடியது. இது உலக வாழ்விலே கஷ்டத்திலும் சுகத்திலும் புரண்டு பாடுபட்டவர்க்கன்றித் தெளிவேற்படாதென்பதை விளக்கியது. அதில் மீன்குட்டிகள் துள்ளித் துள்ளி விளையாடின. இது எவர்களெவ்விடத்தி லிருக்கவேண்டுமோ அவ்விடத்தி லிருந்தாற்றான், சுகிர்தமும் ஸந்தோஷமு முண்டு என்பதைக் காட்டியது. வலைஞர்கள் ஆழமான சில இடங்களில்

வலைவீசி மீன் பிடித்துக்கொண்டிருந்தார்கள். அது ஊனைத்தின் றானைப் பெருக்கு மிவர்கட்கு யமனுடைய தண்டனை யாதாமோ வென நினைக்கவேண்டியதா யிருந்தது. ஜனங்கள் ஊற்றிறைத்து வஸ்திரம் துவைத்துக்கொண்டும் ஜலமெடுத்துக்கொண்டு மிருந் தார்கள். இது, எப்போதும் சக்கையைவிட்டு ஸாரத்தைக் கிரகிப் பதுதான் மதியாகுமென்பதைப் போதித்தது. பிராமணர்கள் ஸந்த்யாவந்தனுதி ஜெபங்கள் செய்துகொண்டிருந்தார்கள். இது ஒவ்வொருவரும் அவரவர்க்குரிய ஒழுக்கத்திலே நிற்கவேண்டு மென்பதைக் காட்டிற்று. பிள்ளைகள் கூட்டங்கூட்டமாக மணற் பாங்கான இடங்களில் கூடி விளையாடிக்கொண்டும் ஸந்தோஷ மாகப் பேசிக்கொண்டும், உலாவிக்கொண்டு மிருந்தனர். இது உலக வாழ்வி லுழைப்பவர்கள் அடிக்கடி யிப்படிப்பட்ட உற்சா கத்தைப் பெறுத லவசிய மென்பதைக் குறிப்பிட்டது. கருடன், வல்லூறு, கழுகு, மீன்கொத்தி முதலிய பறவையினம் ஆகாயத் தில் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. இது வஞ்சகர்களின் மன மிப்படித்தா னிருக்குமென்பதை யுணர்த்திற்று.

இவ்வாறாகக் கண்ணிற்கும் மனத்திற்கும் இனிமையாகக் காணப்பட்ட தோற்றங்களைக் கண்டு வியந்து உல்லாசமாகக் கணக்கப்பிள்ளையும் இன்ஸ்பெக்டரும் மணி ஆறரைவரைக்கும் பேசிக் கொண்டிருந்து பின் வீட்டிற்குப்போக எழுந்தார்கள். உடனே ஜடாவல்லவரு மெழுந்து கரையை நோக்கிச் சென் ருர். இன்ஸ்பெக்டர் புறப்பட வெழுந்திருக்கையில் தமக்கரு கில் கற்கட்டுச் சந்தில் நிற்கவைத்திருந்த தமது வழவழப்பான ஊன்றுகோலைக் கையிற்பிடித்தூன்றி யெழுந்தார். அதில் அந்த வேளையில் சிறு விரல் பருமனுள்ள ஒரு சிறிய ஸர்ப்பம் தன் உடலைச் சுற்றிக்கொண்டு, தன் தலையைக் கைப்பிடியில் வைத்துப் படுத்திருந்தது. அதை இன்ஸ்பெக்டர் அறியாராத லால், தம் ஊன்று கோலோடு அதையுஞ் சேர்த்துப் பிடித்து விட்டார். ஸர்ப்பம் தன் கழுத்துப் பிடிபட்டவுடனே கடிக்க வகையின்றித் தன் உடலைக் கோலைவிட்டு நீக்கிக்கொண்டு அவர் கையிற் சுற்றிக்கொண்டது. உடனே இன்ஸ்பெக்டர் தம் கை யைக் கொடிபோல் சுற்றிக்கொண்ட தென்னவெனத் திரும்பிப் பார்த்தார்; கையில் ஸர்ப்பம் சுற்றிக்கொண் டிருக்கக்கண்டு, பயந்து, கிடுகிடுத்து நடுநடுங்கிக் கழுத்தை விட்டுவிட்டால் கடித்து விடுமே யென்று நினைத்து ஒன்றுந் தோன்றுதவராய்த் தேகம்

வேர்த்துப் பிரமித்து "தில்லைநாயகம்! தில்லைநாயகம்" என்று கணக்கப்பிள்ளையைக் கூப்பிட்டுக்கொண்டு இருந்த இடம் விட்டு அசையாமல் நின்றார். பாம்பென்றால் படையுங் கலங்கும் என்பதுபோல் கணக்கப்பிள்ளையும் பயந்து "ஐயா கையை விட்டுவிட வேண்டாம்!!" என்று கத்திக்கொண்டே தூர நின்றார். இச் சப்தம் முன்னே சென்ற ஜடாவல்லவர் செவியிலே பட்டதும், திரும்பிப் பார்த்து, சிறிய ஸர்ப்பம் இன்ஸ்பெக்டர் கையிற் சுற்றிக்கொண்டிருப்பது கண்டு உடனே தமது தகப்பனார் தமக்குபதேசஞ் செய்திருந்த ஸர்ப்பக்கட்டு மந்திரத்தைப் பிரயோகித்து இன்ஸ்பெக்டரிடம் வந்து "அஞ்சவேண்டாம்; கையை விடும்" என்றார். இப்பொழுது இன்ஸ்பெக்டர் தம்வசமற்றுப் போயிருந்தார். பிடித்த பிடியும் மரத்துப்போ யிருந்தது. இது கண்ட ஜடாவல்லவர் இன்ஸ்பெக்டர் கையைத் தாமே கோலினின்றும் விலக்கினார். விலக்கியதும் ஸர்ப்பம் பல் பிடுங்கப்பட்டது போலாய்க் கோலைவிட்டு நழுவிக் கற்கட்டுச்சந்தில் சரேலென்று புகுந்துவிட்டது. பிறகு கணக்கப்பிள்ளையும் ஓடிவந்து ஜடாவல்லவரின் சாமர்த்தியத்திற்கு மெச்சி இன்ஸ்பெக்டரைத் தேற்றிப் பயந்தெளிவித்தார். பயந்தெளிந்து அவர் நினைவு அவருக்குண்டானதும் இருவருமாக அவரைக் கரைக்குக்கொண்டு வந்து சேர்ந்தார்கள்.

ஜடாவல்லவராற்றான் தம்முயிர் தப்பியதெனக் கண்ட இன்ஸ்பெக்டர் அவருடைய வன்மைக்கு மெச்சி மனமுவந்து கைகுவித்துக் கும்பிட்டு "ஐயா! நீர் செய்த உபகாரம் பெரிது; மறக்கத்தக்கதன்று. நான் தங்களுக்குச் செய்யத்தக்க பிரதியுபகாரம் இன்னதென்று தெரியவில்லை" என்று பேசிக்கொண்டே சாவடிக்கு வந்து, வேறு வேலை செய்யாமல் தம் கைப்பெட்டியைத்திறந்து ஜடாவல்லவர் பகலில் கொடுத்த வாக்குமூலத்தைக் கிழித்தெறிந்து அவரை அன்போடு பார்த்து "ஐயா! இதுவல்ல நான் தங்களுக்குச் செய்யத்தக்க உதவி; என்னுயிருள்ள வரையில் தங்களுக்கு அடிமையாய் உழைக்கக் காத்திருக்கின்றேன்" என்று சொன்னார். அப்பொழுது எட்டுமணி யிருக்கலாம்; உடனே ஜடாவல்லவரும் கணக்கப்பிள்ளையும் இன்ஸ்பெக்டரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு தம்தம் வீட்டுக்குச் சென்றனர்.

# அத்தியாயம்—14.

"நன்றி யொருவருக்குச் செய்தக்கா லந்நன்றி
யென்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால்"

பண்டிதனே யெனினும், அவன் மனத்தை, அநுபவிக்கும் விஷயங்களும் புலன்களும் கவர்ந்துவிடும் என்பது பெரியோர் கூறும் நீதியாம். ஆகையால் தர்மத்தை அநுஷ்டிக்க முற்பட்டு நிற்பவர்களுக்கு விஷயங்களும் புலன்களும் பகையாகின்றன. பரி பக்குவ புத்தியுடையவர்கள் அப் பகைகளுக்கு ஈடுபடாமல் ஜிதேந்த்ரியர்களாய்த் தமது தருமத்தை வீட்டிலேயே யிருந்து அநுஷ்டித்து வருகின்றனர். மனவன்மை யில்லாதவர்கள் வனஞ்சென்று கந்த மூலாதிகளை யுட்கொண்டு தவமியற்றுகின்றனர். இப்படிப்பட்டவர்கள் பகைவர்களை நேரில் நின்று எதிர்த்து ஜயம்பெற வன்மையில்லாதவர்களுக்கு நேராவார்கள். வீட்டிலிருந்து தமக்கேற்பட்ட ஒழுக்கந் தவறாது தருமமியற்றுகிறவர்கள், பகைவர்களை நேருக்கு நேராக எதிர்த்துப் போராடி ஜயம்பெறும்வன்மை பெற்றவர்களுக்கு நேராவார்கள். ஆகையால் காட்டுக் கேகிக் கடுந்தவம் புரிவாரினும் வீட்டிலிருந்து தரும மியற்றும் தீரர்களே மேலானவர்களென்று புகழப்படுவர். ஜடாவல்லவர் தம் வீட்டின்கண் தாமரையிலை நீர்போற் பட்டும் படாமலு மிருந்து தமது தரும வழியில் நிற்பவராகையினால் இவரை எல்லோரும் புகழ்ந்து பேசுவாராயினர். கணவனெவ்வழி அவ்வழி நிற்பதே கற்புடையார் கடனாகலின் திரிபுர சுந்தரியும் அவர் வழியையே அவருடைய நிழல்போல் அநுஸரித்து வந்தாள்.

இவ்வாறிருக்கும் இந்த அநுகூல தம்பதிக்கு இவர்களுடைய நல்வினைப்பயனே தன்னை ஈன்றவர்கட்கு இணையற்ற பரமானந்த மூட்ட அவதரித்ததென்று புகழுமாறு ஒரு பெண்மகவு பிறந்தது. அக்குழந்தை சகல லக்ஷணங்களோடு கூடியதாய் ஸ்வர்ணவிக்ரகம்போல விளங்கிற்று.

ஜடாவல்லவர் குழந்தைக்கு மங்களவல்லி யென்று திவ்ய திருநாமமிட்டு அருமையாக வளர்த்துவந்தார். மங்களவல்லி சகல மங்களங்களும் தன்னுடன் வளர வளர்ந்து வந்து, ஐந்தாம்

பிராயத்தை யடைந்து மங்காத மாணிக்க தீபம்போல விளங்கி னாள். சகல ஜீவன்களும் ஸந்தோஷமாய் இருக்கட்டும்! சகல ஜீவன்களும் சாந்தியடையட்டும்! ஸர்வாத்மாக்களும் ஆநந்த மடையட்டும்!—என்று அடிக்கடி நினைத்துப் பகவானை வழிபடும் உத்தமர்களுக்குப் பிறந்த குழந்தையல்லவா இது? இப்பொழுது ஜடாவல்லவர் மங்களவல்லிக்கு வித்யாரம்பம் செய்வித்துப் பள்ளிக்கூடத்திற்கனுப்பாமல் அவள் விளையாடும் நேரம்போக மற்ற நேரங்களில் தாமே கல்வி போதித்துவந்தார்.

* * * *

இவ்வாறிருக்கையில் ஒருநாள் தாசில்தாரிடமிருந்து தாம் தொட்டியத்திற்குவர உத்தேசித் திருப்பதாகவும், அன்று அங்கு வந்து பதினொரு மணிக்கு ஆஜராக வேண்டுமென்றும், அவர் அங்கு வரும் தேதி குறிப்பிடப்பட்ட ஒரு தாக்கீதைஒரு சேவகன் ஜடாவல்லவரிடம் கொடுத்தான்.

இதைப் பார்த்ததும் ஜடாவல்லவர் "திரிபுரசுந்தரி, அசந் தர்ப்பமாகவல்லவா இருக்கிறது! நாளன்று சிராத்தம் வருகிறது. அன்றுதான் தாசில்தாரும் தொட்டியம் வருகின்றார். கேட்டை மூட்டை செவ்வாய்க்கிழமை எல்லாம் ஒன்றாய்ச் சேர்கின்றன—ஐயோ! அன்று பதினொரு மணிக்குவந்து ஆஜராக வேண்டுமென்று உத்தரவு வந்திருக்கின்றதே! ஐயா இன்றைக்கு என் வீட்டில் சிராத்தம், நேரஞ்சென்று வந்தேன் என்று சொன்னால் கேட்கப்பட்டவரல்லவே! மகமதியரானதினால் சிராத்தத்தை நாளைக்கேன் செய்துகொள்ளக்கூடாதென்று கேட்கவுங் கூடுமே! இந்த அவதிக்கென்ன செய்வது? இதனாலேதான் ஒருவனிடம் சேவக வேலை செய்வதைப்போல் இழிவான தொழில் உலகத்தில் வேறில்லையென்று சொல்லுகிறார்கள். நமது தலைவிதி இப்படி அநுபவிக்கவேண்டியதா யிருக்கிறது" என்று சொல்லிக் கவலையோடு கூடத் தம் வேலையைச் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது சவடால் ராமுவையன் என்பவன் வந்து, "சந்திரசேகரா! எங்கள் அண்ணா உன்னைக் கையோடு கூட்டிக்கொண்டு வரச்சொன்னார். எழுந்திரு! உன் ராயஸத்தை அப்பால் வைத்துக்கொள்!" என்றான். ஜடாவல்லவர் வேலையைக் கவனித்துக் கொண்டே "தாடி பற்றி எரிகிற சமயத்தில் புகைச்சுருட்டுக்கு நெருப்புக் கேட்பதுபோல், இச்சமயத்தில் வந்து வீணில், இழவு கொடுக்காதே"—என்று அவனிடம் சொல்லிக்கொண்டே கணக்

கிலும் ஞாபகப் பிசகாய் இச்சமயத்தில் வந்து வீணில் இழவு கோடுக்காதே என்று எழுதிவிட்டு, அதைக் கவனியாமலே இன்னும் மேலே எழுதிக்கொண்டு போய்விட்டார். ராமுவையன் வேறு பேசாமல் திரும்பிவிட்டான். பின் ஜடாவல்லவர் கொஞ்ச நேரம் வேலை பார்த்துவிட்டு "கறப்பது உழக்குப் பாலானாலும் உதைப்பது பல்லுப்போக—என்பதுபோல் சம்பளம் மூன்றரை ரூபாவானாலும் ஒரு வேளையில் படும் பாடும், தாசில்தாரிடம் வாங்குகிற பாட்டும் இந்த ஜன்மத்திற்குப் போதும்; உத்தியோகஞ் செய்பவன் பிறனுக்கு அடிமைப்பட்டவன்" என்று கருதி உத்யோகத்தை வெறுத்தார்.

மறுநாள் அவர் ஏதோ சில அவசர வேலைகளிலும், சிராத்தத்துக்காக வேண்டிய காரியங்களிலும் கவனம் செலுத்திக்கொண்டிருந்தார்; சிராத்தத்தன்றும் தாம் தொட்டியம் போகவேண்டுமென்கிற எண்ணத்தினால், மிகவும் அவசரமாய்ச் சிராத்தம் நடத்தி முடித்தார். என்ன அவசரமாகச் செய்தும் சிராத்த முடிவாகப் பன்னிரண்டுமணியாய்விட்டது. பின்பு போஜனஞ் செய்த சிரமத்தையும் பாராமல் ஒரு வண்டியிற் பிரயாணப்பட்டு இரண்டு மணிக்குத் தொட்டியம் போய், தாசில்தார் அவ்வூர் ஸர்க்கார்ச் சாவடியில் இறங்கி யிருப்பதாகக் கேள்விப்பட்டு, அங்கேபோய்ச் சேர்ந்தார்.

அப்பொழுது தாசில்தார், புறம்போக்கு நிலத்திலிருந்த மரத்தை வெட்டிய ஒருவனிடமிருந்து பரிதானம் வாங்கிக்கொண்டு குற்றத்தை மறைத்த அவ்வூர்க் கணக்கன் பத்திராஜலமையனைக் குறுக்கு விசாரணை செய்துகொண்டிருந்தார். அதைக் கண்டதும் ஜடாவல்லவர் "ஐயோ! யமனை விழுங்கி ஏப்பமிடும் சாமர்த்திய சாலியாகிய பத்திராஜலமையனே இந்தப் பாடுபடுகிறானே? நாமென்ன செய்யப்போகிறோம்" என்றஞ்சி அங்கு நின்றுகொண்டிருந்த ஏனைய அதிகாரிகளைப்பார்த்து "என்னைத் தாசில்தார் கூப்பிட்டாரோ?" என்று மெதுவாய்க் கேட்டார். அவர்கள் "ஓய் ஜடாவல்லவரே! நீர் இப்பொழுதுதான் வருகிறீரோ? இன்று வந்ததும் முதலில் உம்மைத்தான் கூப்பிட்டார்" என்று சொல்ல, ஜடாவல்லவர், "ஓகோ! ஆபத்தாக வல்லவா வந்து முடிந்தது! இதற்கென்ன செய்கிறது!" என்று நினைத்து ஒன்றுந் தோன்றாதவராய்க் கூட்டத்தோடு கூட்டமாய் நின்றுகொண்டு, பத்திராஜலமையன் படும் பாட்டையும், அவன்

மெய்ந்நடுக்கங்கொண்டு பதிற்சொல்வதையுங்கண்டு திகைத்திருந் தார். பின்பு பத்திராஜலமையன் வழக்கு விசாரணையாக மாலை நான்கு மணியாயிற்று. உடனே டலாயத்து "பிள்ளையார் புத் தூர்! பிள்ளையார் புத்தூர்!!" என்று கூப்பிட்டான். அச்சத்தம் கேட்டதும் ஜடாவல்லவர் இடிமுழக்கங் கேட்ட ஸர்ப்பம்போல், நடுநடுங்கிப் பயந்து ஜனக்கூட்டத்தை இரண்டு கைகளாலும் விலக்கிக்கொண்டு வெகு துரிதமாய்ப்போனார். அங்ஙனம் அவர் சென்றது பரமபக்தன் ஒருவன், ஜனக்கூட்டத்தோடிருக்கும் தேவ ஸந்நிதியில் ஜனங்களை விலக்கிக்கொண்டு தரிசனத்திற்குச் செல்வதுபோலிருந்தது. இங்கே இந்தக் காட்சி சேவகத் தொழி லின் இழிவைப் புலப்படுத்தியது. அவ்வாறு சென்ற ஜடாவல் லவர் தமது கணக்கு மூட்டையைக் கமுக்கட்டில் வைத்துக் கொண்டபடி அருகேபோய் இரண்டு கையாலும் தாசில்தாருக்கு ஸலாம் செய்தார். அப்பொழுது தாசில்தார் தலையைச் சிறிது அசைத்துவிட்டு, "ஐயரவர்களுக்குக் காலமே வர ஒழியவில்லை யோ? இப்போது தான் விலாப்புடைக்கச் சாப்பிட்டுவிட்டு வரு கிறீர்போலும்! எங்கே உமது மூட்டையை யவிழ்த்துக் கணக்கைக் கொண்டாரும் பார்ப்போம்; உங்களோடு மாரடிக்க என்னால் முடியவில்லை!" என்று பல்லைக் கடித்துக்கொண்டே கட்டளை யிட்டார்.

ஜடாவல்லவர் :—வீட்டில் சிராத்தம், அதனாலேதான் தாமஸ மாயிற்று — என்று சொல்லிக்கொண்டே கமுக்கட்டிலிருந்த கணக்குகளை எடுத்து அவரிடம் வைத்தார்.

தாசில் :—(சிராத்தம் என்கிற வார்த்தையைக் கேட்டு) என்ன—என்றுரப்பினார்.

ஜடாவல்லவர் :—(மெதுவாய்) இல்லை, தகப்பனாருக்கு இன் றையதினம் திதி.

தாசில் :—என்ன ஓய்! உங்கள் திதியை இன்றைக்குத்தான் வைத்துக்கொள்ளவேண்டுமோ? வேறு நாளகப்படவில்லையா? பார்ப்பானுக்கு எப்போது பார்த்தாலும் திதி விதி யென்று சொல்லிக்கொண்டு தின்பதும் வீண்காலம் போக்குவதுந்தான் வேலை!—என்று சொல்லிக்கொண்டே (கணக்கைப் பிரித்துக் கொண்டு) "பாக்கியில்லாமல் வசூல் செய்திருக்கிறீரா?" என்று கேட்டார்.

ஜடாவல்லவர் :—இரண்டு ஒன்று ஏழைகளுடையது தவிர மற்றவைகளெல்லாம் வசூலாயிருக்கின்றன.

தாசில் :—என்ன ஓய் ! இவ்வளவு நாளாயும் இரண்டு மூன்று ஒன்று என்று விரல் விடுகிறீர் ?—என்று கணக்கை மேலே தள்ளிப்பார்த்தார். அதில் ஜடாவல்லவர் சொன்னபடி அநேகமாய் வசூலாயிருக்கக்கண்டு திருப்தியடைந்து, "ஓய் ! பாக்கியையும் சீக்கிரம் வசூல் செய்து அனுப்பும்" என்று சொல்லிக்கொண்டே இரண்டு மூன்று பக்கம் தள்ளிப்பார்த்தார். அந்தப் பக்கத்தில் ஜடாவல்லவர் சவடால் ராமுவையனோடு பேசிக்கொண்டிருந்த தினத்தன்று இந்தச் சமயத்தில் வந்து இழவு கொடுக்காதே என்று பராக்கில் எழுதிவிட்ட வாக்கியத்தைப் பார்த்துவிட்டார். தாசில்தார் தமிழறிந்தவர். அவர் அதைக் கண்டவுடன் கக்கட கக்கடவென்று இரண்டு நிமிஷஞ் சிரித்துப் பின்பு அந்தப் பக்கத்தைப் பிரித்து, அங்கிருந்தவர்களிடத்தில் இதைப் பாருங்களென்று காட்டிப் "பார்த்தீர்களா" என்று சொல்லி முகத்தில் கோபாக்கினி ஜ்வலிக்க நாற்புறமும் பார்த்துப் பின் சிரமசைத்து, "தெரிந்துகொண்டேன். நான் இன்று இவ்வூருக்கு வந்தது இவருடைய திதி தினமாகையால் அதற்கு அசந்தர்ப்பம் நேரிட்டதாக நினைத்து, அதை எனக்கறிவிக்க இந்தப் பார்ப்பானிப்படி எழுதி வைத்திருக்கிறான் ; இருக்கட்டும் ; இதுவும் ஒரு வேலைத்தனமோ ! தெரியுமே பிள்ளையார் புத்தூர் ஜனங்களுடைய யோக்யதை ! கழுத்தில் தாவடமும் அகத்தில் கரவடமுமாக விருப்பது" என்று சொல்லிக் கொண்டு கைப்பெட்டியைத் திறந்து அரைக் கடுதாசும் காதோரத்திலிருந்து பேனாவும் எடுத்தார்.

ஜடவல்லவர் :—(இதென்ன விபரீதம் ! என்று நினைத்து) எஜமானே, நானொன்றும் அப்படி எழுதவில்லையே ?

தாசில் :—(கணக்கு புத்தகத்தைச் சுழற்றி எறிந்து) கண்ணெடுத்துப்பார் ; நீ ஒரு பிராமணனா ? என்ன மதி இது ?

ஜடாவல்லவர் கீழே குனிந்து கணக்குப்புத்தகத்தை யெடுத்துப் பார்த்தார் ; அதில் மேற்கண்ட வாக்கியம் தமது கையினால் எழுதப்பட்டிருப்பதைக் கண்டார் ; எப்படி எழுதப்பட்டதென்று திகைத்தார் ; என்ன விபரீதம் என்று திடுக்கிட்டார் ; தம்மையறியாமல் சம்பவித்திருப்பதைக் குறித்து மனந் தளர்ந்து ஒன்றுந் தோன்றாமல் பிரமித்து மரம்போல் நின்றார்.

தாசில்தார், அவ்வாக்கியம் தம்மை அவமானப்படுத்தவெழு தியதென ஜடாவல்லவர்பேரில் குற்றஞ்சுமத்தி எடுத்த கடுதாசில் வேலையை விட்டு நீக்கியிருப்பதாக எழுதி அவர் முன் எறிந்து, "பார்ப்பான்! நீ மறு உத்தரவு வரும்வரையில் வேலை பார்க்கக் கூடாது; போ! என்னெதிரில் நில்லாதே" என்று சொன்னார். சொன்னதும், தன்னை உசுப்பும் குரல்கேட்ட தக்ஷணமே பாயப் போகும் வேட்டை நாய்போல் இரண்டு டலாய்த்துக்கள் வந்து "போம்" என்று ஜடாவல்லவரைத் தள்ளிக்கொண்டு போய் விட்டார்கள்.

ஜடாவல்லவர், மனவருத்தமுற்று—, "ஐயோ இப்படியும் ஒரு மனிதனெழுதுவானோ? இது நம்மையறியாமலல்லவோ எழுதப்பட்டிருக்கின்றது" என்று நினைத்துப் பார்த்தார். அப்பொழுது அவர்க்கு ராமுவையன் வந்து பேசிக்கொண்டிருந்ததும், அன்று தாம் அவனுக்கு விடையளித்ததும் ஞாபகத்திற்கு வந்தன. "ஓகோ! ஞாபகப் பிசகாகவல்லவா அந்தப் பாபியோடு பேசிக்கொண்டு இப்படி எழுதிவிட்டோம்; என்ன செய்கிறது! இது நமது கால வித்தியாசம்" என்று நினைத்து, அங்கேயே அரைமணி நேரம் ஸ்தம்பம்போல் ஒருவருடனும் பேசாமல் நின்றார். இச்சமயத்தில் தாசில்தாரும் கச்சேரியைக் கலைத்தார்.

ஜடாவல்லவரும், தமது விதிப்பயனை நினைத்துக்கொண்டு ஊர் போய்ச் சேர்ந்தார்.

அப்பால் இரண்டு நாளைக்கெல்லாம் ஜடாவல்லவர்க்கு வேலைபோனசங்கதி ஊரெங்கும் பரவிவிட்டது. சில வேளாளர் அந்த வேலைக்கு மனுப்போடவும் யோசித்துக் கொண்டிருந்தார்கள். இவ்விஷயம் ஜடாவல்லவர் அறிந்து, "இனி நாம் இந்த முனிஷீப் வேலையை நம்புவதிற்பயனில்லை; வேறு ஏதாவது வழி தேடிக்கொள்ள வேண்டும்" என்று நினைத்துத் தமது நேயர்களுடன் யோசித்தார். அவர்கள் இரவில் தினமும் ஐந்தாறு பிள்ளைகளுக்கு ஸம்ஸ்கிருத பாடமும், தமிழில் ராமாயண பாரதாதி நூல்களும் பாடஞ்சொல்லி வைக்கும்படிக்கும், அதற்குத் தக்க பிரயோஜனம் தாங்கள் நடத்துவதாயும் சொன்னார்கள். அவ்வாறு செய்ய ஜடாவல்லவரும் ஒப்புக்கொண்டு ஒரு நல்ல நாள் பார்த்துத் தம் வீட்டுத் திண்ணையிலேயே முதலில் வந்து சேர்ந்த இரண்டு பிள்ளைகளை வைத்துக்கொண்டு பாடஞ் சொல்லிவைக்க ஆரம்பித்தார். இவ்வேற்பாடான ஒரு வாரத்திற்கெல்லாம் ஜடா

வல்லவருக்குத் துறையூரிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில்—

துறையூர்.

ஐயர் அவர்களுக்கு அநேக கோடி நமஸ்காரம். இவ்விடம் சுகம். தங்களுடைய சுகத்தைப்பற்றி அடிக்கடி யெழுத உத்தரவாக வேண்டும்.

நான் நேற்று முதல் நாள் முசிரிக்குப் போயிருந்தேன்; அவ்விடத்தில் உங்களூர் நாராயணசாமி ஐயரைக் கண்டேன்; அவரைக் கண்டதும் தங்களுடைய சுகம் விசாரித்தேன். அவர் தங்களுக்கு வேலை போய்விட்டதெனச் சொல்லக்கேட்டு மிகவும் வருத்தமுற்று, உடனே தாசில்தாரிடம் போய் அவரைக்கண்டு தங்களுடைய யோக்கியதையையும் குணங்களையும் சொல்லி வேலை தந்தாகவேண்டுமென்று மன்றாடினேன். உடனே அவர் வேலைக்குத்தர வெழுதித் தங்களுக்கனுப்பும்படி சொல்லி தம்முடைய குமாஸ்தாவிடம் கொடுத்துவிட்டார். அது தங்களுக்கு வந்திருக்க வேண்டுமென் றெண்ணுகிறேன். இனி இந்தத் தாசில்தார் உள்ள வரையில் தங்களுக்கு யாதொரு குறைவும் நேரிடாது. நான் அடுத்தவாரம் தங்களைப் பார்க்கின்றேன். மற்றது நேரில்.

தங்களன்புள்ள

**சத்தியநாதன்,**

ரெவினியூ இன்ஸ்பெக்டர்.

இதைப் பார்த்ததும் ஜடாவல்லவர் பெரு மகிழ்ச்சி கொண்டு "ஓஹோ! இவர் நமது ரெவினியூ இன்ஸ்பெக்டரல்லவா! நாம் அவர்க்குச் செய்த ஓர் அற்ப உபகாரத்தை மறவாதிருந்து இந்த நல்ல சமயத்தில் திரும்பவுமதை நமக்கு உதவினர். இது ஈசனநுக்ரகமேயாம்" என்றெண்ணி மகிழ்ந்தார். இக்கடிதம் வந்த அடுத்தநாளே தாசில்தாரிடமிருந்து வேலைக்கு உத்தரவும் வந்துவிட்டது. ஜடாவல்லவர் அதுகண்டு மகிழ்ந்து வேலையை ஒப்புக்கொண்டார். பிரதி தினம் தாம் இரவில் மாணவர்களுக்குப் பாடஞ் சொல்வதையும் கவனித்துவந்தார். பாடஞ்சொல்லும்போது மங்களவல்லியையும் தமது பக்கத்தில் வைத்துக்கொண்டு, விஷயங்கள் எளிதில் விளங்க அமுதம்போன்ற இனிய வசனங்களால் வேடிக்கை விநோதக் கதைகளோடு போதித்து

வந்தார். மங்களவல்லி இவ்வாறு கல்வி பயின்றதோடு வீட்டு வேலையிலும் நல்ல பழக்கம்பெற்றாள். இப்பொழுது மங்களவல்லிக்கு எட்டாவது வயது பூர்த்தியாகுங் காலமா யிருந்தது. அதுவே பிர்ம விவாகத்திற்குச் சரியான காலமாதலால், ஜடாவல்லவர் மங்களவல்லிக்கு விவாகஞ் செய்யப் பிரயத்தினப்பட்டுக் கொண்டிருந்தார்.



## அத்தியாயம்—15

"கொண்டு விண்படர் கருடன்வாய்க் கொடுவரி நாகம்
விண்ட நாகத்தின் வாயினில் வெருண்டவன் றேரை
மண்டு தேரையின் வாய்தனி லகப்படு தும்பி
வண்டு தேனுக ரின்பமே மானிட ரின்பம்"

**காலனுக்குக் கண்ணுண்டா?** அவன் நல்லார், பொல்லார், இல்லார், எளியார், பெரியார், சிறியார், பெண்டிர் என்று பார்ப்பதுண்டா? ஆயுட்கால முடிவில் அவன் தவறாமல் வந்து தன் காரியத்தை நிறைவேற்றுகிறான். அவனைத் தடுப்பவருண்டோ? அவனைப் போற்றினும் போவனோ? பொருள் கொடுப்பினும் போவனோ? போகான்—இவை யிருக்கட்டும்; அவன் வரும் நாள் நமக்குத் தெரிகிறதோ? இப்பொழுதோ, பின்னையோ சற்று நேரத்திலோ, இரவிலோ, துயிலிலோ, துயில் தெளிவு தன்னிலோ பின் எப்பொழுதோ யாரறிவார் அதை! கால முடிவு ஏற்பட்டாலன்றி அது சம்பவியாதென்பது திண்ணம். அப்படிப்பட்ட காலமுடிவு ஸ்ரீமதியின் புருஷனுக்கும் நேர்ந்தது. இதைக் கேட்ட ஜடாவல்லவர் நெஞ்சம் காலனைக்கண்ட மார்க்கண்டனுடைய நெஞ்சம்போலப் பதறியது! பதறியவளவில், அந்தச் சிறு பாலகனைப்போல ஆ! ஜகதீசா வென்று கூறி மனத்திலெழுந்த துக்கமாகிய தீயின் புகை வெளிப்பட்டதுபோலப் பெருமூச் செறிந்து தம் கண்களிலிருந்து நீர்த்துளிகள் சிந்த நின்றவிடத்திலேயே மரம்போல் சற்று நின்றுவிட்டார்; அத்துக்கத்தை இன்னவிதத்தில் பரிகரித்துகொள்வதென்பதை யறியாமல் நெருப்பில் விழுந்த புழுவைப்போலத் துடித்தார்; எங்கேனும் ஓடிப்போய்விடட்டுமா? தீயில் விழுந் திறக்கட்டுமா? குளத்திலே குதிக்கட்டுமா? ஐயோ! உலகத்திற் பெண் ஜன்மமே மகா துக்ககரமானது.

அதிலும் இந்தக் கதிக்காளானல் அவள் மனம் என்னபாடு படும்; எப்படி உயிர் பிழைத்திருப்பாள்? அந்தோ! நான் எப்படி இச்சமயம் அவள் முகத்தில் விழிப்பேன் ; என்ன செய்வேன்'' என்று வருந்திப் பின் மனந்தேறி ஸ்ரீமதியை அழைத்து வந்துவிடுவதெனத் தீர்மானித்துக்கொண்டு தஞ்சாவூருக்குப்போனார்; தஞ்சாவூரில் ஸ்ரீமதியிருந்த துக்ககரமான நிலையைக் கண்டார். அப்பொழுது ஜடாவல்லவர் தமது ஆவி நீங்கியதுபோல் மனமழிந்து செயலற்றார். அப்பால் அவர் பெருந்துக்கத்தோடு அவளை நோக்கி, "அம்மா! ஸ்ரீமதி, நீ இனிமே லிங்கிருக்கவேண்டாம்; ஊருக்கு வந்துவிடு'' என்றழைத்தார்.

ஸ்ரீமதி :—"அண்ணா! நான் இனி எங்கே யிருந்தால் என்ன? என்னைப் பகவான் நான்குபேர் சிரிக்கும்படி வைத்துவிட்டான். அங்கே வருவதிலும் இவ்வூரிலேயே யிருந்து என் காலத்தைக் கழிப்பதே மேலாகும். நீங்கள் என்னிடத்தில் தங்கை யென்கிற பிரியம் வைத்திருந்தாற் போதும்'' என்று கூறிக் கண்ணீர்விட்டுக் கதறியழுது மறுத்துவிட்டாள்.

ஜடாவல்லவர் :-(வேறொன்றும்பேச வழியில்லாமல்) ஸ்ரீமதி! பிறகு உன் இஷ்டம்; நான் உன்னைக்கைவிட்டு விடுவேனென்பதைக் கனவிலும் நினையாதே—என்று தேறுதல் கூறிக் "குழந்தைகளைப் பார்த்துக்கொள் ; உன் இரண்டு குழந்தைகள்தான் உனக்கு ஆஸ்தி ; பெரிய பையன் வேண்டுமானல் இங்கிருந்து வாசிக்கட்டும் ; சின்னவனை என்னோடனுப்பு ; நான் எனக்குத் தெரிந்த ஸம்ஸ்கிருதம், தமிழ் முதலிய பாஷைகளில் தேர்ச்சியடையச் செய்கிறேன்.

ஸ்ரீமதி .—அண்ணா! இந்தக் காலத்தில் தமிழையும் ஸம்ஸ்கிருதத்தையும் யார் படிக்கிறார்கள் ; படித்தால் பிழைப்பேது? இங்கிலீஷ் படித்தாலாவது ஒரு தாலுகா குமாஸ்தா வேலைக்காகிலும் போகலாம். அதற்குத்தான் அவனை எப்படி உங்களோடு அனுப்புகிறதென்று யோசிக்கிறேன்.

ஜடாவல்லவர் :—"சரி! அப்படியே செய்; நான் போய் வருகிறேன்''—என்று கூறி விடைகொண்டு புறப்பட்டு ஊர்வந்து சேர்ந்தார்.

ஊருக்குவந்து மனவருத்தத்தால் மங்களவல்லி விவாகத்தைக் குறித்து ஒரு பிரயத்தினமுஞ் செய்யாமல் தமது வேலையை மாத்திரம் அவர் கவனித்து வந்தார்.

இக்காலத்தில் அநேக இடங்களிலிருந்து ஜாதகங்களும் வந்துகொண்டிருந்தன; அநேகர் மங்களவல்லியைப் பார்க்க வந்துவிட்டுப் போனார்கள். இவர்களுக்கெல்லாம் ஜடாவல்லவர் இவ்வருஷம் விவாகஞ்செய்ய உத்தேச மில்லையெனத் தெரிவித்துக்கொண்டிருந்தார்.

இப்படி ஒருவருஷங் கழிந்தது. பின் ஜடாவல்லவர் மங்கள வல்லிக்கு விவாகஞ்செய்யப் பிரயத்தினஞ் செய்து கொண்டிருப்பது ஸ்ரீமதிக்குத் தெரிந்தது. அவள் எவ்விதத்திலாவது தன் மூத்தபிள்ளை ஜகதீசனுக்கேனும் அல்லது தன் வயிற்றுப் பிள்ளையிலும் பதின்மடங் கதிகமாகத் தன்மீது அன்பு பாராட்டி வரும் தன் கொழுந்தன் கோபாலனுக்கேனும் மங்களவல்லியை மணம் பேசி முடிக்கவேண்டுமெனத் தீர்மானங்கொண்டு, தஞ்சாவூரை விட்டுப் புறப்பட்டுப் பிள்ளையார் புத்தூர் வந்து, தன் தமையன் சாவகாசமா யிருக்கும் சமயம் பார்த்துத் தன் எண்ணத்தை வெளியிட்டாள். இருவருக்கும் பெரிய சம்பாஷணை நடந்தது— ஜடாவல்லவர் தாம் தமது பெண்ணை நல்ல சாஸ்திர விற்பந்நனுக்குக் கொடுக்க எண்ணி யிருப்பதாகக் கூறினார். இங்கிலீஷ் படித்தவர்களுக்குக் கொடுத்தால் வரதக்ஷிணை முதலியவற்றிற்காகப் பணம் மிகுதியும் வேண்டியிருப்பதால் அச்சம்பந்தஞ் செய்யத் தம்மால் முடியாதென்று தம்முடைய சக்திக் குறைவையுந் தெரிவித்தார். ஸ்ரீமதி, அவரை அவருடைய எண்ணத்திலிருந்து மாற்றித் தன்னுடைய கொழுந்தன் கோபாலனுக்குக் கொடுக்க ஒப்புக்கொள்ளும்படி செய்தாள்; அவனுக்குக் கொடுக்கநேரிடும் வரதக்ஷிணையிலே பாதிப்பணம் தான் தருவதாகவும் ஒப்புக்கொண்டாள். ஸ்ரீமதியின் பிள்ளைக்கு ஜாதகம் பொருத்த மில்லாமற் போய்விட்டது. இதனால் ஸ்ரீமதியடைந்த துக்கத்திற்களவேயில்லை.

பின்பொருநாள் "ஸ்ரீமதி, அண்ணா, நான் குழந்தை மங்களவல்லியை என்னோடு அழைத்துக்கொண்டு போய்த் தஞ்சாவூரிலே வைத்திருந்து பிறகு அழைத்துக்கொண்டு வருகின்றேன்," என்றாள்.

ஜடாவல்லவர், "ஸ்ரீமதி! நாளை முதல், ஸ்ரீராமநவமி உற்சவாரம்பமானதால் அதற்காகப் பத்துநாளும் இராமாயணப் பிரசங்கம் நடத்தும்படி என்னை நேற்றுச் செல்லமையர் (ஒரு நண்பர்) விநயத்துடன் கேட்டுக்கொண்டார். பகவத் விஷயமான

தால் நானும் சம்மதித்திருக்கின்றேன். நீயும் இவ்விடம் இராமாயணம் படித்து முடியும்வரையிலிருந்து கேட்டுவிட்டுப் பின்பு போகலாம். உனக்கு ஜன்ம சாபல்யம் கிடைக்கும்'' என்றார். அதற்கு ஸ்ரீமதி "என்ன அண்ணா! நீர் சொல்வது வேடிக்கையாயிருக்கிறது! தலைக்கு மேலே காரியம் கிடக்கிறதே! ஊரில் இராமாயணம் வாசித்தால் தலையில்லா முண்டத்துக்கென்ன வேலை; நானும் மங்களவல்லியும் ஊருக்குப் போகின்றோம்'' என்றாள். ஜடாவல்லவர், "அப்படியானால், ஸ்ரீமதி! இந்தக்ஷணமே, நீ புறப்பட்டுப்போகலாம். உன்னைப்பற்றிக்கேட்பாரில்லை; மங்களவல்லி வரமாட்டாள்; அவளுக்கு இராமாயணப் பிரசங்கம் ஆரம்பிக்கப் போவது தெரிந்தால் யாரென்ன சொன்னபோதிலும் எங்கும் வரமாட்டாள்'' என்றார். தமையன் கோபமாய்ப் பேசுவதைக் கண்ட ஸ்ரீமதி தன்னுள்ளெழுந்த கோபத்தை யடக்கிக்கொண்டு, "அண்ணா! கல்யாண விஷயத்தைக் குறித்துத் தான் சீக்கிரம் போகவேண்டுமென்று சொன்னேன். எனக்கு இப்போது என்ன வந்துவிட்டது. தங்கள் பிரியம்போலவே யிருந்துவிட்டுப் போகிறேன்.''என்றாள். ஜடாவல்லவர் சமாதானமடைந்தார்.



## அத்தியாயம்—16.

"தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது."

உலகத்திலுள்ள சகல ஜீவராசிகளுடைய மனத்திற்கும் மனோகரமான இன்பத்தைக்கொடுக்கும் வசந்தகாலம் பிறந்து பாதிநாட்கள் கழிந்தன. இவ்வாறு நாட்கள் கழிந்ததைத் தங்கள் ஆயுள் நாளிலே சிலநாள் கழிந்ததாக நினைப்பவர் இரண்டொருவர் அவ்வூரிலிருந்தனர். ஏனையர் யாவரும் காலகதிப்படி சென்றுகொண்டிருக்கும் தங்கள் மனத்தையே குருவாகக் கொண்டு அதன்வழி நிற்பவரா யிருந்தனர்; ஆனால் பெரும்பான்மையர் தங்கள் முன்னோர் அனுஷ்டித்த வழக்கத்தை அனுஷ்டித்துவரத் தவறாமலிருந்தனர். இப்போது ஸ்ரீராமநவமி உற்சவம் கொண்டாடுவதும் அவ்வழக்கத்தாலேதான். நாம் மேற்கூறியபடி தங்கள் காலத்தை நல்வழியிலே செலவழிக்க எண்

ணிய சுப்பையர் என்பவர் இவ்வுற்சவத்தின் பொருட்டுப் பெருஞ் செலவு செய்ய முன்வந்தார். அதனால் தூங்கிக்கிடந் துழன்ற வர்களும் விழித்துக்கொண்டு அவ்வழியிலே உதவி, தாமும் பயன் பெறலாயினர். சுப்பையர் வீட்டு வீதியில் ஸ்ரீராமநவமியன்று சுமார் 1000 ஜனங்கள் தாராளமா யுட்காரத்தக்க ஓலைக்கொட் டகை அமைக்கப்பட்டிருந்தது. அக்கொட்டகை மல்லிகை, முல்லை முதலிய வாசனை மலர்களாலும், மாவிலைத் தோரணங்க ளாலும், சித்திரப்படங்களாலும் வெகு அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்தது; நாற்புறத்து வாயில்களிலும் வாழை, கமுகு, பேரீச்சங்குலைகள் கட்டப்பட்டு மனத்திற்கு ரமணீயமாய் விளங் கியது. அக்கொட்டகைக்குள் ஸ்திரீகளுக்குப் பிரத்தியேகமான இடமும் புருஷர்களுக்கு வேறு இடமும் தனித்தனியே அமைக் கப்பட்டிருந்தன. அவர் வீட்டு விசாலமான திண்ணையில் கிழக்கு முகமாக ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ந ஹநுமத் ஸமேதராய் ஸ்ரீராமபிரான் படம் வைத்துப் புஷ்பங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. இவ்வாறு விளங்கும் கொட்டகையில் ஆடவரும் ஸ்திரீகளுமாக அளவற்ற ஜனங்கள் அன்றிரவு பிரசங்கம் தொடங்க அரைமணிநேரத்திற்கு முன்பேவந்து கூடினர். அப் பொழுது ஜடாவல்லவர் வீட்டிலிருந்து ஸ்ரீமதியும், திரிபுரசுந்தரி யும் வந்து ஸ்திரீகளுக்கென்று ஏற்படுத்தியிருக்கும் இடத்திலுட் கார்ந்து கொண்டார்கள். அவ்வூர் பிரமுகர்களும் குறித்த நேரத்தில் வந்து சேர்ந்தார்கள். கையேடு படிக்கும் ராமு தீக்ஷிதரும் எல்லோர்க்கு முந்தியே வந்து காத்துக்கொண் டிருந்தார். இப்பொழுது ஜடாவல்லவரும் தாம் குறித்திருந்த நல்ல வேளைக்கு முன்பே வந்து சரியான காலத்தில் ஸ்ரீராம பிரானுக்குப் பூஜை நைவேத்யம் தீபாராதனை செய்து வணங்கிப் பிரசங்கஞ் செய்யலானார்—பிரசங்கம் எல்லோ ரும் புகழ்ந்து மகிழத்தக்கபடி யிருந்தது. அப்படிப் பிரசங்கம் ஆறுநாள் நடந்தது. ஏழாவது நாள் சுந்தரகாண்ட மாரம்பித் துப் பிரசங்கம் நடந்தது. இப்பொழுது ஜடாவல்லவர், ஸ்ரீராம பிரான் சேதுபந்தனம் செய்த விஷயத்தைப் பிரசங்கித்து வருகை யில் "ஸ்ரீராமபிரான் வாயு புத்திரனாகிய ஹநுமான் உதவியைக் கொண்டு ஸமுத்ரத்தில் மலைகளையும் மரங்களையும் நிரப்பிச் சேது பந்தனம் செய்து ஸீதாபிராட்டியை மீட்டு வந்தார்" எனப் பிரசங்கித்தார். இதனை நல்ல பயிற்சிபெறவேண்டுமென்னும்

நோக்கமுடைய மாணுக்கனொருவன் தன் ஆசிரியரிடத்திலே யிருந்து அவர் திருவாயிலிருந்து வரும் உபதேசங்களைக்கேட்பது போலப் பக்கத்திலே உட்கார்ந்து அமைதியாய்ச் செவியுற்றிருந்த மங்களவல்லி தன் தந்தை பேசி நிறுத்தியதும் “ அப்பா! எனக்கு இவ்விடத்திலொரு பெரிய சந்தேகமிருக்கின்றது. அதைத் தெரிவிக்கவேண்டும்” என்றாள். இந்த இனிய மதுரமான மொழி அன்றிரவு பிரசங்கங்கேட்க வந்திருந்த அளவற்ற ஜனங்களின் செவியிற் பட்டவுடன் “ஆ! இஃதென்ன புதுமையாயிருக் கிறது; வித்வரத்நாகரமாகிய இம்மகானுடைய பிரசங்கத்தில் இச்சிறு கன்னிகைக்கு என்ன சந்தேகம் நிகழ்ந்துள்ளது!” என்று ஆச்சரியமடைந்து அனைவரும் மங்களவல்லியின் செம் பவளம்போன்ற செவ்விதழோடு கூடிய திருவாய் மலரிலிருந்து உண்டாகும் மொழிக்குக் கண்கொட்டாமல் எதிர்பார்த்திருந் தார்கள். இப்பொழுது அந்தப் பிரசங்க மண்டபம் தேவேந்திர சபைபோல் விளங்கியது. ஜடாவல்லவர் மங்களவல்லியின் சந்திர பிம்பம்போன்ற முகத்தைப் பார்த்து, “என் கண்ணே! உனக்கு என்ன சந்தேகமுண்டாயிற்று'? தெரிவிப்பாய்” என்றார். மங்களவல்லி தன் தந்தையைப் பார்த்து “அப்பா! சுமார் இரண்டு மாதத்திற்கு முன் ஒருநாள் தாங்கள் கங்காதரனுக்குத் திருவிளையாடல் புராணத்தில் இந்திரன் பழிதீர்த்த படலம் பாடஞ் சொன்னீர்கள். அப்பொழுது விருத்திராசுரனென்னும் ராக்ஷஸன் ஸமுத்ரத்தில் விழுந்து ஒளிந்துகொண்டானென்றும், அவனைக்கொல்ல இந்திரன் பிரயாசப்பட்டு முடியாமல் கடைசி யாக அகஸ்தியரை யடைந்து அவரை வேண்டிக்கொண்டானென் றும், அம்முனிவர் இந்திரனுக்கு மனமிரங்கி, சப்த ஸமுத்ரத்தை யும் உள்ளங்கையில் வரவழைத்து ஆசமனம் செய்தனரென்றும், பின்பு இந்திரன் விருத்திராசுரனைக் கண்டுபிடித்துக் கொன்று னென்றும் பாடஞ்சொன்னது இன்னும் என் மனத்தைவிட்டு அகலவில்லையே! ஆனால் இன்றோ ஜகத்ரக்ஷகராகிய ஸ்ரீராம பிரான், ஹநுமானுதவியைக் கொண்டு மலைகளையும் மரங்களையும் நிரப்பி ஸமுத்ரத்தில் சேதுபந்தனம் செய்ததாகப் பிரசங்கஞ் செய்யக்கேட்டேன். இஃதென்ன விந்தை! அகஸ்தியர் ஒரு தவ முனிவரென்றும் ஸ்ரீராமரோ தேவர், முனிவர் நரர் முதலிய எல்லோருந் தொழும் மும்மூர்த்திகளி லொருவராகிய மஹா விஷ்ணுவென்றுந் தாங்களே சொல்ல நான் பன்முறையுங் கேட்

டிருக்கின்றேன். அப்படியிருக்க அகஸ்தியர் கட்டளைக்குப் பணிந்து நடந்த ஸமுத்ரம் ஜகத்ரக்ஷகராகிய ஸ்ரீராமனுக்குப் பணிந்து நடவாதா? ஏன் மலைகளையும் மரங்களையும் நிறைத்து அணைகட்டவேண்டும்? ஹநுமான் உதவி என்னத்திற்கு? இது தான் அடியேனுக்குண்டான ஸந்தேகம்'' என்றாள்.

இதைக்கேட்ட ஜனங்கள் கரைகடந்த உவகை கொண்டு "சபாஷ்! சபாஷ்!!" என்று கரகோஷம் புரிந்தார்கள்.

ஜடாவல்லவர்:—ஸ்ரீராமன் தாமெடுத்த நரஜன்மத்திற்கேற்ற வாறு, நடை, உடை, பாவனைகளை அநுசரித்துச் சேதுபந்தனம் ஹநுமான் உதவியைக்கொண்டு மரங்களையும் மலைகளையும் நிரப் பிக்கட்டி முடித்தார். நாராயண மூர்த்தியே உலகுய்யத் திருவுளங் கொண்டு ஸ்ரீராமவதாரம் எடுத்தாராகையால் அவரை நாமும் முனிவரும் முனிபுங்கவராகிய அந்த அகஸ்தியரும் தேவர்களும் பணிந்து இஷ்டார்த்த சித்திகளைப் பெறக் கடமைப்பட்டிருக்கின் றோம். அவர் அகிலலோக நாதரென்பதில் ஆக்ஷேபணையில்லை. அவ ருக்கிந்த சாகரம் வணங்காதென்பது கிடையாது. இவ்வளவுதான் அதனுண்மை. குழந்தாய், உன் ஸந்தேகம் நீங்கிற்று?—

மங்களவல்லி:—"அப்பா பரிபூரணமாய் நிவர்த்தியா யிற்று'' என்று எழுந்து, தன் தந்தைக்கு நமஸ்காரஞ்செய்து, உட்கார்ந்தாள். அப்பொழுது மணி பத்து அடித்தது. வழக்கம் போல் பிரசங்கமு முடிந்தது. ஜனங்களெல்லோருமெழுந்து தத் தம் வீட்டிற்குச் சென்றனர்.



## அத்தியாயம்—17

விருத்தம்.

"குலம்வேண்டு மென்றிருப்பார் குலத்துள்ளார்
கல்வியிறைற் குறையா ஞானப்
பலம்வேண்டு மென்றிருப்பார் தந்தைமார்
பரந்தபெருஞ் செல்வ முள்ள
தலம்வேண்டு மென்றிருப்பார் தாய்மார்கள்
யௌவனமும் அழகுஞ் சார்ந்த
நலம்வேண்டு மென்றிருப்பார் நாறுகுழற்
கன்னிமார் நலத்தின் மிக்கார்."

உரலிலகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா? என்பதுபோல் முடிகிறது ஸம்ஸாரத்தி லகப்பட்டவன் பாடும். ஆள் மிஞ்சுவ

தற்கு வழியில்லாமலிருக்கிறது! வரதக்ஷிணை என்னும் பேயின் வ்சப்படாமலிருக்க வேண்டுமென்று எண்ணிக்கொண்டிருந்த என்னையும் அது மடக்கிவிட்டதே! என் அறிவைச் சுடவேண்டும்!—இவ்வுலகம் துரோகமென்பதன் உருவம்!—கழுதைக்குக் கடிவாளமிடச் சம்மதித்தவன் கதைபோலாயிற்று எனது கதை! ஸ்ரீமதி பாதிப்பணம் தருகிறேனென்று கூறக்கேட்டு வரதக்ஷிணை கொடுக்கச் சம்மதித்தேனே—என்று எண்ணிக்கொண்டு ஜடாவல்லவர் ஒருநாள் காலையிலே தமது வீட்டைவிட்டு வெளியே வந்தார்.

வந்ததும் தம் வீட்டு வாயிற்படிக்கருகே, தமது நண்பர் செல்லமையர், ஒரு வாலிபனோடும், ஒரு பெரியவரோடும் வரச் சந்தித்து, "நமஸ்காரம்! வரவேண்டும்; கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததுபோலாயிற்று; வாருங்கள்" என்று வீட்டிற்குள் அழைத்துப்போய்ப் புதிதாக வந்த இருவரையும் யாரென விசாரித்தார். செல்லமையர், பெரியவரைக் காட்டி, "இவர் பவானி சிவசுவாமி ஐயர்: இச்சிறுவன் ஐயரவர்களுடைய நண்பரின் புத்திரன். இவன் மெட்ரிகுலேஷன் வரையில் படித்திருக்கிறான்; தமிழில் நல்ல அறிவுடையவன்; ஸங்கீதத்தில் நல்ல ஞானமுடையவன். சிறுவயதிலேயே இவன் தந்தை இறந்துவிட்டார். ஐயரவர்களுக்கு ஸந்ததி இல்லாமையாலும் தமது ஸ்நேகிதன் புத்திரனென்னும் அபிமானத்தாலும் இவனிடத்தில் விளங்கும் கல்வியறிவிலும் ஸங்கீத ஞானத்திலுங்கொண்ட அன்பினாலும் இவனைத் தமது புத்திரன்போல் பாவித்து அன்னமிட்டு ஆதரித்து வருகிறார். இவர்களிருவரும் நேற்று நமது மங்களவல்லி சபையில் பேசியதையும் அவள் கேட்ட புத்திசாதுர்யமான கேள்விகளையுங் கேட்டு வியப்படைந்தனர். இன்று காலையில் இவர் (சிவசுவாமி ஐயர்) என்னைக்கண்டு, மங்களவல்லியை ராமாமிர்தமென்னும் இச்சிறுவனுக்கு விவாகம் செய்துகொள்ள விரும்புவதாகவும் பேசி முடிக்கவேண்டுமென்றுங் கேட்டுக்கொண்டார். எனக்கும் இதில் விருப்பமிருக்கிறது. என்ன சொல்லுகிறீர்?" என்றார்.

இவையெல்லாம் ஜடாவல்லவரின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மங்களவல்லிக்குக் கர்ணாமிருதமாயிருந்தன. அவள் உள்ளங் கரைகடைந்த ஸந்தோஷத்தை யடைந்தது. புன்சிரிப்பு வெளியே வருவதும் போவதுமாயிருந்தது. முகார

விந்தம் மலர்ந்து ஒளி வீசியது. கயலெனப் பிறழும் அப்பெண் மணியின் கடைக்கண் நோக்கம் ராமாமிருதத்தினிடத்தில் நிலை பெற்று நின்றது. சுந்தர ரூபனாகிய ராமாமிருதத்தினுடைய கண்ணேக்கும் மங்களவல்லியின் பார்வையோடு கலந்தது.................

இவ்வாறு இருவர் மனத்திலும் ஒருவர்மேல் ஒருவர் கொண்ட அன்புபெருகி ஒன்றுபட்டது. திரிபுரசுந்தரி ராமாமிருதத்தின் பேரெழிலைக்கண்டு இவனே நமது மங்களவல்லிக்குத் தகுந்த நாயகனென நினைத்தாள்; தன் நாயகன் எண்ணம் எவ்வாறிருக்குமோ என்று ஐயமுற்றாள். இப்பொழுது அங்கே நின்று கொண்டிருந்த ஜடாவல்லவர் தங்கை ஸ்ரீமதி, "பையனோ கண்ணுக்கு வெகு அழகாயிருக்கின்றான்; கல்விமானுயுமிருக்கிறான். அண்ணா இவைகளைக்கண்டு நமக்குக் கொடுத்த வாக்கை மறுத்து விடுவாரோ—தெரியவில்லையே" என்று ஸந்தேகங்கொண்டாள். அவள் முகம் வாடியது. இவ்வாறிருக்க ஜடாவல்லவர், "இந்த வரனிடத்தில் பெண்ணைப்பெற்ற தந்தை இச்சிக்கத்தக்க கல்வியும் தாய் இச்சிக்கத்தக்க திருமகள் விலாசமும், கன்னிகை இச்சிக்கத் தக்க இளமையும், திவ்யதேஜஸும் பொருந்தியிருக்கின்றன. இப்படிப்பட்ட வரன் கிடைப்பதருமை. இந்த வரனை நிச்சயிப் போமாயின் மங்களவல்லிக்கும் திரிபுரசுந்தரிக்கும் பரிபூரண மான சம்மதமிருக்கு மென்பதில் ஆக்ஷேபணையில்லை. தவிர, கல்யாணச் செலவல்லது வேறு செலவுமிராது. இவ்வாறு சகல சௌகரியங்களும் பொருந்திய ஒரு வரனை நாமே தேடிப் பெண்ணைக்கொடுக்க வேண்டியது நமது கடமையாக விருக்க, வலுவில் வந்தவரனை விடுவது நியாயமாகாது; இந்த வரனை நிச்சயம் செய்து விடுவோம்" என்று சிந்தித்தார். ஆயினும் ஸ்ரீமதிக்கு வருத்தம்வரும் என்று அஞ்சி நண்பரைப் பார்த்து "ஸ்ரீமதியின் கொழுந்தனுக்குக் கொடுப்பதாகப் பேசி நிச்சயம் செய்தாய்விட்டது. இனி மறுத்துப் பேசுவது அழகாகுமா? இல்லாவிட்டால் நீர் சொல்வதை மறுத்துச் சொல்லேன்." என்று கூறி வருத்தமுற்றார். இதைக்கேட்டதும் மங்களவல்லி மனவருத்தத்துடன் அவ்விடம்விட் டெழுந்து போய்விட்டாள். ராமாமிருதமும் கைக்குவந்த வஸ்துவைப் பறிகொடுத்தேமாந்தவன்போலானான். சிவசுவாமி ஐயர், "சீ! நமது முயற்சி வீணாக வல்லவா போயிற்று; வதூவரர் இவ்வாறு எல்லாவிதத்திலும் ஒத்தமைவது அரிதென்பதை இவர் (ஜடாவல்லவர்) கருத

வில்லையே'' என வருத்தமுற்றார். செல்லமையரும் "மிஞ்சிப் போன விஷயத்தைப்பற்றிப் பேசுவதிற் பயனில்லை'' யென நினைத்து ஜடாவல்லவரைப் பார்த்து, "சரி; இனி வேறு பேச வேண்டியதில்லையே?'' என்று கூறி விடைபெற்றுச் சிவசுவாமி ஐயர் ராமாமிருதம் இவ்விருவருடனும் எழுந்துபோய் விட்டார். ஜடாவல்லவர், "அந்தோ! நெடுந்தவங்கிடந்த ஒருவனுக்கிரங்கிக் காட்சிகொடுத்த தெய்வம் அவன் கருத்தை நிறைவேற்றாமற் சென்றது போலாயிற்றே'' என்று கருதி வருந்தினார்.

செல்லமையர் முதலானவர்கள் அவ்விடம் விட்டுச் சென்றதும் ஸ்ரீமதி தன் தமையன் தனக்குக் கொடுத்திருக்கும் வாக்கை நிறைவேற்றுவதில் திடங்கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்ச்சி கொண்டாள்.

பின்பு இரண்டு நாட்களுக்கெல்லாம் ராமாயணப் பிரசங்கம் முடிந்து பட்டாபிஷேகம் நடைபெற்றது. ஜடாவல்லவர்க்குப் பட்டும் பீதாம்பரமும், விலையுயர்ந்த தோடாவும், வஸ்திரங்களும் பரிசளிக்கப்பட்டன. எப்பொழுது இந்த இழவெடுத்த இராமாயணப் பிரசங்க முடிந்து தொலையுமென் றெதிர்பார்த்திருந்த ஸ்ரீமதி பட்டாபிஷேகமான மறுநாளே மங்களவல்லியை யழைத்துக்கொண்டு தஞ்சாவூருக்குப் போய்விட்டாள்.

அப்பால் ஒரு நாள் ஜடாவல்லவர் செல்லமையரைக் கண்டு பேசினார். அப்போது செல்லமையர் ராமாமிருதத்தைப்பற்றி நினைப்பூட்டினார். ஜடாவல்லவர் சற்று நேரம் சிந்தனை செய்தபடியிருந்து, "செல்லமையரே! இந்த வேளைக்கிருக்கும் ஆருடபலனைப் பார்த்தால் மங்களவல்லிக்குத் தஞ்சாவூர்ப்பிள்ளை புருஷனாவது கஷ்டமென்று புலப்படுகின்றது. ஆகையினாலே ராமாமிருதத்தின் ஜாதகத்தை யழைப்பியும் பார்க்கலாம்'' என்றார். செல்லமையர், "ஆகா அப்படியே செய்கின்றேன்'' என்று கூறிப் பிரிந்தார்.

பிறகு இரண்டு தினத்திற்கெல்லாம் தஞ்சாவூர் வீதாபதி ஐயரிடமிருந்து, ஸ்ரீமதி செய்த ஏற்பாட்டில் தமக்குச் சம்மதமென்றும் அடுத்த வைகாசி மாத முதலிலேயே முகூர்த்தம் வைத்துவிட வேண்டுமென்றும், உடனே பதில் தெரிவிக்கும்படிக்கும் ஒரு கடிதம் வந்தது. கடிதங் கண்டதும் ஜடாவல்லவர் தாம் முன் பேசியிருந்த இரண்டொருவரைக் கண்டு ரூபா ஆயிரம் கடன் கேட்டார். அவர்கள் ஜடாவல்லவர்க்குப் பணம் மிக

அவசரமென்பதை யறிந்து வாய்கொண்டமட்டும் வட்டி கேட்டார்கள். ஆகையால் ஜடாவல்லவர் அதிக வட்டிக்குக் கடன் வாங்க அஞ்சித் தமக்கிருந்த ஓர் ஏக்கர் நிலத்தை யாரிடமேனும் விற்றுவிட எண்ணி முயற்சி செய்தார். அதற்கும் சரியான விலை வரவில்லை. ஆனால், அவ்வூரில் இம்மாதிரி ஏழைகள் பணத்துக்கு அவசரப்படும் பிரமேயங்களில் அவர்களுடைய நிலங்களை ஈனக்கிரயத்துக்கு வாங்கியும் அதிக வட்டிக்கு அவர்களின் சொத்துக்களின் மேல் பணங்கொடுத்தும் பொருள் சம்பாதித்த தனவந்தர் சிலருண்டு. வட்டிக்குப் பணங்கொடுத்துப் பொருளீட்டும் இந்த ஈன மதியாளர் மாத்திரம் ஜடாவல்லவர் நிலத்தை உண்மையில் எவ்வளவு பெறுமோ அதில் பாதி விலைக்கு வாங்க, வாய் கூசாமல் கேட்டார்கள். அதிலும் சிலர் பாதித்தொகை கையிலும் பாதித்தொகை இரண்டொருமாதத் தவணையிலும் தருவதாய்க் கூறினர். இவ்வாறு அவர்கள் தம்மை மதியாமலும் தாம் செய்த உபகாரத்தை நினையாமலும் பணமே பெரிதெனவெண்ணிக் குணபேதங்கொண்டு பேசுவதற்கு ஜடாவல்லவர் வருத்தமுற்று, "சீ! இம் மண்ணுலகில்—

'பொருளிலார்க் கின்ப மில்லை புண்ணிய மில்லை யென்றும்
மருவிய கீர்த்தி யில்லை மைந்தரிற் பெருமை யில்லை
கருதிய கரும மில்லை கதிபெற வழியு மில்லை
பெருநிலந் தனிற்சஞ் சாரப் பிரேதமாய்த் திரிகு வாரே.'

என்ற ஆன்றோர்வாக்கை யொத்து நமது வாழ்க்கையும் பெருமையற்றுப் போயிற்று; சிறுமை மேலிட்டு விட்டது"—என்று பலவாறாக ஒருநாளிரவு முழுதும் எண்ணியபடி யிருந்து பின் "இந்தக் கல்யாணம் நின்றுவிட்டபோதிலுஞ் சரி, நமது நிலத்தை இம்மதியீனர்களுக்கு விற்பதில்லை," யென்று துணிந்தார்.



## அத்தியாயம்—18



### "அல்லல் அருளாள்வார்க்கில்லை"

காலனும் வெளிவர, அஞ்சும் பேரிருள் சூழ்ந்த ஒரு நாள் நடுநிசி வேளையில் செங்குத்தான இரண்டு குன்றினிடையே ஒரு பெரும் பள்ளத்தாக்கில் கரடு முரடான ஒரு வழியிலே ஜடாவல்

லவர் ஏறிக்கொண்டு சென்ற தேக்கன் வண்டி, வண்டியி லிருந்த வர்களின் தேகங் குலுங்க மெதுவாய் ஆடி அசைந்தபடி போய்க்கொண்டிருந்தது. அப்படிப்பட்ட பாதையில் அவ் வண்டி ஒருகல் தூரஞ் சென்றது. இதுவரையில் அவ்வழியே அந்த வண்டிமாடுகள் போனதில்லை யாகையினாலே அவை குருடரைப்போல் தள்ளாடி மெதுவாய்ச் சென்றன. வண்டிக்காரத் தேக்கன் வெகு ஜாக்ரதையாய் வண்டியை ஓட்டிக்கொண்டு போனான். அவனும் கண்ணைக்கட்டிக் காட்டிலே விடப்பட்டவன் போல் திசை தெரியாமலிருந்தான். வண்டியிலிருந்த ஜடாவல்லவர், தம்மோடு வண்டியிலுட்கார்ந்து வரும் மாதர் இருவரையும் நோக்கி, "இந்தப் பாழும் வழியிலே நான் பயணம் போவதேயில்லை. நாமக்கல் என்று செவியிலே கேட்டாலும் நான் அஞ்சுவேன். போகவேண்டிய ஓர் அவசியம் நேர்ந்தது. இன்றேல் புறப்படேன்."—என்று கூறினார். ஸ்திரீகள், "ஸ்வாமி, உங்களாலே தப்பினோம்! புண்யம் உங்களுக்கு மெத்தவுண்டு" என்றார்கள்.

இச்சமயம் அவர்களுக்கு ஒரு பர்லாங்கு தூரத்திற்கப்பால், தீவட்டி வெளிச்சம் ஒன்று தோன்றியது. அதைக் கண்ட தேக்கன், "சுவாமி! பார்த்தீங்களா நமக்கு நேர் தெற்கே தீவட்டி வெளிச்சம் தோணுதுங்க!" என்றான். ஜடாவல்லவர்—"அப்பா தேக்கா! ஆமாம்! வெளிச்சந்தெரிகிறது. அது நம்மை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. தேக்கா! வண்டியை நிறுத்து. யாரென்று நிதானித்துப் பிறகு ஓட்டுவோம்.—இப்போது உற்றுக்கேள். பல்லக்குப் போகிகள் பல்லக்குத் தூக்கும்போது போடும் சப்தம் கேட்கின்றது. பேயும் வெளியேவர அஞ்சும் இந்த நள்ளிருள் வேளையில் பல்லக்குப் போட்டுக்கொண்டு இக்காட்டுப் பாதையில் வருபவர்கள் யாவர்?" என, தேக்கன், "சாமி, கேக்குதுங்க; ஆமாம் பல்லக்குப் போகிகளின் சத்தந்தான். இந்தச் சாமத்திலே பல்லக்குப் போட்டுக்கொண்டு போறவங்க புத்தூர் ஜமீன்தார்தானுங்க. அவரைத் தவிர யாருக்குத் தைரிய முண்டுங்க" என்றான். ஜடாவல்லவர், "தேக்கா! அவராக இருந்தாலு மிருக்கும்; அவர் நடுப்பட்டிக்கு அடிக்கடி வருவதுண்டு" என்றுசொன்னார். இதற்குள் தீவட்டி வெளிச்சமும் நெருங்கி விட்டது. பல்லக்குப் போகி போடும் சப்தமும் நன்றாய்ச் செவியிற்பட்டது. முன்னே

பத்துத் தீவட்டியும் பின்னே பத்துத் தீவட்டியும் நடுவில் பல்லக்கும், இருபுறமும் சுமார் ஒரு பக்கத்துக்கு இருபது பேர்களாக நாற்பது வீரர்கள் கத்தியும், துப்பாக்கியும், தடிகளும் கொண்டு பல்லக்குடன் விரைந்து ஓடிவருவதையும் அவர்கள் கண்டார்கள். உடனே ஜடாவல்லவர் " அப்பா தேக்கா ! ஜமீன் தார் போலத்தானிருக்கின்றது. நான் அவரைக் கீழே இறங்கிப் பார்க்கின்றேன். வண்டியை நிறுத்து " என்று சொல்லி, நிறுத் தியவுடன் கீழேயிறங்கினார். அப்பொழுது வண்டியிலிருந்த ஸ்திரீகள் " நாம் பிழைத்தோம்; நமக்கினிப் பயமில்லை " என் றெண்ணி, மகிழ்ந்தார்கள். இதற்குள் பல்லக்கானது வண்டிக்கு இருபதடி தூரத்தில் நெருங்கிவிட்டது. இப்பொழுது, அவ்விடத் தில், " யாரடா வண்டியை நிறுத்து நிறுத்து " என்று சொல்லிக் கொண்டு, திருமணஞ் செய்துகொண்டு திரும்பிய ஸ்ரீராமபிரானை வழியில் அதட்டி மடக்கிய பரசுராமரைப்போல வண்டியின் நுகத்தடிக்கு முன்னே ஒரு வீரன் தோன்றித் தடுத்தான். தடுத் ததும் தேக்கனுக்கு மூக்குக்கு மேல் கோபமுண்டாயிற்று. நல்ல வேளையாய் ஜமீன்தார் என்னும் எண்ணம் அவன் மனத்தில் அப் பொழுது உதித்தது. அது அவன் கோபத்தை யவித்தது. அத ஞலே அவன் சீறியெழும் பாம்பு அடங்குவது போலடங்கி, " ஏ அண்ணே ! ஏன் வண்டியை நிறுத்தச் சொல்லறே, பல்லக்கில் யார்? எசமான் சமின்தாரா?" என்றான். அந்த வீரன் வண் டியை நிறுத்து என்று அதட்டியதும் ஜடாவல்லவர், பரசுராமரது வருகையின் ஆர்ப்பாட்டங்கேட்ட தசரதர் போல மெய்ந்நடுங்க அச்சமுற்றுப் பரபரப்பாக வண்டிக்கு முன்னே வந்து வாய் வார்த்தை குழற நின்று நிதானமடைந்து பணிவே பயன்றரும் என்று கருதிக் கல்லான மனதுங் கனிந்திரங்கும்படி " ஏனப்பா, வண்டியை நிறுத்துகின்றேன்; கோபித்துக்கொள்ளாதே; நாங் கள் இதுவரையில் பட்டபாடு போதும்'—என்று இதமாய்ச் சொன்னார். இப்போது பல்லக்கும் வண்டியைக் கிட்டிவிட்டது. பல்லக்குப் போகிகளும் இதைக் கண்டு பல்லக்கை நிறுத்திவிட்ட னர். உடனே அதிலிருந்த புருஷன் கீழே குதித்து 'அஞ்சாத ஆண்மை கொண்ட வீரசிங்கனை யெதிர்த்தவன் யாரடா?' என்று சிம்ம கர்ஜனைபோன்ற கம்பீரத் தொனியுடன் ஜடாவல்லவர் திடுக்கிட எதிரில் வந்தான்; ஜீவகாருண்யமே ஒரு மானிட வுரு வெடுத்ததெனத் தன்னெதிரில் விளங்கும் அவரது முகாரவிந்தத்

தைப் பார்த்தான். பார்த்ததும் 'சுவாமி! அடியேன் பிழை பொறுத்தருளவேண்டும்' என்று, தயாபர மூர்த்தியாகிய ஜகதீசனைக் கண்ட மெய்யன்பனென மனத்தி லானந்தங்கொண்டு தரையில் விழுந்து சரணமடைந்தான். அப்பொழுது அங்கிருந்த பராக்ரமசாலியாகிய வீரர்களெல்லாம் மூக்கில் கைவைத்து 'ஆ! ஆ! இதென்ன புதுமை! வணங்காமுடி மன்னனென விளங்கும் நமது வீரசிங்கனும் சரணாகதியெனத் தரையில் விழுந்து தொழத்தக்க புண்ணியவானாகிய இவர் யாரோ—எந்த மகானோ அறியோம்' என்று வியப்படைந்து சுவரிலெழுதப்பட்ட சித்திரப் பாவையினடங்கி இமைகொட்டா நாட்டம் பெற்று பிரமித்து நின்றார்கள்.

ஜடாவல்லவர்க்கோ தம்மைச் சரணமடைந்த புருஷன் யாரெனத் தெரியவில்லை. தேக்கனும் வாய்பேசாமல் நின்றான். ஜடாவல்லவர் கீழே குனிந்து சரணமடைந்த வீரனை இரண்டு கைகளாலும் பிடித்துத் தூக்கி 'ஜகதீசன் கிருபையுண்டாகுக' என ஆசீர்வதித்து எழுப்பினார். பின் வீரசிங்கன் 'சுவாமி! தாங்கள் இந்த நடுநிசி வேளையில் எங்கே இங்கு வந்தீர்கள்? வண்டி யெங்கே போகிறது? வண்டியில் என்ன பாரம்? இன்னும் யார் வண்டியிலிருக்கிறார்கள்? என்னை யாரெனத் தங்களுக்குத் தெரிகின்றதா? அடியேன் அறியாமற் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும்'' என்று இருகரமும் சிரமேற் குவித்துத் தலைவணங்கி நின்றான். இதைக்கண்ட ஜடாவல்லவர் 'இஃதென்ன புதுமை! நாமோ இவனை யறியோம்! இவனோ நமக்குச் செய்யுமுபசாரம் அளவு கடந்ததாயிருக்கின்றது. ஜகதீசன் நம்மைச் சோதிக்கத்தான் இவ்வாறு திருவுளங்கொண்டுதோன்றியுளனோ! என்னமாயம்! என்ன ஆச்சர்யம்! எல்லாம் மங்கை பங்காளன் செயல்! முருகக்கடவுளின் திருவருள்!'' என்று நினைத்து அவர் திருவடித் தியானஞ்செய்து "அப்பா திக்கற்றுத், திசைகெட்டுத் திருடர்களுக்கஞ்சி, இவ்வரண்யத்திற் புகுந்தலையும் பாவிகளாகிய எங்களிடத்தில் இரக்கங்கொண்ட புருஷனாகிய நீ யார்? எனக்குத் தெரியவில்லையே!'' என்று கேட்டார்.

வீர—சுவாமி! தங்களுக்கு என்னை நன்றாய்த் தெரியும். தாங்கள் பதினைந்து வயது வாலிபராயிருக்கும்போது நான் உமது தந்தை அன்னதான உமாமகேசுவர ஐயரிடம் வேலைக்காரனா யமர்ந்து அந்தப் புண்ணியவானுடைய அன்னமுண்டு

வளர்ந்து வந்தேன். அப்பொழுதெனக்கு வயது முப்பது. அவ ரிடம் நான் ஒரு வருஷமிருந்தேன். என் பெயர் நமசிவாய மென்று சொல்வார்கள். தங்களுக்கு என்னைப்பற்றி ஞாபகமில் லையா ?

ஜடா—ஆமாம் ஞாபகமிருக்கின்றது. இப்போது என்ன செய்கின்றாய்? நீயா அவன்? இந்த வேளையில் இங்கு எங்கே வந்தாய் ?

வீர—இப்பொழுது இக்கானகத்தில் திருடர்களுக்கு அதி பதியாயிருந்து வருகிறேன். இதோ இந்த ஸக்கார் ரோட் டிற்கு வடக்கே ஐந்து கல் தூரத்திற்கப்பாலுள்ள ஒரு பெருங் குன்றில் ஒருவராலும் அறிய முடியாத ஓரிடத்தில் வசித்து வரு கின்றேன். நான் இப்பொழுது புத்தூர் மிராசுதார் ராமசேஷய் யர் வீட்டில் தீவட்டிக் கொள்ளை யடித்துவிட்டு வருகின்றேன். பொழுது விடியுமுன் நான் என்னிருப்பிடம் போக வேண்டும். தாங்கள் இப்பாதை வழியே எங்கே போகிறீர்கள் ? சீக்கிரமாகத் திருவுளமிரங்க வேண்டுகின்றேன்—என்றான்.

வண்டியிலிருந்த ஸ்திரீகளும் தேக்கனும் இவ்வற்புத ஸம்பா ஷணையைக் கேட்டு " ஆ! என்ன ஆச்சரியம்! திருட்டுத்தொழில் செய்யும் முரட்டுக் கிராதகர்களிடத்தும் செய்ந்நன்றி மறவாமல் இரக்கங்காட்டும் பெருங்குணம் விளங்குகின்றதே. இதுவும் நமது நல்ல வேளை தான்" என ஸந்தோஷமடைந்து மௌன மாய்க் கவனித்துக்கொண்டிருந்தனர். ஆயுதபாணிகளாய் நின்ற வீரர்களோவெனில் பரமாச்சரியமடைந்து தங்கள் தலைவன் வீர சிங்கன் வாயிலிருந்து எந்த ஏவல் செய்ய உத்தரவாகுமோ வென்று மௌனமாயிருந்தனர்.

மனத்தைத் தியானத்தில் நிறுத்திய மெய்யன்பர்கள் குழு மிய தேவஸந்நிதியை யொத்திருந்த திவ்விடம்! இச்சமயம் ஜடா வல்லவர் திடகாத்திர தீரனாகிய வீரசிங்கனைப்பார்த்து "நீ ஸத் தியந் தவறாத உத்தம குண சீலனாகவல்லவா இருந்தாய் ? பஞ்ச மகா பாபத்துக்குள் ஒன்றாகிய திருட்டுத்தொழிலில் நீ ஏன் பிர வேசித்தாய்? உன் பெயரும் வீரசிங்க னெனக்கொண்டு கடும்புலி வாழும் இக்கானக வாசஞ் செய்யத் துணிந்தாயே! கொடிய பாவத்துக்காளாகப் பிராமணருடைய சொத்தைக் கொள்ளை யடித்தும் வருகிறாய். 'பிரம்ம சொத்து குல நாசம்' என்றல் லவா சாஸ்திரம் ஏற்பட்டிருக்கின்றது; இதை யேன் நீ அறியாமற்

போனாய்? அப்பா! எனது பிரியமுள்ள நண்பா! தீயின்வாய்ப் பட்ட புழுப்போலத் துடிக்கும் இத்தருணத்தில் என்முன் வந்து சிந்தைமகிழ அஞ்சேலென்று காத்த தீரா! திருட்டுத் தொழிலைத் தொழிலாகக் கொண்டாயெனினும் "உப்பிட்டவரை உள்ளளவு நினை" என்ற நீதிவாக்கியந் தவறாமலிருக்கின்றாய். இது உன் பூர்வ ஜன்ம புண்ணிய பலனென்றே நான் எண்ணுகின்றேன். ஆ! கேட்க மனம் நடுங்குகின்றதே! இந்த அற்பத்தொழிலிற் பிரவேசிக்க உனக்கு மனமெப்படித் துணிந்தது?" என்றார்.

வீரசிங்கன்:—'சுவாமி! நான் இத்தொழிலிற் பிரவேசித்ததற்குக் காரணந் தெரிவிக்க இப்போது போதுமான நேரமில்லை. எங்கே போகின்றீர்கள்? வண்டியில் யார்? தெரிவிக்க வேண்டும்'—என்றான்.

ஜடாவல்லவர்:—"அப்பா, என் வெட்கக்கேட்டை என்னென்று சொல்வேன்! என் தந்தை பிழைத்த பிழைப்பும் என் பிழைப்பும் கடைசியில் வீணாகவே முடிந்தன. நான் இப்போது நாமக்கல்லுக்குப் போய் அவ்வூர் கண்ணாயிரம் பிள்ளையிடம் ரூபா ஆயிரம் என் மகளுடைய கல்யாணத்துக்குக் கடன் வாங்கப் போகிறேன். இது நம்மூர் வண்டிதான்; வாழைக்காய் பார மேற்றிக்கொண்டு சந்தைக்குப் போகிறது. இதில் நான் ஏறிக்கொண்டு வந்தேன்" என்று வேறு பேசுவதற்குள், வீரசிங்கன் "சுவாமி! ஏன் இப்பக்கந் திரும்பினீர்கள்? வண்டி நாமக்கல் ரஸ்தாவிலல்லவா போகவேண்டும்?" என்று கேட்டான். ஜடாவல்லவர், "அதைக்கேள்—எங்கள் வண்டி எல்லா வண்டிகளுடன் சங்கிலி கோத்ததுபோலத்தான் வந்தது. வரும்போது பாதி வழியில் மாடு படுத்துக்கொண்டது. அதனால் வண்டி பிந்தியது; பின் தனியேவந்தது. இந்த வழிக்கு அருகே நாமக்கல் ரஸ்தாவில் வரும்போது அதற்கு வடக்கே இரண்டு ஸ்திரீகளின் அழுகுரல் கேட்டது. அதனை யறியவெண்ணி அங்கு வண்டிக்காரன் சென்றான்; இரண்டு ஸ்திரீகள் திருடர்களிடத்தகப்பட்டு அடிபட்டு அழுவதைக் கண்டு மனமிரங்கி அவர்களை வண்டிக்கழைத்து வந்தான். அவர்கள், திருடர்கள் அந்த ரஸ்தாவின் வழியே சென்றிருப்பதாகக் கூறினார்கள். அதனால் நாங்களஞ்சி இப்பக்கம் வண்டியை ஓட்டிவந்தோம்" என்றார். வீரசிங்கன், "யார் அவர்கள்," என, ஜடாவல்லவர், "அவர்கள் "தொட்டியத்திலிருந்து வருகின்றார்களாம். அவர்களை எவனோ வலையபட்டியி

லிருந்து மோசஞ் செய்து அழைத்து வந்துவிட்டானும்; நல்ல அடி அவர்களுக்குப் பாவம்'' என்றார்.

வீரசிங்கன் "சுவாமி! ஆ! அப்படியா! அந்த ஸ்திரீகளை மோசஞ்செய்து வலையபட்டியிலிருந்து அழைத்துவந்த மனிதன் எனக்குள்ளடங்கிய ஒரு கூட்டத்திற்குத் தலைவனாகத்தா னிருக்க வேண்டும். நீங்கள் அஞ்சவேண்டாம்! எங்கே அந்த ஸ்திரீகள்'' என்று கூறிவண்டிக்குப் பின்புறம் போய்ப் பார்த்தான். அங்கே அச்சத்தினால் கால்கை நடுங்கப் படுத்திருந்த மாதர்களின் பரிதாப நிலைமையைக் கண்டு கலங்கி, "அம்மா! உங்களூர் தொட்டியந்தானா? இச்சிறுமி உங்கள் குமாரத்தியா? உங்களோடு கூட வந்த புருஷன் யார்?'' என்று வயது வாய்ந்த ஸ்திரீயைக் கேட்டான். இம்மாது "என் ஐயா! என்னையாதரிக்க வந்த ஆபத்சகாயா'' என்று கண்ணில் நீர் பெருகக் கைதொழுது வணங்கி, "எங்கள் ஊர் தொட்டியந்தான். சிறுபெண் எனக்கு மருமகள்; எங்களோடு கூட வந்த என் மகன் எக்கதியானானோ நாங்கள் அறியோம்! ஐயோ! என்ன செய்வோம்! எங்கள் கதி இப்படியாய் விட்டது!'' என்று சொல்லிக் கதறினாள். சிறுமியும் குய்யோ முறையோ ஐயோ வென்று கூக்குரலிட்டுக் கதறினாள். வீரசிங்கன், "அம்மா அழாதேயுங்கள்; உங்களுக்கினிப் பயமில்லை; நானிருக்கின்றேன்'' என்று கூறி மனத்தில் பச்சாத்தாபமடைந்து தீவட்டி வெளிச்சத்தைக்கொண்டு அவர்களை உற்று நோக்கினான். நோக்கிய கண் நோக்கியவாறே நிற்க வீரசிங்கன் அசைவற்ற மரம்போல் நின்றுவிட்டான். இவன் இப்படி நிற்பதைப் பார்த்து ஜடாவல்லவர் பிரமித்தார். தேக்கனும் திடுக்கிட்டான். வீரர்களும் திகைத்தார்கள். இரண்டு நிமிஷம் கழிந்தன. பின் வீரசிங்கன் "அம்மா தொட்டியத்தில் யார் வீட்டிலிருந்து வருகிறீர்கள்? இப்பெண்ணுக்குப் பிறந்த ஊரெது? உங்கள் இருவருடைய பெயருமென்ன?'' என்று வயது வாய்ந்த ஸ்திரீயைப் பார்த்துக் கேட்டான். அந்த ஸ்திரீ "அப்பா! நாங்கள் தொட்டியம் இராமலிங்கம்பிள்ளை வீட்டிலிருந்து வருகின்றோம். என் பெயர் அறப்பெருஞ் செல்வி. இராமலிங்கம்பிள்ளை என் புருஷன். அவர் இறந்து போய்விட்டார். என் மருமகளுக்குப் பிறந்த ஊர் மதுரை. இவள் தந்தை ஒரு பிரபல ரத்தின வியாபாரியா யிருந்தார். அவர் பெயர் கங்காதரம் பிள்ளை. இப்பெண்ணின் பெயர் மங்கையர்க்கரசி. இவள் பிறந்த இரண்டா

வது வயதிலேயே இவளுடைய தந்தை தம் மனைவி யிறந்து பிண மாய்க்கிடக்கையில் பிணத்தையெடுத்து அடக்கஞ்செய்யாமற்கூட வீட்டைவிட்டு வெளியேறிவிட்டார். எனக்கு அவர் தாய் மாமன். அப்படி அவர், திடீரென்று வீட்டைவிட்டு வெளியேறிய தற்குக் காரணம் இன்னதென்று நாளிது வரையில் நாங்கள் அறியோம்'' என்று கூறி இன்னும் மேலே சொல்லிக்கொண்டிருக் கும்போதே வீரசிங்கன் கண்களினின்று நீர் தாரைதாரையாகப் பெருகி ஓட ஆரம்பித்துவிட்டது. அவன் மரம்போல் ஸ்தம்பித்து நின்றுவிட்டான். துக்கம் வாய்பேசவொட்டாமல் மேன்மேலும் உண்டாயிற்று. இதைக்கண்ட மாதர்கள் " ஆ! இதென்ன இப்படித் துக்கப்படுகிறான்?'' என்று பிரமித்து நின்று விட்டனர். ஜடாவல்லவர், தேக்கன், வீரர் முதலிய யாவரும் தம்வசமற்ற நிலையை யடைந்தனர்.

இத்தருணம் ரோட்டுப் பக்கமிருந்து சுமார் நாற்பது ஐம்பது வீரர்கள் கையுந் தடியுமாய்ப் பட்டாளம்போலத் திடீரென்று வந்து இங்கே நின்றார்கள். நின்றவுடன் ஒருவன் வீரசிங்கன் முன் வந்து, " அண்ணே! நான் அறியாமல் இம்மாதர்களைத் துன்பப் படுத்திவிட்டேன். நீ விசனப்படுகிறதைப் பார்த்தால், இம்மாதர்கள் உன் உறவினரோ என்கிற சந்தேகமுண்டாகிறது. மன்னிக்க வேண்டும்; நாங்கள் முன்வண்டியில் கொள்ளை யடிக்கப் போயிருந்தோம். திரும்புகையில் இங்கே வெளிச்சம் தெரியக்கண்டு என்னவென்று பார்க்கவந்தோம்'' என்றுசொல்லி நின்றான். இவ்வாறு சொல்லி வாய்மூடுமுன் வண்டியிலிருந்த மாதர்கள் இருவரும், "ஐயோ! பாவி இச்சண்டாளன்றான் எங்களை வஞ்சித்து வலையபட்டியிலிருந்து அழைத்து வந்தவன்'' என்று சொல்லிக் கீழே யிறங்கிப் பின்னும் அழுதார்கள். வீரசிங்கன் " அம்மா பயப்பட வேண்டாம்; அழாதேயுங்கள்; நானிருக்கின்றேன்'' என்று தைரியஞ் சொல்லித் தானும் தன் துக்கத்தைச் சாந்தப்படுத்திக் கொண்டு, தன் எதிரில் நின்ற வீரனைப்பார்த்து, " அப்பா நடந்து போனதைப் பற்றிப் பேசுவானேன்? எங்கே இவர்களோடு வந்த மனிதன்?'' என்றான். அதற்கவன் " அண்ணே! அந்த மனிதனுடைய கையையும் காலையுங்கட்டி ரோட்டுப்பக்கமிருந்த நாணற் புதருள் போட்டோம்; அவன் அங்கேதான் கிடப்பான்; உத்தர விட்டால் ஒரு நொடிப்போதில் இரண்டுபேரை யனுப்பி அம்மனிதனை யிங்கே கொண்டுவரும்படி செய்கின்றேன்!' என்று சொல்லி

அக்கணமே தன்னோடு கூடவந்த வீரரில் இருவரைப்பார்த்து, அம்மனிதனைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டான், அவ்விரு வரும் ஓடினர்.

வீரசிங்கன் பின்பு அம்மாதருள் அறப்பெருஞ் செல்வியைப் பார்த்து "அம்மா நான் யாரென்று இன்னும் உனக்குத் தெரிய வில்லையா?" என்றான். இப்பொழுது அறப்பெருஞ் செல்வி "அப்பா! நீ யார் எனக்குத் தெரியவில்லையே" என்று கூறி உற்றுப்பார்த்தாள். பார்த்ததும் "ஆ! மாமா! எங்களைவிட்டு இவ்வளவு காலம் நீர் எப்படிப் பிரிந்திருந்தீர்? அதற்கு உமது மனம் எவ்வாறு துணிந்தது? என்ன காரியம் செய்துவிட்டீர்" என்று கண்ணில் நீர்ததும்பத் தரையில் விழுந்து சரணமடைந்தாள். அக்கணமே மங்கையர்க்கரசியும் "ஆ! என்னைப்பெற்ற ஐயா" எனக் கூவித் தரையில் விழுந்து கதறினாள். வீரசிங்கன் அவ்விருவரையும் கைகொடுத்து எழுப்பி மங்கையர்க்கரசியைத் தழுவி, "என் கண்ணே! கரும்பே! ஆசைக்கிசைந்த நேசக்கிளிபெற்ற ஆநந்த மயிலே! வருந்தாதே" என்று கூறித் தேற்றி, அறப்பெருஞ் செல்வியைப்பார்த்து, "அம்மா! வருந்துவதிற் பயனென்ன? என்னுடைய ஊழ்வினையானது இவ்வாறு உறவினரையும் மனைவிமக்களையும் வீடுவாசல்களையும் பிரிந்து, கானக வாழ்க்கையில் கிடந்துழலும்படி செய்துவிட்டது. சென்ற விஷயத்தைக் குறித்துச் சிந்தனை செய்வதில் என்ன பயன்?" என்று சொல்லி ஜடாவல்லவரைப் பார்த்து, "சுவாமி! இவர்கள் யாரென்று தெரிந்துகொண்டீர்களா? இச் சிறு பெண் என்னுடைய மகள். இந்த ஸ்திரீ என் அக்காள் மகள். இவர்களைப் பிரிந்ததும், இன்று இந்த ஆரண்யத்தில் சந்திக்கும்படி நேர்ந்ததும் என் கால வித்தியாசமே தவிர வேறல்ல. நான் மதுரையில் பிரபலமான ரத்தின வியாபாரியா யிருந்ததும், பிறகு வீட்டை விட்டு ஒருவர்க்குந் தெரியாமல் என் மனைவி இறந்து பிணமாய்க் கிடக்கையில் வெளியேறியதும் உண்மையே! சிறு வயதுமுதல் வீட்டை விட்டு வெளியேறியவரையில் எனக்கிட்டு அழைக்கப்பட்டுவந்த பெயர் கங்காதரன் என்பதுதான்" என்று சொல்லிப் பின்னும் துயருற்றான். ஜடாவல்லவர் "அப்பா வீரசிங்கா! துக்கப்படாதே; நீ திடீரென்று வீட்டை விட்டு வெளியேறி இவ்வளவு காலம் இவர்களைப் பிரிந்திருக்கக் காரணமென்ன?" என்று கேட்டார். வீரசிங்கன் "சுவாமி, எனக்கு

இவ்விடம் நின்று பேச நேரமில்லை. நான் இவ்விருவரையும் என்னிருப்பிடத்திற்கு இப்பொழுது அழைத்துப் போகின்றேன். நீங்கள் நாளையிரவு நாமக்கல்லுக்குப்போய்த் திரும்பி இவ்வழியே வருவீர்களல்லவா? அப்பொழுது உங்களையும் இந்த ஸர்க்கார் ரோட்டில் சந்தித்து என்னிருப்பிடத்திற்கு அழைத்துப் போகின்றேன். நாமெல்லோரும் அங்கே சற்றுநேரம் பேசிக்கொண்டிருப்போம். பிறகு உங்களையும் அன்றிரவு பிள்ளையார் புத்தூருக்கு அனுப்பிவிடுகின்றேன். இவர்களையும் அன்றிரவே தகுந்த துணைசேர்த்து நாமக்கல்லுக்கு அனுப்பிவிடுகிறேன்; சில இரகஸ்யமான விஷயங்கள் பேசவேண்டும். இப்பொழுது நேரமில்லை. உங்களுக்கும் இங்கே தங்க முடியாது. நாமக்கல் போய்த் தீரவேண்டும். ஆகையால், அடியேன் வேண்டுகோளுக்கிரங்கி அருள்புரிய வேண்டும்" என்று வணக்கமாய்க் கேட்டுக்கொண்டான். ஜடாவல்லவர், "உங்களை, உங்கள் பந்துவாகிய இம்மனிதன் தன்னிருப்பிடத்திற்கு அழைத்துப் போகவேண்டுமென்கின்றான். உங்களுக்குச் சம்மதந்தானா?" என்று கேட்டார். அவர்கள் சம்மதித்தனர்.

வீரசிங்கன் "சுவாமி! நல்லது அழைத்துப் போகின்றேன்; என்பேரில் சிறிதும் தாங்கள் ஸந்தேகங்கொள்ள வேண்டாம்; நாளை இரவு நான் தவறாமல் வந்து தங்களைச் சந்திக்கின்றேன். மணி மூன்றிருக்கும். நான் இங்கே இனி யொரு க்ஷணமும் தாமதிப்பதற்காகாது; போய் வருகின்றேன்; தங்கள் வண்டியோடு நாமக்கல் போகிற வரையில் துணையாக வரும்படி பத்து வீரர்களை யனுப்புகிறேன்" என்று சொல்லி, எதிரில் நின்றுகொண்டிருந்த தீவட்டிக்காரர்களைப் பார்த்து "நீங்கள் பத்துப் பேரும் இந்த வண்டியோடு இருள்பிரியும் வரையில் துணைபோய்ப் பின் திரும்பிவிடுங்கள்" என்றுத்தரவளித்து மாதர்களிருவரையும் தன் பல்லக்கிலேறி உட்காரச்சொன்னான். அவர்கள் உடனே பல்லக்கிலேறி உட்கார்ந்தார்கள். வீரசிங்கன் கால் நடையாகப் புறப்பட்டான். தேக்கனும் வண்டியைக் கட்டி ஓட்டினான். வண்டியோடு வீரர்களும் வீரசிங்கன் உத்தரவுப்படி தீவட்டி சகிதமாய்ப் புறப்பட்டனர். வண்டி முன்னும் பல்லக்குப் பின்னுமாகப் போய்க்கொண்டிருந்தன. ஜடாவல்லவரும் வீரசிங்கனும் பல பல பேச்சுக்கள் பேசிக்கொண்டு மெதுவாய் நடந்து சென்றனர். இவ்வாறு அரை பர்லாங்கு தூரம் போவதற்குள் இரண்டு

வீரர்கள் நாணற்புதருக்குள் கட்டிக் கிடத்தியிருந்த மனிதனைத் (மங்கையர்க்கரசி மணவாளனை) தூக்கிக்கொண்டு வந்து சேர்ந்தனர். உடனே வீரசிங்கன் பல்லக்கையும், வண்டியையும் நிறுத்தும்படி சொல்லிவிட்டு, வீரர்களைப்பார்த்து "அந்த மனிதனைக் கீழே இறக்கிவிடுங்கள்" என, வீரர்கள் அவனைத் தோளைவிட்டிறக்கிச் செத்த பிணம்போல் கீழே கிடத்தினார்கள். இதைக் கண்ட ஜடாவல்லவர் பிரமித்து நின்றுவிட்டார். தேக்கன் வண்டியிலிருந்து கீழே இறங்கி ஓடிவந்தான். மாதர்களிருவரும ஐயோவென்றலறிப் பல்லக்கிலிருந்து கீழே இறங்கத் தொடங்கினர். வீரசிங்கன் அம்மனிதனை உற்றுப் பார்த்து மூச்சு மாத்திரம் ஓடிக்கொண்டிருக்கக்கண்டு, இறக்கவில்லையெனத் தெளிந்து, அவனையும் பல்லக்கில் தூக்கிப்போடும்படி உத்தரவளித்து, மாதர்களுக்குத் தைரியஞ் சொல்லிவிட்டு, ஜடாவல்லவரைப் பார்த்து "சுவாமி! மூச்சிருக்கிறது; இவன் பிழைத்துக்கொள்வான்; நேரமாயிற்று; நீங்கள் வண்டியிலேறி உட்காருங்கள்; நான் போய் வருகிறேன்" என்று அவரிடம் விடைகொண்டு பல்லக்கை நடத்தச்சொல்லித் தான் கால்நடையாகவே சென்றான். ஜடாவல்லவரும் "ஆ! இன்றைப்போது இப்படியா கழியவேண்டும்!" என்று எண்ணி, ஜகதீசன் திருவடியைத் தியானம் செய்துகொண்டு வண்டியிலேறினர். தேக்கனும் உடனே வண்டியிலேறி உட்கார்ந்து வண்டியை நடத்தினன். பொழுது விடியும் நேரமாய் விட்டமையால் வீரசிங்கன் பல்லக்கை வெகு வேகமாய் நடத்திக்கொண்டுபோய் விட்டான். பின்பு கால்மணி நேரத்திற்கெல்லாம் வண்டி ஸர்க்கார் ரோட்டிற்கு வந்து சேர்ந்தது. இங்கு வந்ததும் தேக்கன் வண்டியைத் திருப்பி நாமக்கல் மார்க்கத்தில் ஓட்டிக்கொண்டு போனன். இருள் பிரியும்வரையில் வீரர்களும் துணைபோய்ப் பின் திரும்பினார்கள். வண்டி நாமக்கல் வண்டிப்பேட்டை போய்ச் சேர்ந்தபொழுது விடிந்து எட்டு மணியாய்விட்டது.



# அத்தியாயம்—19

"ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப—தூக்கின்
மெலியது மேன்மே லெழுச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு".

கண்ணாயிரம் பிள்ளை என்பவர் தன்னேரில்லாத தனவந்தர்; இரப்போர்க்கு இல்லையென்னாதீயு மில்லற நெறியினர்; மறந்தும் பொய்சொல்லத் தெரியாத மகாநுபாவர்; தமது முயற்சியினாலும் உழைப்பினாலும் தீவினைவிட்டுப் பொருளீட்டும் குணசீலர்; இவரது பெருமையை யறியாதார் சிலரே யாவர். இவர் இன்று தமது கிருகத்தில் திண்ணையில் உட்கார்ந்து, முன்னரே வந்துகாத்துக்கொண்டிருக்கும் வேலையாட்களுக்கு இன்னான் இன்ன வேலை செய்யவேண்டுமெனக் கட்டளையிட்டுக்கொண் டிருக்கின்றார். பொழுதுபுலர்ந்து எட்டுமணிக்கு மேலாகின்றது. காபி குடிக்கும் வழக்கம் இவர்க்கில்லையாகையால், அக்குடியர் காலையில் எழுந்ததும் காபிவெறி பிடித்துத் தங்கள் வயிற்றுக்குச் சமாதானஞ் செய்துகொண்டிருப்பதுபோ லிராமல், தம் வேலையைச் சரிவரக் கவனிப்பதில் ஊக்கத்துடனிருக்கின்றார். இவர் முகத்தில் தெளிவும் சுறுசுறுப்பும் திருமகள் விலாசமும் ஜொலிக்கின்றன.

இந்த உத்தமகுண சீலரிடம், தேக்கனை வண்டிப்பேட்டையில் விட்டுப் பிரிந்த ஜடாவல்லவர் இச்சமயம் வந்து சேர்ந்தார். அவரைக்கண்டதும் கண்ணாயிரம் பிள்ளை "சுவாமி வரவேண்டும்" என்று கைகுவித்துக் கும்பிட்டுப் "பேருக்குக் கண்ணாயிரமாக இருக்கின்றேனே யொழிய உண்மையில் கண்ணாயிரமுடையவனாயிருக்கவில்லையே! இத்தருணம் தமது தரிசன உற்சவங்காண இவ்விரண்டு கண் போதுமோ?" என்று கூறி ஆசனத்திருக்க உபசரித்து க்ஷேமம் விசாரித்து, "சுவாமிகள் இன்று இங்கெழுந்தருளியதன் நோக்கமென்ன?" என்று கேட்க, ஜடாவல்லவர் தாம் கருதி வந்ததைத் தெரிவித்தார். கண்ணாயிரம் பிள்ளை "ஸந்தோஷம்! இன்றே ஸுதினம்! இன்றே என் பிறவி பயனடைந்தது. நல்ல சமயத்துக்கு உதவும்படியான பாக்யமென்னிடத்திருப்பது பற்றி என் மனம் மகிழ்கின்றது" என்று உபசார வார்த்தைகள் கூறி வெகுநேரம் வரையில் அவரிடம்

பலபல பேச்சுக்கள் பேசிக்கொண்டிருந்து அப்பால், நிலம் விலைக்குக் கொண்டதில் தாம் கொடுக்கவேண்டிய ரூபா ஐந்நூறு தந்து 'நல்லோர் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகு' மென்பதற்கிணங்க இன்னும் ஐந்நூறு ரூபா தாமும் அவர் தந்தையுமிருந்த நட்பிற்கறிகுறியாய்த் தருவதாக வாக்களித்து வெகு மரியாதையுட னனுப்பினார். பின் ஜடாவல்லவர், தமது நண்பரொருவர் வீட்டிலே போஜனஞ் செய்துவிட்டு வண்டிப்பேட்டைக்கு வந்தார்.

இப்பொழுது தேக்கனும் போஜனமுண்டு ஜடாவல்லவர் வருகைக்கு எதிர்பார்த்திருந்தான். பின் சற்று நேரத்திற்கெல்லாம் சுமார் ஐம்பது வண்டிகள் வரையில் அப்பேட்டையை விட்டுப் புறப்பட்டன. தேக்கனும் தன் வண்டியைக் கட்டி ஜடாவல்லவரதில் ஏறிக்கொண்டதும் வண்டிகளோடு வண்டியாய்ச் சேர்த்து ஓட்டினான்.

பின்னர் வண்டி, சுமார் பதினொரு மணிக்கு, நேற்று இவர்களுக்கும் வீரசிங்கனுக்கும் சம்பாஷணை நடந்த காட்டுப்பாதைக்குச் சமீபமாய் வந்து சேர்ந்தது. தேக்கன் வண்டியை நிறுத்தினான். பின் மற்ற வண்டிக்காரர்களெல்லாம் உனக்கு முன் எனக்கு முன் என்று வண்டியை ஓட்டிக்கொண்டு போய்விட்டனர். பின் இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் ரோட்டிற்கு வடபுறமிருந்து பத்து வீரர்களோடு ஞரேலென வீரசிங்கன் வண்டிக்கு முன்னே வந்து தேக்கனைப் பார்த்து "அப்பா தேக்கா! வா, ஐயர் வந்திருக்கின்றாரோ இல்லையோ?" என்று கேட்டான். இதைக் கேட்ட ஜடாவல்லவர் கீழேயிறங்கி, "இதோ இருக்கின்றேன்; நீ சொன்னபடியே வந்து சேர்ந்தோம்" என்று எதிரில் வந்தார். வீரசிங்கன் சுவாமியென்று கூறி, கையெடுத்துக் கும்பிட்டு, "அடியேன் காத்திருக்கின்றேன். வாருங்கள்! வாருங்கள்! தங்கள் காரியம் அநுகூலமாயிற்றா?" என்று கேட்டான். ஜடாவல்லவர் "அப்பா அநுகூலமாயிற்று. மங்கையர்க்கரசி முதலானவர்கள் சௌக்யமாயிருக்கிறார்களா?" என, வீரசிங்கன் "சுவாமி! அவர்கள் மூவரும் சௌக்யமாயிருக்கிறார்கள். இதோ பல்லக்குக் கொண்டுவந்திருக்கிறேன்; தாங்களும் தேக்கனும் அதில் ஏறிக்கொண்டு என் வளவுக்கு வரவேண்டும்; விடியற்காலம் மூன்று மணிக்கு இவ்விடமிருந்து புறப்பட்டுப் போகலாம்; என் பேச்சைத் தட்டக்கூடாது; உங்கள் வண்டியை மரத்தடியில் நிறுத்துங்கள்.

ஒரு துரும்பு அதிலிருந்து போகவொட்டாமல் பார்த்துக் கொள்ள நால்வரைக் காவல் வைக்கிறேன் ; புறப்படுங்கள்! தாமதஞ்செய்ய வேண்டாம்!'' என்று சொல்லிப் பக்கத்தில் நின்ற வீரர்களைப் பார்த்தான். இச்சமயத்தில் புகை வண்டி ஊதுவது போன்ற ஒரு பெருஞ் சப்தம் ரோட்டுப் பக்கமிருந்து கேட்டது. இச்சப்தம் கேட்டதும் வீரசிங்கன் வீரர்கள் பக்கம் திரும்பி, "இவ்விடம் பத்துப்பேரிருங்கள் ; மற்றவர் விரைவாக ஓடுங்கள் ; ஆபத்துக்குறியைக் காட்டும் சப்தம் கிழக்குப் பக்கமிருந்து வருகிறது. இதோ நானும் வந்துவிட்டேன்'' என்று கூறினான். வீரர்களில் பத்துப்பேர் தவிர மற்றவர்கள் அக்கணமே மாயமாய் ஓடினர். வீரசிங்கன் "சுவாமி! இச்சப்தத்தால் வெளியே போயிருக்கும் என் கூட்டத்தாருக்கு ஏதோ ஆபத்து நேரிட்டிருப்பதாகத் தெரிகிறது. நான் சீக்கிரம் போகவேண்டும். தாங்களும் தேக்கனும் மங்கையர்க்கரசி முதலியவர்களோடு இன்றைக்கு இருபத்தைந்தாவது நாளிரவு இந்த ஸர்க்கார் ரோட்டிற்கு வாருங்கள். நான் உங்களை இங்கு வந்திருந்து என்னிருப்பிடம் அழைத்துச் செல்கின்றேன். அன்று பௌர்ணமியாகையால் எங்கள் பொக்கிஷம் திறக்கப்படும். அன்று வெளியே போகும் வேலை வைத்துக்கொள்வது கிடையாது. அப்பொழுது நான் என் சம்பந்தமான விஷயங்களும் தெரிவிக்கிறேன். எல்லோர்க்கும் என்னாலான உதவியைச் செய்து உங்களை ஸந்தோஷப்படுத்துகின்றேன் ; அன்று வழியில் ஓர் ஆபத்தும் நேரிடாவாறு தகுந்த ஏற்பாடு செய்கின்றேன். மங்கையர்க்கரசி முதலியவர்களையும் காலையில் தொட்டியத்திற்கு அனுப்பி விடுகின்றேன். தவறாமல் வரவேண்டும். இப்பொழுது பேச நேரமில்லை. மன்னிக்கவேண்டும்'' என்றான். ஜடாவல்லவர் "ஆகா! அவ்வாறே வருகிறோம்'' என்று கூறிப் பிரிந்து, புறப்பட்டு மறுநாட் காலையில் எட்டு மணிக்கு வீடு வந்து சேர்ந்தார். தேக்கனைப் பார்த்து, "அப்பா! வீட்டுக்குப்போய்வா. இச்சங்கதியை ஒருவரோடுஞ் சொல்லாதே'' என்று கூறியனுப்பினார் ; தாம் நாமக்கல் போய் வந்ததைத் திரிபுரசுந்தரியிடஞ் சொல்லி, கொண்டுவந்த ரூபாவைக் கையில் கொடுத்து "விவாகச் செலவுக்ிது. இன்னும் ரூபா ஐந்நூறு கண்ணுயிரம் பிள்ளை இரண்டு நாட்களில் கொடுத்தனுப்புவார்'' என்று சொன்னார். அவர் கொடுத்த ரூபாவைத் திரிபுரசுந்தரி இரண்டு கரங்களாலும்

வாங்கிக் கண்களி லொற்றிக்கொண்டு குசேலர் கிருஷ்ணபகவான் வீட்டுக்குப் போய் வந்தது கண்டு மகிழ்ந்த அவர் மனைவியார் போல் மகிழ்வுற்றாள்.



## அத்தியாயம்—20

"தீதறு செல்வம் பெற்றுஞ் சிலர்பொசிப் புறுதி கூறார்
கோதறப் புசிப்போ மென்பார் கூர்வர்நல் குரவுஞ் சேர்வர்
ஆதலாற் புருடன் றன்னு லறிந்துசெய் செயலொன் றில்லை
யேதமின் முயற்சி யெல்லா மிறைவன்றன் முயற்சி யாமால்"

வாழ்வு சில சமயம் மகாபுத்திமானையும் மயக்கி இறுமாப் படையும்படி செய்துவிடுகின்றது. இறுமாப்பினால் அவன் தன் தருமத்தை மறந்து கெடுகின்றான். இது மகா புத்திமான்களையே இப்படிச் செய்யுமெனில் மதியிலரைப்பற்றிக் கேட்க வேண்டுமோ—இதுபோலத் தாழ்வு எப்படிப்பட்ட புத்திமானுடைய மனத்தையுங் கலக்கி நிலைகெடும்படி செய்துவிடுகின்றது. அதனால் அவன் தன் தருமத்தை மறந்து கெடுகின்றான். கருதின், வாழ்விலும் தாழ்வே சிறந்ததெனத் தோன்றும். இப்படிப்பட்ட வாழ்வும் தாழ்வும் உலகவியல் புணர்ந்து "உலகத்தை ஆட்டுவிப்பவன் ஒருவனுண்டு; அவனன்றி ஒன்றுமில்லை" என்னும் ஞானங் கைவரப் பெற்றவரை ஒன்றுஞ் செய்வதில்லை. அவர்களிடம் அவை கற்பாறையின் மீது தாக்குண்ட சிறு பந்துகள் போலாகின்றன.

ஜடாவல்லவர், பெரியோர்களுடைய அநுக்ரகத்தினாலேயும் கல்வி கேள்விகளினாலேயும் அப்படிப்பட்ட அறிவு தம்முள் விளங்கும் பேறு பெற்றவரானதினால், இக்காலத்திலும் பெருங்காற்றிற்கும் அசையாத ஒரு மரக்கலம்போல ஸம்ஸாரமாகிய ஸாகரத்திலே உலாவிவந்தார். இவர் நாமக்கல் போய் வீடு வந்து சேர்ந்ததும் தம்மாணவனொருவனைத் தஞ்சாவூருக்கனுப்பி மங்களவல்லியை அழைத்து வரும்படி செய்தார். அந்த மாணவன் மூலமாகவே முகூர்த்த நிச்சயமும் செய்விக்கப்பட்டது. முகூர்த்தம் இன்னும் நான்கு நாள்தானிருக்கின்றது. இப்படி நெருங்கியிருக்கையில் ஒருநாள் மங்களவல்லி 'அப்பா! எனக்கு அத்தை ஆத்தில் ஒரு குறைவுமில்லை. ஆனால், அந்த வீட்டிலிருக்க மாத்

திரம் எனக்குப் பிடிக்கவில்லை. என்னவோ அத்தை தன்னோடு தஞ்சாவூருக்கு வரும்படி மிகப் பிரியமா யழைத்தாளே யென்று போய்விட்டேன். அம்ம! அம்ம! நான் அத்தை வீட்டிலிருந்த இந்த இரண்டு வாரத்தையும் இரண்டு யுகமாய்க் கழித்தேன்: எப்பொழுது ஊருக்குப் போவோமென்றிருந்தேன்" என்றாள். ஜடாவல்லவர், "ஏன் அம்மா அப்படிச் சொல்லுகிறாய்?' என்று கேட்டார்.

மங்களவல்லி :—அப்பா நானதைச் சொல்லட்டும். அத்தை தன் கொழுந்தனை பி. ஏ. படித்தவனென்றும், மகா புத்திசாலி யென்றும் மிக அழகுடையவனென்றும் சொன்னா ளல்லவா? அவன் முகத்தைப் பார்க்க எனக்குப் பிடிக்கவே இல்லை. தண்டனை யடைந்து சிறையிலிருந்தவன் மாதிரி அவன் தன் தலையை மொட்டை யடித்துக் கொண்டிருக்கிறான். இந்த லக்ஷணத்திலே கண்ணுந்தெரியாது போலிருக்கிறது! சோற்று வேளை தவிர மற்ற வேளைகளில் கண்ணாடியை மூக்கைவிட்டு எடுப்பதே இல்லை. கண்ணாடி இல்லாவிட்டால் அவனுக்குப் பார்வை மட்டாயிருக்குபோலிருக்கிறது; எதைப் பார்த்தாலும் கண்ணுக்கருகில் நான்கு விரற்கடை தூரத்தில் வைத்துக்கொண்டு தான் பார்க்கின்றான்; தவிர வெளியே போய்வந்த நேரம் போக மற்ற நேரங்களில் தரையோடு தரையாய்க் கிடக்கும் ஒருசாய்ந்த நாற்காலியில், கையில் கண்ணுக்குத் தெரியாத பொடி யெழுத்துள்ள புஸ்தகமொன்றை வைத்துக் கொண்டு படித்துக் கொண்டே யிருக்கின்றான். தேகத்தில் அஸ்திதானிருக்கிறது! பெருவியாதி பிடித்தவன்போலத் துரும்பாயிருக்கின்றான்! தன் சிநேகிதன் எவனுடனாவது பேசும்போது சில வேளை சீட்டியடித்துக்கொண்டும், சில வேளை கைவிரல்களின் நகங்களைக் கடித்துத் துப்பிக்கொண்டு மிருக்கின்றான்! கைவிரலில் அரை வாசி நகந் தானிருக்கிறது. 'நகத்தில் விஷமுண்டு; அதனால் ஒன்றையுந் தீண்டுதல் கூடாது', என்று எனக்குப் பல முறை நீங்கள் சொல்லியிருக்கிறீர்களே! அப்பா! பி. எ. படித்தவர்களுக்கு இது கூடவா தெரியாமற் போகும்? எச்சல் தீட்டென்பது எள்ளளவு மில்லை அவனிடம். காலமே எட்டு மணிக்கு அவன் படுக்கையை விட்டெழுந்திருக்கிறான்; எழுந்ததும் பல்தேய்த்து முகங்கழுவு வானோ மாட்டானோ தெரியாது! 'மன்னீ! காபி கொண்டுவா' என்கின்றான். அதற்கேற்றாற்போல அத்தை காபியையும் உப்பு

மாவையும் தயார்செய்து வைத்துக் காத்துக்கொண்டிருக்கிறாள்; அவன் கேட்டதும் கொண்டுபோய் வைக்கிறாள். உப்புமா ஒரு எலுமிச்சம்பழம் அளவுதானிருக்கும். குசினிக்காரன் மாதிரி திரேதாயுகத்தில் நீரைக்கண்ட ஒரு சட்டையோடு உட்கார்ந்து கொண்டு அதை அவன் அரைமணி நேரம் தின்கின்றான்; காப்பியை நமது ஜானகி அத்தை புருஷன்மாதிரி சூப்பித்தான் குடிக்கிறான். ஜானகி அத்தை புருஷனுக்கு மீசை இருக்கிறது! இவனுக்கு மீசையில்லை! மற்றப்படி எல்லாம் அவனேதான் இவன். நெற்றிக்கு வைத்துக் கொள்வதே கிடையாது. ஆனால் தினமும் ஒருமணி நேரம் சோப்புத் தேய்த்து ஸ்நானம் செய்கிறான்; ஸ்நானம் செய்ததும் நாய் தண்ணீரில் விழுந்து குளித்து, உடனே கரையில் வந்து தரையிற்கிடந்து புரண்டு பின்பெழுந்து உதறிக் கொள்வதுபோலத் தான் முதலிற் கட்டியிருந்த விழுப்புத் துணியையே உதறி உடுத்துக்கொள்ளுகின்றான். ஸந்த்யாவந்தனம் கிடையவே கிடையாது. தவறியொருவேளை பண்ணினால் நாய் நக்குவதுபோல ஜலத்தை நக்கிவிட்டு அவன் எழுந்துவிடுகின்றான். நானெப்படி இனி என் வாழ்நாளை இவனோடிருந்து கழிப்பேன்? கடைசியில் இன்னொன்று சொல்ல மறந்துவிட்டேனே! அதை நினைத்தால் என்மனம் நடுங்குகின்றது! மூன்றுநாளைக் கொரு தரம் கண்ணாடியைக் கையில் வைத்துக்கொண்டு க்ஷவரம் தானே செய்து கொள்கின்றான். எப்பொழுது நினைப்பானோ அப்பொழுதெல்லாம் க்ஷவரத்துக்கு ஆரம்பித்து விடுகிறான். அதற்கு இந்தவேளை யென்பதுகூடக் கிடையாது. இந்த இடமென்பது கூடக்கிடையாது. இப்படிப்பட்ட சிங்காரங்கள் பல. நானென்னென்று சொல்வேன்; சொல்வதிலேதான் என்னபயன்? நீங்கள் கண்ணாலே பாராமல் இப்படி மோசம் போய் விட்டீர்களே! சகல சாஸ்திர விற்பந்நராகிய தங்களுக்குப் பெண்ணாய்ப் பிறந்து ஆசாரஹீனனுக்கு வாழ்க்கைப்பட நேரிட்டதே!''—என்று சொல்லிக் கண்களிலிருந்து மழைத்தாரைபோல நீரைச் சொரிந்து அவரருகிலிருந்த நாற்காலியிலுட்கார்ந்தாள்.

இவ்வாறு மங்களவல்லி வருந்துவதைப் பார்த்ததும் ஜடாவல்லவர்க்கும் திரிபுரசுந்தரிக்கும் மனத்தில் துக்கம் அளவு கடந்து பெருகியது. அவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கின்றார்கள்; இன்ன செய்வதெனத் தோன்றாமல் கையைப் பிசைந்து கொள்கிறார்கள்; ஒன்றும் பேச வழியில்லாமல் விழிக்

கிறார்கள்; தங்கள் துக்கத்தை வெளியிடமாட்டாமல் தவிக்கிறார்கள்; கண்ணாலே பாராமல் வரனை நிச்சயஞ்செய்த தங்கள் மூடத்தனத்தைச் சிந்தித்துக் கலங்குகிறார்கள்; ஸ்ரீமதியைப் பாவி கெடுத்தாளெனச் சபிக்கிறார்கள்; முகூர்த்தத்தை நிறுத்தி விடுவோமென நினைக்கிறார்கள்; முகூர்த்தத்தை நிறுத்த முகாந்தரம் யாது கூறுவதென்று யோசிக்கின்றார்கள்—இப்படியிருந்து, கடைசியில் முகூர்த்தத்தை நிறுத்துவது மானக்கேடென நினைத்து இருவரும் "அம்மா! மங்களவல்லி! நீ சொல்வதெல்லாம் சரி! சிறுபிள்ளையானதாலும் பிறந்தது முதல் நாஸ்திகர் பழக்கமே அதிகமாய் உடையவனானதாலும் அப்படி யிருக்கின்றான். கல்யாணமாய் நம்மோடு பழகினால் நல்ல வழிக்கு வந்துவிடுவான். உனக்கொரு குறைவுமிராது; கவலைப்படாதே!" என்று தேறுதல் கூறினார்கள். அன்றிரவு முழுதும் ஒருவரேனும் நித்திரைபோகாமல் மனக்குழப்பத்தோடிருந்து மறுகினார்கள்.

பொழுது புலர்ந்தது. ஜடாவல்லவர்க்கு இப்பொழுது இன்ன செய்வதென்று தோன்றவில்லை. மனச்சஞ்சலமும் நீங்கவில்லை. ஆயினும், "இனி இதைப்பற்றிச் சிந்திப்பதிற் பயனில்லை, முகூர்த்தத்தை நிறுத்துவதும் கூடாதகாரியம்" என்று நினைத்து அப்பொழுதே பந்துமித்ரர்களுக்குக் கடிதமெழுதிவிட்டுத் தமது வீட்டு வீதியில் பந்தல் போடும்படிக்கும் திட்டப்படுத்தினார்; சம்பந்திகள் வந்து தங்குவதற்குத் தம் வீட்டுக்குப் பத்துவீட்டுக்கப்பால் ஒரு வீட்டைத் திட்டப்படுத்தி அங்கேயும் பந்தற்போட்டு அலங்கரிக்கும்படி செய்தார்; அன்று பகல் ரயிலில் புறப்பட்டு உள்ளூரில் கிடைக்காத வஸ்திர முதலியவைகள் வாங்குவதற்குத் திருச்சிக்குப் போய்விட்டார். தஞ்சாவூர் சென்றிருந்த ராமாமிருதமும் சிவசுவாமி ஐயரும் இன்று பிள்ளையார் புத்தூருக்கு வந்து செல்லமையர் வீட்டிலிறங்கினார்கள்.

மறுநாட்காலையில் ஜடாவல்லவர் சாமான்களோடு திரிசிரபுரத்திலிருந்து பிள்ளையார் புத்தூர்வந்து வீட்டிற்குள் நுழைந்தார். அப்பொழுது நாமக்கல் கண்ணாயிரம் பிள்ளை கொடுத்தனுப்பியதாக ரூபா ஐந்நூறு ஒரு மனிதன் கொண்டுவந்து கொடுத்தான். ஜடாவல்லவர் அதை யெண்ணிக்கூடப்பாராமல், திரிபுரசுந்தரியிடங் கொடுத்துவிட்டு, "திரிபுரசுந்தரி! அன்றைய தினம், சுப்புப்பாட்டி கிணற்றிலே தன் மருமகளால் தள்ளப்பட்டிறந்ததை மறைத்து மாரடைப்புக்கண் டிறந்ததாகச் ஸர்க்கா

ருக்கு எழுதியனுப்பினேனல்லவா? அதனாலே நமக்கு வந்தது சங்கடம்! இப்பொழுது போலீஸ் விசாரணையாகின்றதாம் ராமுவையன் வீட்டில்! அவர்கள், என் வருகைக்கெதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்களாம். வழியிலே தலையாரி வந்து சொன்னான்; நான்போய் விரைவிலே வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டார். திரிபுரசுந்தரி "தாட்சண்யத்தினாலே வந்த கேடு இது!" என்றெண்ணி, ஈசன் திருவடியைத் தியானஞ் செய்தாள். புறப்பட்ட ஜடாவல்லவர் சிறிது நேரத்திற்கெல்லாம் ராமுவையன் வீட்டுக்குப்போய்ப் போலீஸாரைக் கண்டார்.

ஹெட் கான்ஸ்டேபில் ஜடாவல்லவரைப் பார்த்து, "சுவாமி ரண்டி, கொலு வொச்சிந்தி" என்று தெலுங்கிற் கூறிக் கையெடுத்துக் கும்பிட்டுத் "தாங்கள் நேற்றையதினம் ஊரிலில்லை போலிருக்கிறது?" என்றார்.

ஜடா:—ஆமாம் ஊரிலில்லை, இப்பொழுதுதான் வருகிறேன்,

ஹெட்:—இந்த வழக்கைப்பற்றி ஏன் எங்களுக்கு நீர் ரிபோர்ட் செய்யவில்லை? ஜனனமரணக்கணக்கில் என்ன எழுதியனுப்பினீர்?

ஜடா:—திடீரென்று மாரடைப்புக்கண்டு இறந்ததாக எழுதியிருக்கின்றேன்.

ஹெட்:—நீர் இதைப்பற்றித் தீர விசாரித்தீரா?

ஜடா:—திடீரென்று மரணமுண்டாயிற்றென்றால் அதற்கென்ன விசாரணை யிருக்கின்றது?

ஹெட்:—நீர் அன்று ஊரிலில்லை யென்றல்லவா கேள்விப்பட்டேன்?

ஜடா.—ஆம்;

ஹெட்:—நீர் ஊரிலில்லாதபோது உமக்கு எப்படி நடந்த சமாசாரந் தெரிந்தது? தவிர நீர் ரஜாவில்லாமல் ஊருக்குப் போனீர் போலிருக்கிறது. ஊரிலில்லாத காலத்தில் ஒரு மரணம் நேர்ந்ததென்றால் அதற்குக் காரண மென்னவென்று தீர விசாரிக்க வேண்டாமா?

ஜடா:—நான் ரஜாவெடுத்துக்கொண்டு போகவில்லை. நான் ஊரிலிருந்து வந்ததும் கிழவி மாரடைப்புக்கண் டிறந்தாளென்று தலையாரிசொல்ல எனக்குத் தெரியவந்தது. அப்படியே இறந்தவளின் புத்திரர்களாகிய ராமுவையரும், நச்சுவையரும் சொன்னார்கள்,

ஹெட் :—சரி நீர் நில்லும்—என்று சொல்லி, ராமுவையன் நச்சுவையன் என்னும் இரண்டுபேரையும் குறுக்கு விசாரணை செய்தார். ராமுவையனுகட்டும் அவன் தம்பி நச்சுவையனுகட்டும் வாய்ப்பேச்சுப் பேசுவதில் சமர்த்தர்களே தவிர இப்படிப் பட்ட சந்தர்ப்பத்தில் ஒருதடவை சொன்னதை மொருதடவை சொல்லாமல் குளறிவழியும் கோழை மனதுடையவர்கள். மேலும், அவ்வூரார்க்கே போலீஸாரைக் கண்டால் புலியைக் கண்டமாதிரி துடைநடுக்கமுண்டாகும். கேட்கவேண்டுமா இச் சந்தர்ப்பத்தில்! ஆகையால் போலீஸார் மிரட்டிலும் குறுக்கு விசாரணையிலும் பயந்து அவர்கள், தங்கள்தாயைத் தங்கள் மனைவிமார்களே கிணற்றில் தள்ளிக்கொன்று விட்டார்களென் றும் மாமிமருமகளுக்குள் ஏற்படும் பொறாமையினுல் இது நடந் தது என்றும் உண்மையைக்கூறினர். இரண்டொரு சாக்ஷிகளும் ருசுவாய்விட்டன. உடனே போலீஸார் ராமுவையன் நச்சுவை யன், அவர்கள் மனைவிமாரிருவர் ஆக நால்வரையும் கைதுசெய்து ஸர்க்கார் சாவடிக்குக் கொண்டுபோயினர்; ஜடாவல்லவர் பேரி லும் பரிதானம் வாங்கிக்கொண்டு வழக்கை மறைத்ததாகக் குற் றஞ்சாற்றினர் என்ன செய்வார் ஜடாவல்லவர்! கல்யாணமோ இன்றைக்கு மூன்றுவது நாள். கல்யாணத்திற்காக வேண்டிய வேலைகள் இன்னும் பலவுண்டு. ஆகவே ஜடாவல்லவர் இன்னது செய்வதென்று தோன்றுமல் மனங்கலங்கினுர்; தப்ப வழிகாணு மல் தவித்தார். இச்சமயத்தில் வெளியே போயிருந்த அவர் நண்பர் செல்லமையர் அங்கே வந்து சேர்ந்தார். அந்த ஹெட் டுக்கும் செல்லமையருக்கும் நிரம்ப விகிதமுண்டு........................ ......................அவர் ஹெட்டுக்கு வெகுதூரஞ் சொன்னுர். ஹெட் "தலைக்கு ரூபா ஐந்நூறு லஞ்சம் கொடுத்தாலொழியச் சம்மதியேன்" என, அவ்வாறே அவர் ராமுவையன் நச்சுவை யன் இவர்களிடமிருந்து ரூபா ஐந்நூறும் ஜடா வல்லவரிட மிருந்து ரூபா ஐந்நூறும் வாங்கித் தந்து வழக்கை அடக்கிவிடும் படி செய்தார். கண்ணுயிரம்பிள்ளை கொடுத்த ரூபாய் ஐந்நூறும் இந்த அவதிக்குக் கொடுக்கும்படி நேரவே ஜடாவல்லவர் ரூபா ஐந்நூறு கடன் கொடுக்கும்படி செல்லமையரைக் கேட்டார்.

செல்லமையர் எப்படியாவது இந்தக் கல்யாணத்தை நிறை வேறவொட்டாமற் செய்து ராமாமிருதத்திற்கு மங்களவல்லி யைக் கொடுக்கும்படி செய்ய வேண்டுமென்னும் எண்ணங்

கொண்டவராதலால், கையிற் பணமுடையவராக இருந்தும், "ஜடாவல்லவரே! என்னிடத்திலே பணமிருந்தால் நீர் இவ்வளவு தூரம் கேட்கவேண்டுமோ? எனக்குத் தெரியாதா?" என்றார்.

புத்திமான்கள் வதூவரர்களின் நல்ல பொருத்தத்தை விரும்புவது சகஜந்தானே?—

ஜடாவல்லவர் :—"இச்சமயத்தில் எனக்குச் செய்வதின்னதென்று தோன்றவில்லை. எல்லாவற்றையும் உம்மிடத் தொப்புவித்துவிட்டேன். நீர் கல்யாணத்தை நடத்தினாலும் நடத்தாவிட்டாலும் சரி. எனக்கு வீட்டுக்குப் போகப் பிரியமில்லை. இந்த முனிவீப் வேலையையும் இன்றே ராஜிநாமாக் கொடுத்து விடுகிறேன்" என்று சொல்லிச் செல்லமையர் பேச்சைக் கேளாமல், உடனே ராஜிநாமா எழுதித் தபாலில் அனுப்பி விட்டார்.

செல்லமையர் :—(ஜடாவல்லவரைப் பார்த்து) "ராமாமிருதம், சிவசுவாமி ஐயர் இருவரும் என் வீட்டிற்கு வந்திருக்கின்றார்கள். இந்த வரனை நிச்சயஞ் செய்துவிடலாம்; இவனே நமக்குத் தகுந்த வரன்; என்ன சொல்லுகிறீர்? சம்மத மென்பீராயின் பேசி முடிக்கின்றேன். இதில் செலவொன்றுமில்லை"—என்று கூறினார்.

ஜடாவல்லவர் :—"நீர் சொல்வது சரிதான். குழந்தை மங்களவல்லிக்கும் ஸ்ரீமதியின் கொழுந்தனைக் கல்யாணஞ் செய்துகொள்ளப் பிரியமில்லை. ஸ்ரீமதி வந்து ஒரே பிடிவாதமாய் நின்றமையால் சம்மதித்தேன். இனி ஸ்ரீமதிக்கு என்ன சொல்வேன்" என்று கூறி வருந்தினார்.

செல்லமையர் :—உமது தங்கை ஸ்ரீமதியினிடம் உண்மையைச் சொல்லும். வரதக்ஷிணையில்லாமல் சம்மதித்து வந்தால் முகூர்த்தம் நடக்கட்டும். இல்லாதவரையில் நீர் கவலைப்பட வேண்டாம். அதே லக்நத்தில் ராமாமிருதத்திற்குப் பாணிக்கிரகணம் செய்துகொடுத்து முகூர்த்தத்தை நடத்துவோம். பலபல யோசனை வேண்டாம். நான் சிவசுவாமி ஐயரையும், ராமாமிருதத்தையும் ஊருக்கனுப்பாமல் நிறுத்திவைக்கின்றேன்" என்றார்.

ஜடாவல்லவர்:—"அவ்வாறே செய்வோம்" எனச் சம்மதித்துப் பிரிந்து வீட்டுக்கு வந்து நடந்தவைகளைத் திரிபுரசுந்தரிக்கும் கூறி, ராமாமிருதத்துக்கே மங்களவல்லியைக் கொடுப்பு

தெனத் தீர்மானஞ் செய்தார். அங்கிருந்து அதை அப்போது கேட்டுக்கொண்டிருந்த மங்களவல்லியின் முகம் சூரியனைக் கண்ட தாமரைபோலப் பிரகாசித்தது. அவளுடைய இதயாரவிந்தத்தில் ராமாமிருதம் பெருகியது. அவள் என்ன செய்வாள்; அவனை எப்படித் துறப்பாள்; துறக்க இயலாமல் களைத்தாள்; எதையும் வெறுத்தாள்; ராமாமிருதமும் தானுமேயானாள்.

இப்பொழுது மணி நான்கடித்தது. ஜடாவல்லவர் செல்லமையர் வீட்டிற்குச் சிவசுவாமி ஐயரைப் பார்த்துப் பேசச் சென்றார். அவர் அங்குச் சென்றமர்ந்ததும் "ராமாமிருதத்தின் ஜாதகமிருக்கிறதா?" என்று சிவசுவாமி ஐயரைக் கேட்டார்.

சிவசுவாமி ஐயர்:—"அவனுக்கு ஜாதகமில்லை" என்றார்.

..........................................................................................................

ஜடாவல்லவர்:—(சற்று யோசித்து) "நக்ஷத்திரம் தெரியுமா?"—என்றார். அதற்கு ராமாமிருதம் "விசாகம்" என்று விடை தந்தான். ஜடாவல்லவர் அந்த நக்ஷத்திரத்தைக்கொண்டு மங்களவல்லிக்கும் ராமாமிருதத்துக்கும் பொருத்தம் பார்த்தார்; பார்த்தமட்டில் சரியாயிருந்தமையால், பின்கோத்திரம் விசாரித்தார். கோத்திரமும் சாத்திர விரோதமில்லாமலிருந்தது. பல சொல்வானேன். இரு பக்கத்தாருக்கும் மனமொத்திருந்தது. தெய்வ சகாயமும் சேர்ந்தது. இப்பொழுது எந்தப் பொருத்தம் இயையாமலிருக்கும்? ஆகவே முக்கியமான பொருத்தங்களெல்லாம் அமைந்திருந்தன. இது கண்டு ஜடாவல்லவர், "செல்லமையரே! தாங்கள் காலையில் என்னிடம் சொன்னபடி, வரதக்ஷிணை விஷயத்தில் ஏதாவது ஆக்ஷேபம் உண்டாகுமேயாயின் அதே முகூர்த்தத்தில் நமதிஷ்டப்படி செய்துவிடலாம்" என்றார். செல்லமையரும் "ஆகா! அப்படித்தான் செய்யவேண்டும். இதற்கு வேறு யோசனை வேண்டாம்" என்று கூற, ஜடாவல்லவர் "சரி! எனக்கு நேரமாகிறது. நான் போய்வருகின்றேன் என்று விடைபெற்றுக்கொண்டு வீட்டுக்குப் போய்விட்டார்.

இப்பொழுதுதான் ராமாமிருதத்தின் மனதில் மங்களவல்லி தன் மனைவியாவாளென்பதிற் சிறிது நம்பிக்கை உண்டாயிற்று. அவன் மனம் திருமண நாளையே நாடி நின்றது.



# அத்தியாயம்—21

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

அருளும் அன்பும் அகத்திலில்லாதவன் உலகத்திலே உயிர்ப் பிணமாகின்றான். அருளும் அன்புமுடையவன் என்னைப்போல் பிரகாசிக்கின்றான்—என்று காட்ட முன் வந்ததுபோல் விவாகத்துக்கு முதல் நாள் காலையில் சூரியன் குணதிசைக் கடலிலிருந் தெழுந்தான். அன்று அவன் அஸ்தமிப்பதற்குள், அநேகமாக உறவினரனைவரும் விவாகத்திற்காக வந்து சேர்ந்தனர். சூரியாஸ்தமனமாய் அரைமணி நேரத்திற்கெல்லாம் ஸ்ரீமதி, மாப்பிள்ளை, சீதாபதி ஐயர் முதலாயினோர் அவர் தம் பந்து மித்திரர்களுடன் சுமார் நாற்பதைம்பது ஜனங்கள் வரையில் பிள்ளையார் புத்தூர் வந்து அவ்வூர் பெருமாள் கோவிலிலிறங்கினார்கள். ஸ்ரீமதி மாத்திரம் கோவிலில் தங்காமல் நேரே ஜடாவல்லவர் வீட்டிற்கு வந்து சற்றுநேரம் பேசியிருந்துவிட்டு, "அண்ணா! நான் சொன்னபடி மாப்பிள்ளைக்குக் கடுக்கன் மோதிரம் பாத்திரம் எல்லாவற்றிற்கும் ஐந்நூறு ரூபா சேகரித்து வைத்திருக்கிறீர்களா? நான் கொண்டு வருகிறேனென்று சொன்ன ரூபா ஐந்நூறும் கொண்டுவந்திருக்கிறேன். இந்தாருங்கள்; இதையும் நீங்கள் வைத்திருக்கும் பணத்தையும் ஒரு தட்டில் வைத்துச் சந்தனம் தாம்பூலம் வெற்றிலை பாக்கு பழம் இவையெல்லாவற்றையு மெடுத்துக்கொள்ளுங்கள். சீக்கிரம் வர பூஜைபண்ணி மாப்பிள்ளையை விடுதிக்கு அழைத்துக்கொண்டு வர வேண்டும். அவர்கள் ஏன் கோவிலிலிருந்து இடமில்லாமல் அவஸ்தைப்பட வேண்டும்?" என்று கேட்டாள்.

ஜடாவல்லவர் ஸ்ரீமதியைத் தனியே யழைத்துக்கொண்டு போய், நேற்று நடந்ததைக்கூறி அதில் ரூபா செலவழிந்துபோய் விட்ட தென்றும் இன்னும் இருபது நாளிலெப்படியாவது ரூபா ஐந்நூறுக்கு அறுநூறாகத் தருகிறேனென்றுங் கூறினார்.

ஸ்ரீமதி! "அண்ணா! இதைவிட நீங்கள் என் கழுத்தை யறுத்துவிடலாம்! நானெப்படி என் கொழுந்தனிடம் இதைச் சொல்வேன். ரூபா ஆயிரம் இரண்டாயிரம் வரதக்ஷிணை கொடுக்

கிறேனென்று வந்துவிட்டுப்போன எத்தனையோபேரை எனக்காகத் தள்ளிவிட்டு, இதிலே சம்மதித்து வந்தவர்களாயிற்றே! அப்படியிருக்க, நானிந்தச் சமாசாரத்தைச் சொன்னால் நானும் உங்களோடு சேர்ந்துகொண்டு ஏதோ பித்தலாட்டம் செய்வதாக வன்றோ எண்ணி, என்னைப் பாவி கெடுத்தாள்; அவமானங் கொண்டுவந்து வைத்தாள் என்று சொல்லி, என் மொட்டைத் தலையை உருட்டுவார்கள்............இப்படிப் பேச்சுக்களை வாயோயாமல் அளந்து கொட்டி ஜடாவல்லவராகிய கடலைக் கலக்கிவிட்டு ஸ்ரீமதி தன் கொழுந்தனிடம் போய்ச் செய்தி சொன்னாள்.

வரதக்ஷிணை யில்லையென்ற பேச்சைக்கேட்டதும் பிரளயகால ருத்ரனைப்போல அவர் சினங்கொண்டு ஸ்ரீமதிமேல்! வேட்டை நாயாய்ச்சீறி விழுந்தார்!—பணமல்லவா? மாப்பிள்ளை கோபாலன் நிலத்திலே விழுந்த நெல்லிக்காய்போலக் குதித்து ஸ்ரீமதியை வெறியன்போல விழித்துப்பார்த்தான். ஏதோ கடன் கொடுத்திருந்த பணம் கிடைக்கத் தவறியதுபோல் நினைத்து ஸீதாபதி ஐயர் ஸ்ரீமதியைப்பார்த்து, "தாம்பும் அறுதல் தோண்டியும் ஓட்டை என்பதுபோல் நீயும் அறுத்த விதவை! உன் தமையனும் வறுமைக்கிருப்பிடம்! இப்படியிருக்கும்போது எப்படிக் காரியம் முடியும்? அண்ணா அப்படிச் செய்துவிடுவார் இப்படிச் செய்துவிடுவார் என்று சொன்னாயே! நேற்றிரவு கேட்கும் போதும் பணம் வந்துவிடும் என்று சொன்னாயே! வந்த வரன்களையெல்லாம்வேண்டாமென்று கூறினாயே" என்று நாய்ப் பட்டங் கட்டிவிட்டு, "பேசியபடி காசு வந்தாலொழிய நாங்கள் சம்மதியோம். எங்களுக்குப் பெண் கிடைக்காமல் இவ்விடம் வரவில்லை. ஆயிரம்பேர் வரதக்ஷிணையோடு, பெண் கொடுக்கக் காத்திருக்கிறார்கள். சீ! இது கெட்டதே! அப்பொழுதே எனக்குத் தெரியும் இந்த ஜடாவல்லவன் தரித்திரன் வரதக்ஷிணை கொடுக்க வழியில்லாதவன் என்று. எல்லாம் உனக்காகத்தான் தட்டாமல் ஒப்புக்கொண்டுவந்தேன். பேசுவதொருவிதம் நடப்பதொரு விதமா? சீ! பெண்கள் பேச்சைக் கேட்டதே பிசகு. நீயேதான் இதற்குக் காரணம். நீ எங்களோடு வந்தால் வா இல்லாவிட்டால் உன் அண்ணா வீட்டிலேயே யிரு. எப்பொழுது உன் அண்ணா அயோக்கியன் இவ்வாறு செய்தானோ இனிப் பேசியபடி ரூபா ஆயிரம் வந்தாலும் இந்தப் பெண்ணும் வேண்டாம்! இந்

தத் தரித்திர ஸம்பந்தமும் வேண்டாம்! வைதிகனுக்குப் படிப்பின் யோக்கியதை எப்படித் தெரியும்? நீ எப்படியாவது போ! உன் பேச்சுக் கேட்டு நாங்கள் அவமானப்பட்டது போதும்'' என்று படபடப்போடு தெருச்சிரிக்கும்படி கூச்சலிட்டுத் தம்மோடு வந்தவர்களையழைத்துக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டார்.

பிறகு ஸ்ரீமதி ஜடாவல்லவரிடம் வந்து இன்னொரு முறை வாயில் வந்தபடியெல்லாம் முறையிட்டுப் பெருங்குரல் பாய்ச்சியழுதாள். ஜடாவல்லவர், "ஐயோ! இது பிரளயமாய்ப்போய் விட்டதே! எருதின் நோய் காக்கைக்குத் தெரியுமா? என்பது போலாயிற்றே!'' என்றெண்ணியஞ்சினார். சமாதானஞ்சொல்லி ஸ்ரீமதியைத் தடுப்பதெப்படியெனத் திகைத்தார்;.................. பிறகு கொஞ்சநேரம் பொறுத்து, பசியினால் உடம்பு மெலிந்து உயிரை யிழக்கும்படி நேரிடினும் பொறுமையையும் மனவுறுதியையும் கைசோரவிடலாகாது என்னும் போதனையை மறந்தோமே யென்றுணர்ந்து, பொறுமையடைந்து, ஸ்ரீமதியைப் பார்த்து உண்மையைக் கூறித் தம்மிடம் வஞ்சனை யில்லையென்பதை அவள் உணரும்படி செய்து ராமாமிருதத்தைப்பற்றிக் கூறினார்.

ஸ்ரீமதி யதைக் கேட்டதும், பெருங்கோபங்கொண்டு, "அண்ணா! நீங்களிப்படி வேறொரு பிள்ளையை வரவழைத்து வைத்துக்கொண்டு என்னை மோசஞ் செய்யலாமா? இது உங்களுக்குத் தருமமா?'' என்று கூறிப் பழையபடி முறையிட்டழத் தொடங்கினாள்; தன் கொழுந்தனுக்குந் தனக்கும் பகைநேர்ந்தமைக்கு வருந்தினாள். அவள் வருந்துவதைப் பார்த்த ஜடாவல்லவர், "அம்மா! ஸ்ரீமதி! நீ வருந்தாதே; நீ இன்று முதற்கொண்டு இங்கேயே யிருந்துவிடு. நான் காப்பாற்றுகிறேன்: தஞ்சாவூர் போகவேண்டாம்'' என்று சொல்லித் தேற்றினார். ஸ்ரீமதியின் கோபம் மங்களவல்லிக்கு மகிழ்ச்சியைத் தந்தது. திரிபுரசுந்தரியும் குழந்தையின் மனவருத்தம் நீங்கிற்றே யெனக் குதூகலங்கொண்டாள். ஆ! ஜகதீசன் செயல் இப்படியிருக்கும் போது நமது பிரயத்தனம் எப்படி நிறைவேறுமென்றெண்ணி ஜடாவல்லவரும் செல்லமையருக்குச் சொல்லியனுப்பி முகூர்த்தம் நடத்துவதென நிச்சயஞ் செய்தார்.

ஆதித்தனும் தனது கிரணங்களை வீசிக்கொண்டு மங்களவல்லியின் மணக்கோலங் காணக் குணதிசையினுதித்துத் தன்

வரவைக் காட்டினான். செல்லமையர் இச்செய்தி கேட்டதும் ஸந்தோஷமடைந்து சிவசுவாமி ஐயர் ராமாமிருதம் இவர்களோடு வந்து சேர்ந்தார். இதற்குள் இங்கு நிச்சய தாம்பூலத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தமையால், வந்ததும் ராமாமிருதத்தையும் மங்களவல்லியையும் மணமேடையில் உட்காரவைத்து, பந்து மித்திரர் முன்னிலையில் கொட்டு முழக்குடன் நிச்சய தாம்பூலம் நடத்தினார்கள். அன்று முகூர்த்தம் பத்து மணிக்குப் பார்த்திருந்தது. அதிலேயே நடத்த வேண்டுமென்பது ஜடாவல்லவரின் கருத்து. ஆண்டவன் திருவருளால் குறித்த முகூர்த்தத்தில் மங்களவல்லிக்கு மாங்கல்யதாரணம் வேதகோஷத்தோடும், மங்களவாத்திய முழக்கத்தோடும் நிறைவேறிற்று. பிராமணர்களெல்லாம் தம்பதியை வேதபூர்வமாக ஆசீர்வாதஞ்செய்து மங்கள அக்ஷதை தூவினார்கள். மங்கையர்களெல்லாம் மங்கள கீதம்பாடி மலர்மாரி பொழிந்து புகழ்ந்து வாழ்த்தி மனமகிழ்ந்து கொண்டாடினார்கள். ஸ்ரீமதியும் இத் திவ்ய சுந்தர திருமணக்கோல வைபவத்தையும், மங்களவல்லிக் கேற்ற மணவாளன் வாய்த்ததையுங் கண்டு மகிழ்ந்து தன் கோபம் ஒழிந்து கொண்டாடினாள். ஸ்ரீமதியே கொண்டாடினாளென்றால் இத்தம்பதியின் பொருத்தத்தைச் சொல்லவேண்டுமா? திரிபுரசுந்தரியும் தான் பிறந்ததுமுதல் இதுவரையில் அடையப்பெறாத ஸந்தோஷமடைந்து தன் குழந்தை மங்களவல்லியைப் பக்கத்திலழைத்து, அக்குணமணியின் வதனமதியானது வாட்டமின்றி ஸந்தோஷ சாகரத்தினின்று வெளிக்கிளம்பியதுபோல விளங்கக்கண்டு மடியிலுட்காரவைத்து முத்தமிட்டு, "அம்மா பக்திக்கிரங்கும் பரமதயாள மூர்த்தியாகிய ஜகதீசன் உன் மனத்திற்கிசைந்த மணவாளனைத் தந்தான்; நீயும் உன் கணவனும் பரமகாருண்ய மூர்த்தியின் திருவடி மறவாதிருந்து நீடூழிகாலம் குறைவற்ற செல்வச் சிறப்புடன் வாழக்கடவீர்கள்" என்று வாழ்த்தினாள். ஜடாவல்லவரும் பரமானந்தங்கொண்டு தம்மை நமஸ்கரித்த மருமகனையும் புத்திரியையும் "தீர்க்காயுளோடு வாழக்கடவீர்கள்" என்று ஆசீர்வாதஞ்செய்து மகிழ்ந்தார். சிவசுவாமி ஐயரும் செல்லமையரைப் புகழ்ந்ததுமின்றி, வந்த பந்து மித்திரர்களும் "இந்த மஹாநுபாவனாலேதான் இந்த விவாகம் நிறைவேறியது" என அவரை அளவுகடந்து புகழ்ந்தார்கள். முகூர்த்தம் நிறைவேறியதும் பிராமணர்களுக்குப் பூரி தக்ஷிணை

யும் ஏழைகளுக்கும் வந்திருந்த பந்துமித்ரர்களுக்கும் பிரமா ணந்தமான போஜனமு மளிக்கப்பட்டன. இவ்வாறு முதல்நாள் விவாகம் நிறைவேறியது. கல்யாணத்தன்று காலையில் தந்தி யனுப்பப்பட்டமையால் ராமாமிருதத்தின் தமையன் நாகராஜன், தாயார் முதலானவர்களும் இரண்டாவது நாள்வந்து அன்று முதல் நான்கு நாளுமிருந்து கல்யாண வைபவத்தைக் கண்டு மகிழ்ந்தார்கள். ஜடாவல்லவரின் மற்றொரு தங்கை ஜானகியும் அவள் புருஷன் போலீஸ் இன்ஸ்பெக்டரும் லீவு கிடைக்காமை யால் நான்காவது நாள் வந்து விவாக மஹோற்சவங்கண்டு மகிழ்ச்சியுடன் புறப்பட்டுச் சென்றனர். கடைசி நாள் ஆசீர் வாதத்திற்கு அவ்வூரிலுள்ள அரிய பெரிய மனிதர்களும், புத்தூர் ஜமீன்தாரும், இன்னும் ஜடாவல்லவருக்குத் தெரிந்த அனேக கனதனவான்களும் நாமக்கல் கண்ணுயிரம் பிள்ளையும் வந்திருந் தார்கள். இதனிடையே இன்னொன்று சொல்ல மறந்துவிட் டோம். தொட்டியத்திலிருந்து வீரசிங்கன் பெண் மங்கையர்க் கரசி, அவள் கணவன், அவளுடைய மாமியார் முதலானவர்கள் முகூர்த்ததினமே வந்து நான்குநாளும் இருந்தார்கள். இவ்வளவு பந்து மித்திரர்களுக்கிடையில் ஆசீர்வாதமும் விமரிசையாக நடைபெற்றது. ஐந்தாவதுநாள், பந்துமித்ரர்க ளெல்லோரும் தங்கள் தங்கள் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றனர். சிவசுவாமி ஐயர் ராமாமிருதத்தைப் பிள்ளையார் புத்தூரிலேயே ஜடாவல்ல வர் கேட்டுக்கொண்டதற் கிணங்கி, ஒருமாதம் இருந்துவிட்டுப் பின்பு ஊருக்கு வந்து சேரும்படி சொல்லி நிறுத்திவிட்டுப் பவானிபோய்ச் சேர்ந்தார். ஸ்ரீமதியும் தன் கொழுந்தன் முகத்திலெப்படி விழிப்பதென்றெண்ணிப் பிள்ளையார் புத்தூரி லேயே யிருப்பதாகத் தீர்மானித் திருந்து விட்டாள்.



## அத்தியாயம்—22.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்"

நல்ல வழக்கம் கெட்ட வழக்கம் என வழக்கம் இருவகை யாயிருந்து மாந்தர்கட்கு நல்ல பயன் தீய பயன் என்னும் இரு வகைப் பயனையுந் தருவது உலகத்திலே யாவர்க்கும் அநுவப

மானதாகும். நல்ல வழக்கம் சுளுவிலே பிடிபடுவதில்லை ; கெட்ட வழக்கமோ, மாந்தர்களைக் காந்தத்தை இரும்பு பற்றுவது போலப் பற்றித் தன் பயனைத் தருகின்றது. நல்லவழக்கமுடையவனே உலகத்தில் பெருமையை யடைகின்றான் ; உயர்கின்றான் ; சகல நன்மைகளையும் அடைகிறான். கெட்ட வழக்கத்தினாலே தீமை பலவடைந்து இடர்ப்படுவாரை நாம் எத்தனையோ முறை பார்க்கின்றோம். தற்கால நாகரிகர்களை மிகுதியும் துன்பப்படுத்தும் கெட்ட வழக்கங்கள் பலவிருப்பினும் நாம் வெகு சுளுவிலே எடுத்துக் காட்டக்கூடியதும், நம்மவர்க்கு இன்றியமையாத தன்றென்று, ஊகிப்பவர்க்கு வெகு சுளுவிலே தோற்றக்கூடியதுமாகிய தொன்று காபிக் குடியாம். இது புலியைநோக்கி, பூனையும் சூடிட்டுக் கொண்டதாம் என்பதற்கு ஒப்பாய் வந்த வழக்கமாம். இதனையன்றிப் பொடி, பீடி, ஸிகரெட், குடிமுதலியனவும் மானிடன் ஒருவனுக்கு வேண்டாதனவேயாகும். ஒவ்வொரு மனிதனும் குற்றமுடையவனே யாவன் ; குற்றமற்றவனைக் காண்பதரிது. அப்படியிருக்க இப்படிப்பட்ட குற்றங்களை, விலைக்கு வாங்கிக்கொள்வதுபோல் காரணமின்றிக் கையாண்டு வருவதெனில் அது மதியாகுமா? இவையன்றிச் சிலருக்குக் காலையில் தங்கள் முதுகிலே சூரிய உஷ்ணம் பட்டபிறகுதான் விழிப்பு வருவதுண்டு. அது கேடுதரும் வழக்கங்களிலே முதன்மையானதாகும். அவனிடம் மூதேவி வசிப்பாள் என்று பெரியோர் கூறுவர். அதிகாலையிலே யெழுந்து தான் அன்று செய்யவேண்டியது யாது? அதனை யெப்படிச்செய்யின் சித்திபெறுதல் கூடும் என்பதுபற்றிச் சிந்தித்துப் பார்த்துத் தக்கபடி நடப்பவனே உலகில் சகல நன்மைகளையும் கொடுக்கும் சுறுசுறுப்பையும் ஊக்கத்தையும் பெறுகிறவனாவான்.

ஜடாவல்லவர், இந்த நல்ல வழக்கத்தையுடைய அறிஞரானதினால் வழக்கம்போல் ஒருநாள் எழுந்து கடவுளைத் தியானஞ் செய்துவிட்டுத் தாம் அன்று செய்யவேண்டியது யாதெனச் சிந்தனை செய்தார். அன்று பௌர்ணமியென்பது நினைவிற்கு வந்தமையால் வீரசிங்கன் அன்று குன்றிலே தம்மை வரும்படி வேண்டிக்கொண்டது அவர் முன் நின்றது. ஆகையால் அவர் அவ்வூருக்கு அன்றிரவு புறப்பட்டுப்போகத் தீர்மானங்கொண்டார் ; பின்னர், வழக்கம்போல் செய்வன செய்யத் தொடங்கினார்.

இப்பொழுது ஜடாவல்லவர், மாணவேதனையினின்று விடுபட்டவரைப்போ லிருக்கின்றார். திரிபுரசுந்தரியும், 'தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும் என்பது கண்டேன்' என்று கருதி எல்லாம் அவன் செயல் என்றிருக்கின்றாள். மங்களவல்லியின் மனோபாவம் பெரிதாய் விட்டது. அதனை விசாரித்தெழுத நமக்கவகாசமில்லை. வாசகர்கள் மன்னிப்பார்களாக!—அன்றிரவு எட்டுமணிக்கு ஜடாவல்லவர் தேக்கன் வண்டியிலே பயணப்பட்டுப் பதினொன்றரை மணிக்கு அரியூர்மேடு என்னுமிடத்திற்குப் போய்ச்சேர்ந்தார். வழியில் ஜடாவல்லவர் தமது நண்பராகிய முதலியாரொருவரைச் சந்திக்க நேரிட்டது அவருடைய வண்டியும் அங்குவந்து சேர்ந்தது. முன் பேசியபடி மங்கையர்க்கரசி, அறப்பெருஞ் செல்வி இவர்கள் வண்டியும் அங்கு வந்து சேர்ந்தது. இப்படி வண்டிகள் வந்து சேர்ந்த மறு கணமே வீரசிங்கனும் வீரர்களுடன் அங்கு வந்து ஜடாவல்லவரைச் சந்தித்து வரவேற்றான். ஜடாவல்லவர் தம்மோடு வந்த பெரியமனிதரை வீரசிங்கனுக்குக் காட்டி "இவர் எனது நண்பர்" எனச் சொன்னார். வீரசிங்கன் அதுகேட்டு மகிழ்ந்தான். பின்பு யாவரும் வீரசிங்கனோடு அவனிருப்பிடத்திற்குப் புறப்பட ஆயத்தமாயினர்.

உடனே வீரசிங்கன் மூன்று வண்டிகளையும் ரோட்டிற்கருகே நிறுத்தச் சொல்லி, அங்கே தன்னோடு வந்து மறைவிலிருந்த சில வீரர்களை யழைத்து வண்டிகளுக்குக் காவலிருக்கும்படி திட்டப்படுத்திப் பின் தீவட்டி பொருத்தச் சில வீரர்களுக்கு ஆஞ்ஞாபித்தான்; முன்னரே கொண்டுவந்து வைத்திருந்த பல்லக்கைக்கொண்டுவரும்படி உத்தரவிட்டான். உடனே தீவட்டியும் பொருத்தப்பட்டுப் பல்லக்கும் ரோட்டுப்புறம் கொண்டுவரப் பட்டது. இதைப் பார்த்த புதுமனிதரும் அவருடைய வண்டிக்காரனும் வியப்படைந்தனர். "இங்கே இக்காட்டிற் பல்லக்கு வைத்திருக்கும்படியான பெரிய பிரபு ஒருவன் இருக்கின்றானா! இந்நாள் வரையில் நமக்குத் தெரியாமலிருக்கிறதே" என்று பின்னும் வியப்புற்று, வாய்பேசாமல் பிரமித்து நின்றுவிட்டார்கள். அப்பல்லக்கில் வீரசிங்கன், இரண்டு மாதர்களையும் ஜடாவல்லவரையும் அவர் நண்பரையும் ஏறிக்கொள்ளும்படி சொன்னான். அவ்வாறே அவர்கள் ஏறிக்கொண்டார்கள். வீரசிங்கன், தொட்டியத்தி லிருந்துவந்த அவன் மருமகன், மூன்று

வண்டிக்காரர்கள் இவ்வைவரும் பல்லக்குக்கு இருபுறமும் நடந்து சென்றார்கள். முன்னும் பின்னும் தீவட்டிக்காரர்கள் சென்றார்கள். பல்லக்கு வெகு வேகமாகச் சென்றமையால், அரைமணி நேரத்திற்கெல்லாம் வீரசிங்கன் வாசஸ்தலமாகிய குன்றினுச்சிக்கு எல்லோரும் போய்ச் சேர்ந்தனர்.

இங்கே இருபது சதுர அடி விஸ்தீரணத்திற்கு முள், கல், செடி, கொடி முதலியன களைந்து தரை சமன்படுத்தப் பட்டிருந்தது. இந்த இடத்தைச் சுற்றிலும் மரங்கள் பெரிது மடர்ந்து கூடாரம் அடித்ததுபோல மூடிக்கொண்டிருந்தன. அம்மரக் கிளைகளில் வெளிச்சத்திற்காக நாலைந்து விளக்குகள் கட்டித் தொங்கவிடப் பட்டிருந்தன. தரையில் ஆசனங்களும் போடப் பட்டிருந்தன. இவ்விடத்தில் வீரசிங்கன் ஜடாவல்லவர் முதலியவர்களைப் பல்லக்கி லிருந்திறக்கி அங்கிருந்த ஆசனங்களில் உட்காரவைத்தான். நால்வரும் உட்கார்ந்துகொண்ட பின், தானும் ஓரிடத்தில் ஜடாவல்லவர் முன்னிலையில் தன் மருமகனோடு உட்கார்ந்துகொண்டான்; வண்டிக்காரர்களையும் உட்கார வைத்தான்; சுற்றிலும் தீவட்டிக்காரர்களையும் தன்னைச் சேர்ந்த வீரர்களையும் நிற்க வைத்தான். இப்பொழுது இந்த இடம் ரிஷியாச்ரமத்திற் கொப்பாக விளங்கியது. முதலியாருக்கும் அவருடைய வண்டிக்காரனுக்கும் அச்சமும் வியப்பும் உண்டாய் இருவரும் பலவாறு யோசனை செய்யலாயினர்.

இப்படி யிருக்கையில் வீரசிங்கன், ஜடாவல்லவர் முதல் எல்லோரையும் பார்த்து, "உங்களெல்லோரையும் இன்று இவ்விடத்தில் பார்க்கும் நான் மிகவும் ஸந்தோஷமடைகின்றேன். எனது ஆயுள்நாளில் இன்றே எனக்கு மிகவும் ஸந்தோஷத்தைக்கொடுத்த நாள்" என்றான். ஜடாவல்லவர், "அப்பா! வீரசிங்கா! (தமது நண்பரைக்காட்டி) இவர் சரித்திர முனக்குத் தெரியுமா?" என, வீரசிங்கன் "சுவாமி! அறியேன்" என்றான். ஜடாவல்லவர் "இவர் ஜம்புகேசுவரத்திற்கு அருகேயிருக்கும் நல்லூர் மிராசுதார். இவர் சிலகாலம் நமது பக்கத்துக்கு ரெவினியூ இனிஸ்பெக்டராயிருந்து நான் முனிஸிப் வேலை பார்த்தபொழுது நல்ல உதவி புரிந்திருக்கிறார். இவர் தந்தை ஒரு நகை வியாபாரி. இப்பக்கங்களில் அவருக்கு நல்ல பேருண்டு. அவரைத் தாண்டவ முதலியாரென்க் கூறுவார்கள்; நீ கூட அவரைப்பற்றிக் கேட்டிருக்கலாம். அவர் பரம்பரையாய் நல்ல வம்சத்தைச்

சேர்ந்தவர்; இவர் வரவு இன்று நமக்குக்கிடைத்தது மிகவும் அபூர்வம்;" என்றார். வீரசிங்கன் (சற்றுயோசித்து) "யார், கா. சு. தாண்டவ முதலியார் என்று சொல்வார்களே அவர்களா?" என்றான். ஜடாவல்லவர் "ஆமாம், அவர்தாம்" என்றார். முதலியாரும் "ஆமாம்" என்றார்.

வீரசிங்கன்—ஓகோ! அப்படியா? முதலியாரவர்கள் இப்பொழுது நாமக்கல் போவது யாது காரணமோ?

முதலியார்—எனக்கு உற்ற நண்பர் ஒருவர் இருக்கிறார். அவரைப்பார்க்க நான் அடிக்கடி செல்வதுண்டு. இன்றும் அதற்காகத்தான் போகின்றேன்.

ஜடாவல்லவர்—அப்பா! நேரமாகிறதே—

வீரசிங்கன்—"சுவாமி! நான் என்னுடைய வாழ்வை நினைக்கும்போது என்னையறியாமல் துக்கம் உண்டாகிறது! என்ன செய்வேன்! நீங்களெல்லோரும் இன்று என் வரலாறு கேட்கவன்றோ விருப்பப்பட்டு வந்திருக்கின்றீர்கள்? சொல்லுகின்றேன் கேளுங்கள் சுவாமி! நமஸ்கரிக்கின்றேன்—



# வீ ர சி ங் க ன்



## அத்தியாயம்—23.

"இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்".

நான் பிறந்து வளர்ந்தது மதுரை; என் தந்தை ஒரு ரத்னவியாபாரி; அவர் அந்த வியாபாரத்தில் அளவற்ற பொருள்களைச் சம்பாதித்தார்; எனக்கு இருபதாவது வயதில் அவர் காலஞ்சென்றார். நான் செல்லப்பிள்ளையாய் வளர்ந்து வந்ததனாலால், வியாபாரமும் அதற்கேற்ற தந்திரங்களும் அறியாதவனா யிருந்தேன். ஆனால் என் தாயார் எனது தந்தையினுடைய பழக்கத்தினால் வியாபாரத் தந்திரங்களிலும் கல் பரீக்ஷையிலும் மகா புத்திசாலியாய் விளங்கினார். அவர் என்னைச் சீர்திருத்தி வியாபாரத்தில் மேன்மை யடையும்படி செய்தார். பின்பு நானே பிறருதவியின்றி வியாபாரஞ்செய்து, என் தந்தை

யால் சேகரிக்கப்பட்டிருந்த சொத்துக்குக் குறைவுண்டாகாவாறு சம்பாதித்துச் சந்துஷ்டியாகக் காலங்கழித்து வந்தேன். என் இருபத்தைந்தாவது வயதில், எண்ணியபடி எதையும் முடிக்க வல்ல அறிவாளியாய் விளங்கினேன். அதனால் அப்பக்கங்களெங்கும் கண்ணியம்பரவி, மேன்மையுற்றிருந்தேன். பெரியோரிடத்து வணக்கமும் அடுத்தார் இடுக்கணகற்றி அன்பு பாராட்டியாதரிக்கும் அருங்குணமும் என்னிடம் விளங்கின. என்னுடைய புத்தி சாதுர்யத்தையும் நற்குண நற்செய்கைகளையும் என்னிடத்துச் செல்வச்சிறப்பையும் கேள்விப்பட்டு, என் தாய்வழியுறவில் ஒரு தனவந்தர் எனக்குத் தமது குமாரத்தியைப் பதினாயிரம் ரூபா ஸ்திரீதனத்தோடு கொடுத்து மணம் முடித்து வைத்தார். அப்பெண் அதிரூபலாவண்ணியமும் நற்குணமும் வாய்ந்த உத்தமி. அவள் என் வீட்டுக்கு வந்து ஒரு வருஷ காலத்துக்குள் என் அருமைத்தாயார் சிவபதமடைந்தார். பிறகு அடுத்த வருஷம் இதோ நிற்கும் இந்தப் பெண்ணமுதமும் எனக்குப் பிறந்தனள். இச்சந்தர்ப்பத்தில் என் பெருமையைக் கெடுக்க குடிகேடனான ஓர் இழிகுலத்தவனுடைய நட்பு வந்து சேர்ந்தது. முதல், இடை, கடை யென்னும் மூவகையினுள் அவன் கடையான நட்பைச் சேர்ந்தவனாகையால், ஜலம் விட்டாலன்றிப்பயன்றராத கமுகைப் போல் நான் காசு கொண்டுவந்த நாளல்லாது மற்ற நாட்களில் அவன் என்னை வெறுப்பான். பிறகு அவன் எனக்குப் பெரும் பகைவனானான். அவனால் நானடைந்த பயன் தீய நடவடிக்கையாகவே முடிந்தமையால் நாடகம் முதலியவைகளைப் பார்ப்பதிலும் சூதாடுவதிலும் தாசிவீடு செல்வதிலும் புத்தியைச் செலுத்தி வந்தேன். .........................................இவைகள் கடலிலே மரக்கலத்திற்குச் சுழல்காற்றைப்போல எனக்கிடர்தந்தன. பிறகு நான் வியாபாரமென்கிற வியாபாரத்தை முற்று மொழித்துவிட்டேன்; என் தந்தை சேர்த்து வைத்திருந்த சொத்துக்களில் சிலவற்றை விற்றும், சிலவற்றை ஒற்றிக்கு வைத்தும், ஆடம்பரச் செலவு செய்துவந்தேன்; என் அருமை மனைவியினுடைய புத்திமதியைப் புறக்கணித்ததுமன்றி இக்குழந்தையையும், அவளையும் கவனியாது மனம்போனபடி நடந்து வந்தேன். இத்துர்க்குணத்தால் என்னுடைய பந்து மித்ரர்களும், என் மாமனார் முதலானவர்களும் என் வீட்டுக்கு வருவதில்லை; என்னைக் கண்டாற் பேசுவதுமில்லை; எல்லோரும் பகைவர்போலிருந்து வெறுத்தனர். ஆனால்

என் மனைவி மாத்திரம் என்னுடைய தீயசெய்கைக்கு என்னை வெறுத்து அலட்சியஞ் செய்யாமல், நான் வீடுவந்த வேளையில் அன்னமிட்டதுமல்லாமல் புத்திமதியுங் கூறிவந்தாள். அவள் சொல்லிவந்த நற்புத்தியில் எனக்கு அப்பொழுது கொஞ்சமேனும் மனந்திரும்பவில்லை. கண் தலை தெரியாமல், போதல், வருதல் கருதாமல் அலைந்தேன். இதனால் எனக்கிருந்த ஆஸ்திகள் எல்லாம் ஒழிந்தன. இச்சமயத்தில்,————

எனக்கவ்வூரில் மதிப்பென்பது சிறிதுமில்லாமற் போயிற்று. கடன் கொடுப்பாருமில்லை. யானை தனக்குக் கவளங்கொடுத்துக் காப்பாற்றும் பாகனையும் ஒரு காலத்தில் கொன்றுவிடும். அது போல் நான் ஆதரித்துவந்த வேசியும் என்னை வெறுத்து ஒதுக்கினாள். இப்படியாகவே நான் என் மனைவியின் முகம் பார்க்க வெட்கப்பட்டு என் வீட்டு மேன்மாடியிலே முக்காடிட்டுப் படுத்துக்கொண்டேன். நான் செய்த பிழைகளும் என் மனைவியின் நற்போதனைகளும் இப்பொழுது என்முன் தாண்டவமிட்டன. நான், "அந்தோ! விதிவிலக்குகளறிந்து நடக்கும் அறிஞருடைய நட்பை விரும்பிப் புகழையடையாத கடையனானேனே" என எண்ணி என் மதியை நொந்துகொண்டேன்; மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்கியவன் கதைபோலாயிற்றே நம் வாழ்வென வெண்ணினேன். அச்சமயத்தில் என் மனைவி யென்னைத் தேடிக் கொண்டு அவ்விடம் வந்து என் நிலைமையைக்கண்டு————என் எதிரில் நின்று "பிராணநாதா ஏதோ நமது பொல்லாத வேளையினால் இவ்விதக் கஷ்டங்களுக்குள்ளானோம்—

"வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா."

என்பதற்கிணங்க நாம் அநுபவிக்க வேண்டியதை அநுபவித்துத்தான் தீரவேண்டும். இதற்காகத் தாம் ஏன் வருந்த வேண்டும்? இன்றுமுதல் நம்மைப்பிடித்த சனியன் விட்டொழிந்தது" என்று தேறுதல் கூறினாள். நல்ல குணசாலியாகிய என் மனைவி இவ்வினிய வசனங்களால் என் துக்கத்தை மாற்றியதே, முன் நானிழந்த ஸ்திதியையும் கண்ணியத்தையும் செல்வாக்கையும் திரும்ப என்னிடத்தில் சேர்ப்பிக்கும் அறிகுறியாய் விளங்கியது. அன்றுமுதல் என் அவலமதியை யொழித்து, மனைவியைத் தவிர மற்றொருவர் முகத்தில் விழிப்பதில்லையென ஒரு சபதம் செய்துகொண்டு தவமதி சிறந்து விளங்கினேன். என்

தரித்திர தசையை யறிந்து அதற்கேற்றபடி என் மனைவி நடந்து வந்தாள். இதனால் என் தரித்திர வாழ்க்கையானது பாலோடு பழங் கலந்த பான்மையதாயிருந்தது. தரித்திரமுறியும் பெண்டொடு நடாத்தும் வாழ்க்கையன்றோ?

இச்சமயத்தில் எனக்கு நற்குணமமைந்த ஒருவனுடைய நட்புக் கிடைத்தது. அந்த நட்பு மாலைவெயிலின் நிழல்போல் மேன்மேலும் விருத்தியாய் வந்தது. அப்புண்ணியவான் அன்பே மானிட உருக்கொண்டதென்று பகரத்தக்க குணசாலி. அவன் இவன் அரிச்சந்திரனின் அவதாரமோவென்று புகழவிளங்கினான். இவற்றிற்கேற்ப ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினது இதயகமலவாசியாகிய ஸ்ரீ தேவியின் கிருபாகடாட்சம் பரிபூர்ணமாய் அவனிடமமைந்திருந்தது. ஸ்ருஷ்டி கர்த்தாவினது நாவில் வசிக்கும் ஸரஸ்வதியும் இவ்வுத்தமனிடத்தில் தன்னருட்கணைக்கஞ் செலுத்தி ஞாலம் புகழத்தக்க கல்வி ஞானத்தை அவனுக்குக் கொடுத்திருந்தாள். உலகத்தில் செல்வமும் கல்வியும் சேரப் பெறுவது யாவர்க்குமரிதல்லவா? எந்தப் புண்ணிய வசத்தாலோ மகா பாதகனாகிய என்னிடம் அவன் நட்புக்கொண்டு எனக்குப் புத்திபோதிப்பதில் சற்குருபோலவும் சமயத்துக்குத் தக்க யுக்தி சொல்வதில் மந்திரிபோலவும், என் கவலைகளாகிய பகைவர்களை யொழிப்பதில் ஸேனாதிபதிபோலவும் வேண்டும்பொழுது பொருள் கொடுத்து உதவுவதில் கர்ணன்போலவும் இருந்துவந்தான். அந்த மகாநுபாவனுடைய நட்பானது கரும்பைக் கொழுந்தாடையிலிருந்து தின்றுகொண்டு போகிறவனுக்கு வர வர மதுரமதிகமாவதுபோல் எனக்கு இனிமை பயந்துவந்தது. முயற்சியில்லாமலே பயனைத்தரும் பனைமரம்போல எனக்கு அவன் பல நன்மைகளைத்தானே செய்துவந்தான். இது தலையான நட்பல்லவா?

இப்படியிருக்கையில் நான் என் சிநேகிதனுக்கே பெருந் துரோகஞ் செய்ய நினைத்து அதற்கு முயற்சி செய்தேன்; அந்த முயற்சியில் சிந்தைகொண்டவனாய் ஒருநாள் வெளியே போயிருந்து வீட்டிற்கு வந்து மனைவியை யழைத்தேன்; மறுமொழி கிடைக்கவில்லை. ஆகையால் அவளைத் தேடிக்கொண்டு சமையலறைக்குட் சென்றேன்; அங்கே மனைவியைக்காணாமல் குழந்தையின் பெயரைச் சொல்லி, இரண்டு மூன்று தடவை யழைத்தேன். மறுமொழி கிடைக்கவில்லை. இப்பொழுது என்னை யறியாமல்

என் மனத்திற் அச்சம் குடிபுகுந்தது. "ஐயோ! என்ன செய்வேன். ஈசா" என்று கூறியழுதுகொண்டே புறக்கடைப் புறம் போய்ப்பார்த்தேன். அங்கே ஓர் அறைக்குள் என் மனைவி படுத்திருக்கக் கண்டேன். நித்திரை செய்கிருளோவென்று எண்ணினேன். ஆனல் குழந்தை பக்கத்திலில்லாமை கண்டு திடுக்கிட்டு; எழுப்பி விசாரிப்போமென்று பக்கத்திற் சென்று எழுப்பினேன். நாலைந்து குரல் கூப்பிட்டு எழுப்பியும் அவள் எழுந்திருக்கவில்லை. பிறகு தட்டி எழுப்பினேன்; இப்பொழுதும் ஏன் என்று கேளாமையால், "ஐயோ உயிர்போய் விட்டது போலும்" என்றெண்ணி, அவள் தேகத்தைத்தொட்டு அசைத்தேன். காலோடு தலை கட்டைபோல் அசைந்தது, அதைக்கண்டு இறந்தாளெனத் துணிந்து கட்டிப்புரண்டு தரையில் விழுந்து, கதறியழுதேன். பின் குழந்தை ஞாபகம் வந்தது. உடனே அங்கும் இங்கும் சுற்றிப் பார்த்தேன். அப்பொழுது என் மனைவி பக்கத்தில் ஒரு கடிதம் கிடந்தது. இதோ பாருங்கள் அக்கடிதம்—என்று கூறித் தன் கைப்பெட்டியைத் திறந்து ஒரு கடிதத்தை யெடுத்து ஜடாவல்லவரிடம் கண்களினின்று நீர் பெருக நின்று நீட்டினன். அதை ஜடாவல்லவர் வாங்கிப் பிரித்துத் தீவட்டி வெளிச்சத்தில் படித்தார். அதில்,—

ஜகதீசன் திருவடி துணை.

என் பிரியமுள்ள பிராணநாதா!

தங்கள் பொற்பாத கமலங்களில் அடியேன் அநேக கோடி தண்டனிட்டுத் தெரிவித்துக் கொள்வதாவது;—

இப்பவும் இன்று அதிகாலையில் தாங்கள் வீட்டை விட்டு வெளியே சென்றதும் தங்கள் ஆருயிர்த் தோழனுடைய மனைவி ஜகதாம்பாள் என்னிடம் வந்து, கயலெனப் பிறழும் தன் இரண்டு கண்களினின்றும் மழை பொழிவது போல நீர் பெருக நின்று, என்னைப் பார்த்து, "அம்மா பங்கஜவல்லி! நீ கற்பிற்சிறந்த உத்தமியாயிற்றே! எல்லா அவயவங்களும் சரிவரப்பொருந்திய ஒருவருக்குக் கண்களிரண்டும் அமையாவிடில் எப்படியோ அதுபோலுனக்குச் சர்வேசுவரன் திருவருளாலெல்லாம் பொருந்தி யிருந்தும் கணவன் மாத்திரம் சரிவர வாய்க்காமற்போனது என்ன பாபம்! யாரிட்ட சாபம்! யாருடைய கோபம்! ஆ! இதென்ன நியாயம்! சீ உன் கணவன்

கெட்டான்! மானத்தை யிழந்தவன் மனிதனுவானு? அவனைச் சுவானத்துக்கொப்பிடவுங் கூடுமோ? ஐயோ! என் மனம் பதறுகிறதே! வாயைவிட்டுச் சொல்லவும் நாவெழவில்லையே! என்னென்று சொல்வேன்! சொல்லாமலிருக்கவும் மனம் வரவில்லையே! சீ! சீ! உன்னேடு சொல்லாமல் யாரிடந்தான் சொல்வேன்!—

நேற்றையதினம் நான் சிங்காரத் தோட்டத்துக்கு ஜலமெடுக்கப் போனேன். அங்கே உன்னுடைய கணவன் என் எதிரில் மிருத்யுமாதிரி வந்து நின்று 'பிறன்மனை புகாமை யறமெனத் தகும்' என்பதையும் ஸ்திரீகள் தனித்திருக்கையில் பேசுவது தகாதென்பதையும் சமயமறிந்து நடக்கும் சதுரர் பிறர் மனைவியினிடத்துப் புறக்கடைப் புறமுஞ் செல்லார் என்பதையும் கருதாமல், தன் அவலவாயைத் திறந்து, "கண்மணியே! உன்னேடு பேசப் பிரியப்படுகிறேன்; உன் நட்பை விரும்புகின்றேன்" என்றான். நான் யார்? இவன் யார்? இவனுக்கு நான் கண்மணியாமே! என்ன அநியாயம்! அச் சொற்கள் எனக்குக் காதில் ஈயத்தை உருக்கி வார்த்தாற்போல் விழுந்தன; உடனே கோபம் வடவாக்கிபோல் பொங்கியது. ஆனுல் மதியீனனேடு கோபிப்பதிலென்ன பயனென்று கருதிச் சற்று நிதானித்து, உன் கணவனைப் பார்த்து "நீர் என்னை இதுவரையில் பார்த்ததில்லையா? அப்போது பேசப் பிரியமுண்டாகவில்லையோ? ஸ்திரீகள் தனித்திருக்கும் இடத்திற்குப் புருஷர்கள் வரலாகுமோ?" என்று கடிந்துபேசிக் குடத்தை யெடுத்து இடுப்பில் வைத்து வீட்டுக்குப் போகப் புறப்பட்டேன். உடனே மதிமயங்கித் தன்னிலைகெட்டுத் திரியும் உன் கணவன் பழையபடி சற்றுப் பொறுவென்றென்னைத் தடுத்துப் பேசத்தொடங்கினுன். அப்போது எனக்குண்டான கோபம் எத்தன்மைத்தா யிருக்கவேண்டுமென்பதை உன்னைப்போன்ற பதிவிரதா சிரோமணிகள் சொல்லாமலே யறிந்துகொள்வார்கள்———நானுனக்கு என்னென்று சொல்லட்டும். அப்பொழுது கொழுந்துவிட்டுக் கிளம்பிய கோபாக்நியைப் பொறுமை என்னும் மழையாலவித்து, "ஐயா! நாளை யிந்நேரம் இவ்விடம் வருவேன். அப்பொழுது பேசுவோம் பேச்சை" எனத் தெரிவித்துப் பழையபடி குடத்தை யெடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பிப்போனேன். உன் கணவனும் பின்றெடர்ந்து வந்தான். வந்ததைக்கண்ட நான், கைஜாடை செய்து தடுத்துவிட்டு என் வீட்டுக்குப் போய்விட்டேன்.

பின் அவன், என்னைத் தொடராது நின்றுவிட்டான். பார்த் தாயா பங்கயச் செல்வீ! என்ன கொடுமை! என்ன துணிவு! இது யாருக்கடுக்கும்! இவனைப்போன்ற பாபிகளிருக்குமிடத்தில் மழை யெப்படிப் பெய்யும்?—செட்டுங்கட்டுமாய் வியாபாரஞ் செய்து உன் மாமனுர் தேடிவைத்த பொருளை இவன் 'ஆற்றிற் கரைத்த புளிபோல்' ஆக்கிவிட்டு எல்லோரும் சீ! இவனொரு மனிதனு வென்றேசிச் சிரிக்கக் கெட்டுப் பந்து மித்ரரையு மிழந்து தேகசுகத்தையுந் துறந்தான். இப்பொழுதுதான் ஏதோ கொஞ்சம் தலையெடுக்கத் தலைப்பட்டான். அதுவும் என் கண வனு லென்பது உன் மனம் அறியாததன்று. இவன் என் கண வன் தன்னுடைய ஆருயிர் நேயரென்பதையும் மறந்து, சண்டாள னும் செய்வதற்கஞ்சும்இச் செய்கை செய்யத் துணிந்தான். நான் இன்னும் இதை என் கணவனிடம் சொல்லவில்லை. அவர்க்குத் தெரிவித்திருந்தா லிந்நேரம் என்ன விபரீதமாயிருக்கும்! உன் முகத்துக்காகப் பார்த்து உன்னிடம் முதலில் தெரிவித்தேன். ஆகையால் இனி இத்தீய வழியிற் செல்ல மனந் துணியாத படி உன் கணவனைப் பார்த்துக்கொள்ள வேண்டியதுன்கடமை. நான் உன்னை என் கூடப்பிறந்த பிறப்பாகவெண்ணிச் சொன் னேன்; இதற்கு நீ வருந்தாதே. நீ செய்த புண்ணியம் அவ்வ ளவுதான். நான் போகிறேன்; வந்து நேரமாயிற்று—என்று சொல்லிப் போய்விட்டாள்.

இதுவரையில் தங்களுக்குப் பொருள் நஷ்டமும், மானக் கேடும், கண்ணியக் குறைவும், பந்து மித்திரர் பகையும் உண் டாய், படாதபாடு பட்டும், 'எல்லாக் குற்றங்களுக்கும் மேலான குற்றம் ஒருவன் தன்னுடைய குற்றங்களிலொன்றையும் உண ராமலிருப்பதே, என்பதை நீர் உணராதவராயிருந்தீர். நான் பல முறை சொல்லியும், என் வாய்ப்பேச்சு உமது செவிக்கேறவு மில்லை. கடைசியில் இவ்வளவுதான் நாம் செய்த பூஜாபலனென்று கருதி நல்ல காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இப் பொழுது ஜகதாம்பாள் கூறிய மொழிகளைக் கேட்டதும் என் மானம் போய்விட்டது. மானம் போனபின் மண்ணுலகில் வாழ் தல் தகாதென நினைத்தும், இனி நீங்கள் இத்தகைய தீயவழியில் துணியாமலிருக்கவும் ஆயுளளவும் அழியாத ஒரு ஞாபகக்குறி யாய் இருக்கும்படி, என்னுயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந் தேன். இனி மனம் வருந்தாமல் வேறோர் உத்தம ஸ்திரீயை

ம்ணாந்து, இல்லற நெறி தவறுதிருக்கும்பொருட்டு அநேக கோடி வந்தனஞ் செய்து கேட்டுக் கொள்கின்றேன். குழந்தையை இன்று காலை உங்கள் சகோதரி மங்களம் அழைத்துப்போயிருக்கிருள். குழந்தையை அழைத்து வைத்துக் கொள்ளுங்கள்! சுகமாக இருங்கள்! நான் போகிறேன்! நான் போகிறேன்!!

அநேககோடி வந்தனம்,
பங்கஜவல்லி.

என்று இவ்வாருக எழுதியிருந்த கடிதத்தை யாவருமறிய ஜடாவல்லவர் படித்து "ஆ! அப்பா! வீரசிங்கா! உனக்கு நேர்ந்தது பெருவிபத்து! பொறுத்தற்கரியது. அது உன் கஷ்டகாலம்!" என்று கூறி ஆச்சரியமும் வருத்தமும் அடைந்தார். மங்கையர்க்கரசி "ஆ! நமது தாய் இப்படியா இறந்தாள்!" என வருத்தமுற்றுக் கண்களிலிருந்து நீர் பெருக்கினுள். மங்கையர்க்கரசியின் கணவனும் அவள் மாமியும் உண்மையிலே வருத்தமும் வியப்புமடைந்தார்கள். முதலியாரும் வருத்தமும் வியப்புமடைந்தார்; இன்னும் என்ன நடக்கிறது பார்ப்போமென்று மௌனமாயிருந்தார். வீரசிங்கனைச் சேர்ந்த வீரர்களும் "ஆ! நமது தலைவன் வரலாறு இத்தன்மையதா!" என நினைத்து வருத்தமடைந்தார்கள்.

பிறகு வீரசிங்கன் ஜடாவல்லவரைப்பார்த்து, "சுவாமி நேரமாகிறது. அடியேனுக் குத்தரவளிக்க வேண்டும்" என்றான். ஜடாவல்லவர், "சரி பிறகு" என்றார். வீரசிங்கன், "சுவாமி! நான் இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்து, "ஆ! நமது புத்தி ஒரு புத்தியா! நமது பிறப்பு ஒரு பிறப்பா! அந்தோ! இனி நண்பன் முகத்தில் எப்படி விழிப்பது?

'நல்ல ஞாலமும் வானமும் பெறினும்,
எல்லா மில்லை இல்லில் லோர்க்கே',

என்பதற்கேற்ப இனி நமக்கிங்கென்ன இருக்கிறது? சீ! இந்த உலக வாழ்க்கையும் இந்த ஊரும் நமக்கு வேண்டாம்" என்றெண்ணி எல்லாவற்றையும் வெறுத்துக் குழந்தையைக் கூடப் போய்ப் பார்க்காமல், பிணத்தையும் எடுத்து அடக்கஞ் செய்யாமல், அன்றே வீட்டைவிட்டு வெளிவந்து தெருக் கதவை இழுத்து மூடிவிட்டுப் புறப்பட்டு இன்ன இடத்திற்குப் போவதென்றில்லாமல் நடந்தேன்; பத்துக் கல் தூரம் வந்ததும் வழி மேலிருந்த ஓர் ஊரில் தங்கி அங்கு ஒரு வீட்டில் இரந்து புசித்தேன்; மறு

நாள் அங்கிருந்து புறப்பட்டு, ஆவேசம் வந்தவன்போல் நடந்து சுமார் பதினொரு மணிக்கு உங்கள் ஊருக்கு (பிள்ளையார்புத்தூர்) வந்தேன்; வந்ததும் அக்ரகாரத்தில் பிச்சையெடுத்துக் கிடைத்ததைக் கொண்டு என் பசியை ஆற்றிக்கொண்டேன்; அப்பொழுது நினைத்தேன் — உயிர்களை வதைப்பதும் கல்வியை வெறுப்பதும் முன்னோர் வைத்த பொருளைப் பெருக்காமல் அழிப்பதும் மூடனின் தொழில்—என்னும் நீதியை! வெள்ளம் தலைக்கு மேலே போனபின் நீந்தத்தெரியாதவன் எதை நினைத்து என்ன பயன்? ஆதலின், ஒன்றுந் தோன்றாதவனாயிருந்து உங்கள் ஊரில் தங்கினேன்; அங்கிருந்து ஒரு மாதகாலம் இராப்பிச்சை எடுத்துண்டு காலங்கழித்தேன்.

"இவ்வாறிருக்கையில் தருமபிரபுவாகிய உமது தந்தை உமாமகேசுவர ஐயர் என்மீது அன்பு பாராட்டி, என் படிப்பையும் கையெழுத்தையும் பரிசோதித்து என்னைப் பண்ணைக் கணக்கெழுதும் கணக்கப் பிள்ளையாக வைத்துக் கொண்டார்; ஆனால் மூன்று மாதம் வரையில் சம்பளம் கொடுக்கவில்லை; அன்ன மட்டும் அன்போடளித்து ஆதரித்து வந்தார், பின்பு மாதம் இரண்டு கலம் நெல் சம்பளம் கொடுத்து வந்தார். அப்பொழுது என் வாழ்வு பூவோடு கலந்த நார்போலாயிற்று. மகா புத்திமானுடைய கருணைக்குப் பாத்திரமானேனன்றோ? ஈசன் முடியையடைந்த பாம்புக்கு யாது குறையுண்டு? நான், உங்களூரில் வேளாளத் தெருவில் ஒரு சிறிய வீட்டிற் குடியிருந்து என் கையால் சமையல்செய்து சாப்பிட்டுக் காலங்கழித்து வந்தது தங்களுக்குக்கூடத் தெரிந்தது தானே! அந்தோ! இக்காலத்திலல்லவா 'பாழே மடக்கொடி யில்லாமனை' என்ற ஆன்றோர் வாக்கின் அளவிடப்படாத பெருமையும் என்னுடைய விவேகக் குறைவும் எனக்குத் தோன்றின. சுவாமி, ஒவ்வொரு நாளும் அடுப்பண்டை போகும்போதும் வெளியே போய்வந்து வீட்டைப் பார்க்கும்போதும் எனக்கு வயிறு குபீர் குபீரென்று எரியும். சித்தத் தெளிவே யிராது. ஒன்றுஞ் செய்யத் தோன்றாது. என் முகத்தில் பிரமஹத்தி அப்போது சதா தாண்டவமாடிக் கொண்டிருக்கும். அடுப்பை யூதும்போது என் கண்களிலிருந்து புகையின் உபாதியால் வெளிப்படும் நீரோடு என் துக்க நீரும் மடையுடைந்தது போலப் பெருகி அடுப்புத் தீயை யவித்துவிடும். என்ன செய்வேன் பாவி! சாவேன் தினமும்! சவமாக உலாவு

வேன் எங்கும்! முகமே யிராதெனக்கு! சில சமயம் என் குடிசையில் ஒரு மூலையிலிருந்து பெருங்குரலிட்டு அழுதுமிருக்கிறேன். ஒருநாள் சமையல் செய்ய உட்கார்ந்து அடுப்பை யெரியவிட்ட சற்று நேரத்திற்கெல்லாம் தீ யணைந்துவிட்டது. அப்போது கோபங்கொண்டு அதில் நீரைவிட்டு அணைத்துவிட்டுச் சோறில்லாமல் வேலைக்குப் போய்ப் பசியால் படாதபாடும் பட்டேன். அதை யிப்போதெண்ணினும் என் தேகம் பதைக்கின்றது! யாரிடம் சோற்றுக்கிரக்க நெஞ்சந் துணியும்? துணிந்தாலும், இந்தத் தடியனுக்கென்ன கேடு என்றுங் கேட்பார்களன்றோ? நல்ல வேளையாய் அக்காலத்தில் என்னைப் பிறர் என் நிலையைப் பற்றியோ வேறு என்னுடைய செய்கையைப்பற்றியோ இகழ்ந்து பேசும் பேச்சு என் செவியிற் படவில்லை. அது என் உயிரைக் காத்தது. ஸ்நேக பாத்ரரல்லாதவரை ஸ்நேகித்ததும் மனைவியின் வாக்கைக் காப்பாற்றாமல் அவளை இழந்ததும் பயனில்லாமலே நான் அப்போது செய்த செய்கைகளும் பேச்சும் என் மனத்திலே இச்சமயம் முட்கள் நிறைந்த வாள்போலத் தோன்றி அதை யறுத்தன. இவ்வாறு நான் சதா மனவருத்தத்திலாழ்ந்து வந்தேன். இது என்னைத் துஷ்டசகவாசத்தில் மீண்டும் பிரவேசிக்கவொட்டாமல் ஓர் அரண்போலிருந்து காத்து வந்தது. வருத்தம் நேரிடின் அதை பொறுப்பது கஷ்டமாயினும் அது நமக்குப் பல உண்மைகளையும் சாந்தத்தையும் தெய்வ நம்பிக்கையையும் அதனிடத்துத் திடமான பக்தியையும் பெரியோரிடத்து வணக்கத்தையும் கொடுத்து இறுமாப்பை ஒழித்து நல்ல வழிக்குக் கொண்டுவருகிறது என்பதை நான் உணர்ந்தேன். உமது தந்தையிடம் தெய்வவிசுவாசம் பாராட்டி அவருக்கு யாதொரு கவலையுங் கொடாமல் வேலைகளைச் சரிவரப்பார்த்து வந்தேன். இதனால் "பெருமையுஞ் சிறுமையுந் தான்றர வருமே" என்னும் ஆன்றோர் வாக்குக்கேற்ப உமது தந்தை என்னை வயிறு வளர்க்கவந்த பிச்சைக்காரனென் றெண்ணாமல், தம்மோடு கூடப்பிறந்த சகோதரர்போல் பாவித்து என்னிடம் எல்லாவற்றையும் ஒப்புவித்து எல்லா உரிமைகளையும் தந்து பெருமைப் படுத்தி வந்தார். நாளடைவில் என் கவலைகளெல்லாம் என்னை விட்டுப் பறந்துபோயின. நான் ஒருவர் பேச்சுக்கும், ஒருவர் வீட்டுக்கும் போவதில்லை; என் வேலையுண்டு நானுண்டு என்றிருந்து வந்தேன்; பிறருடைய நிழலைக்கூட மிதியேன்.

"இப்படியிருக்கையில் நான் திருட்டுத் தொழிலிற் பிரவேசிக்க ஒரு காரணம் உண்டாயிற்று. என்னவெனில், புத்தூர் புதுத் தெருவில் வசித்துவந்த பட்டாமணியம் ஆத்மலிங்க முதலியாரைத் தங்களுக்குத் தெரியுமே. அவர் உமது தந்தையிடம் ரூபா ஐந்நூறு ஒரு வாரத்தில் கொடுக்கிறேனென்று கைம்மாற்றாக வாங்கிப் போனார்; ரூபா இருநூறு மறுநாளே அனுப்பிவிட்டார்; பின் நான்கு நாளைக்கெல்லாம் ரூபா நூறு அனுப்பிக் கொடுத்தார். மற்ற இருநூறு ரூபாவை வாரம் மூன்றாயும் கொடுக்கவில்லை. இந்தச் சமயத்தில் வாய்க்கால் வெட்டில் நேர்ந்த வழக்கில் ஆத்மலிங்க முதலியாருக்கும் ஐயர் அவர்களுக்கும் சிறிது மனஸ்தாபம் உண்டாயிற்று. இந்த மனஸ்தாபத்தை மனத்திற்கொண்டு ஆத்மலிங்க முதலியார் பணத்திற்கு வீண் சாக்குச் சொல்லி வந்தார். பின் மூன்று மாதம் இவ்வாறு கழிந்தது. அவரென்ன இல்லாத மனிதரா? கொடுக்கவேண்டாம்—மோசஞ் செய்துவிடுவோமென்கிற எண்ணங்கொண்டு பல தவணைகள் சொல்லி வந்தார். பிறகு எனக்கு மிகக் கோபம் வந்துவிட்டது. அவர் பணங்கொடுக்கிறேனென்று சொன்ன கெடுப்பிரகாரம் போய் அவர் வீட்டுத் திண்ணையில் 'பணங்கொடுத்தாலொழிய நான் அசையேனிங்கிருந்து' எனக்கூறி உட்கார்ந்துவிட்டேன். அதுகண்ட அவர், என்னை வீட்டிற்குள் அழைத்துப் போய் என் தலைமீது ஒரு பெட்டியைத் தூக்கிவைத்து அவர் வீட்டில் திருடியதாக என்மீது குற்றமேற்படுத்தி, அப்போது அவர் வீட்டுக்கு வந்திருந்த ஒரு போலீஸா னுதவியைக் கொண்டு என்னைப் பலமாயடித்துத் தம் வீட்டு வாசல் பந்தற்காலில் கட்டிவிட்டார். இச் செய்தி ஐயருக்கு மறுநாள் எட்டியது. அவர் பரம சாந்தகுணமுடையவராதலால், கோபம் கொள்ளாமல் முதலியாரிடம் வந்து பேசி என்னை விடுவித்தார்.

"இப்படியாகவே பிறகு ஒரு மாதத்திற்கெல்லாம் நான் இருபது திருடர்களைச் சேர்த்துக்கொண்டு ஒருநாள் நள்ளிருளில் ஆத்மலிங்க முதலியார் வீட்டிற் கன்னம் வைத்து நுழைந்து, அவரைப் பிடித்து ஒரு தூணிற் கட்டிக் கண்ணெதிரிலேயே அவர் வீட்டுச் சொத்தைக் கொள்ளை அடித்துக்கொண்டு, அன்றிரவே அவ்விருபது பேருடன் நம்மூர் செல்லாயி அம்மன் கோவிலுக்குப் போய், அங்கே அம்மன்முன்னே நின்று 'செல்வவானாயிருந்து யாசகருக்கீயாத லோபி வீட்டிலும், இம்மாதிரி கடன்

காரரை மோசஞ் செய்பவன், நிரபராதியின் மேல் படாப்பழி சுமத்துவோன் இவர்களுடைய வீட்டிலும் ஏழை வயிறெரியச் செய்யும் கொடும்பாவி வீட்டிலும் இருபது வருஷம் கொள்ளை யடித்துப் பின் நாட்டுக்கு வந்து தானதருமஞ்செய்து கோவில் குளங் கட்டி வாழ்வதென்று தீர்மானித்திருக்கின்றோம். அம் மணீ! உன் ஸந்நிதியில் ஸத்தியமாக இதனைக் கூறுகின்றோம். அம்மணி! நீ தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்று முன், பரசுராமர் இருபத்தொரு முறை க்ஷத்திரிய வம்சத்தை நாசஞ் செய்வேனெனச் சபதம் செய்து கொண்டதுபோல் சப தம் செய்து கொண்டு, அன்றிரவே எல்லோருடனும் புறப்பட்டு விட்டேன். அன்று முதல் இன்று வரையில், நாங்கள் செய்து கொண்ட ஸத்தியம் தவறாமல், எங்களில் பத்துப்பேர் தவிர மற் றவரெல்லோரும் இருந்து வருகிறோம். இது தான் நான் இந்தத் தொழிலிற் பிரவேசித்ததற்குக் காரணம். இது நம்மூரில் நடந்த காலத்தில் நீங்கள் இரண்டு மாதகாலம் ஊரிலில்லாமலிருந்தீர் கள். நாங்கள் செல்லாயி ஸந்நிதியில் சபதஞ்செய்துகொண்டு புறப்பட்டதையல்லாமல் மற்ற விஷயங்களைப்பற்றி நீங்கள் முன்பே கேள்விப்பட்டிருப்பீர்கள். நான் இவ்வாறு சபதஞ் செய்துகொண்டு வெளிக் கிளம்பியது ஒரு பிராணிக்குந் தெரி யாது. இன்றுதான் நான் தங்களிடம் கூறினேன். நான் வெளிப்புறப்பட்டுவந்த சில நாளைக்கெல்லாம் ஐயர் இறந்துவிட்ட தாகக் கேள்விப்பட்டு மிகவும் விசனமுற்றேன்'' என்றான்.

விவேகமுள்ளவன் சிறியவனாக இருப்பினும் அவனை நெருங் கிப் பேசி ஆசீர்வாதஞ் செய்வதும் தீயசொற்களாலே இகழும் பகைவர்களிடத்தும் கோபியாமல் பொறுமையாயிருந்து, இரங்கி வேண்டுவனவறிந்து புரிதலும் பெரியோர் குணமென்பது கண்ட வராகையினால், தம்முயிர்போல் மன்னுயிரை நினைக்கும் ஜடாவல் லவர், பஞ்சமகா பாபங்களுள் ஒன்றாகிய களவிலே தன்புத்தியைச் செலுத்தியவனாகிய வீரசிங்கனிடம், தன் குற்றங்களை யுணர்ந்து ஈசனிடத்து அவற்றைக்கூறி முறையிட்டுப் பாபமன்னிப்பைக் கேட்பவன்போல, வெளிப்படையாய்த் தன்னுடைய தீயசெய்கை யைக் கூறித் துயருறுந் தன்மை விளங்கவே, அவன்பால் அன்பு கூர்ந்து, சில புத்திமதிகள் கூறுகிறார்—

"அப்பா! நீ இன்னும் எத்தனை வருஷம் இவ்வரண்ய வாசத்தி லிருக்கவேண்டும்?"—என, வீரசிங்கன், "சுவாமி! ஒன்

றரை வருஷம்'' என்றான். ஜடாவல்லவர், "அப்பா! அவ்வித மிருந்துதான் ஆகவேண்டுமோ?'' என்று வினவினார். வீரசிங்கன், "சுவாமி நான் சபதம் செய்து கொண்டபடி யிருந்துதானாகவேண்டும். பிறகுதான் நாட்டிற்கு வரவேண்டும்'' என்றான். ஜடாவல்லவர், "சரி, அப்பா வீரசிங்கா! உன் சபதப்படி நீ இருந்து விட்டுப் பிறகு வரலாம். மகா பாதகமாகிய இந்தத் திருட்டுத் தொழிலை இனியேனும் விட்டுவிடு. "என்று பலநீதிகள் கூறினார்.

வீரசிங்கன், "உலகத்தில் பொருள் படைத்தவர்கள் கண் தலை தெரியாமல் திரிவதையும் தனக்குப் பொருள் வந்த வழியை நோக்காமல் மனிதர்களைக் கடுகடுத்துப் பேசுவதையும் அவர்களுடைய அகங்காரத்தையும், இறுமாப்பையும், டம்பத்தையும் என் மனம் பொறாமல் இந்தப் பாதகத்தொழிலுக் குடன்பட்டதே யல்லது வேறல்ல. சுவாமி! இந்தப் பாவிகளுடைய காசை நான் ஒன்றும் செய்யவில்லை.இதோ நிற்கும் என்னைச் சேர்ந்த வீரர்களுக்குக் கொடுத்து மிகுந்ததைக் கோவில், குளம், தானம், தருமம் முதலியவைகளுக்கு உபயோகப்படுத்தலாமென்று கருதி, இந்த மலையில் புதைத்து வைத்திருக்கிறேன். என் பிறவியை இவ்வாறு கழிக்க நேர்ந்தது; நான் என்ன செய்வேன்; விதி யாரை விட்டது?'' என்று கூறி வருத்தமுற்றான்.

ஜடாவல்லவர், "உலகத்தில் பொருள் படைத்தவர்களுக்கு அகங்கார முண்டாவது சகஜந்தான். அகங்காரமென்னும் அந்த யானையை அடக்குவது † தரித்திரமென்னும் அங்குசமொன்றே யாதலால். அதனை யானைப்பாகனாகிய பகவானே சமய மறிந்து பிரயோகிப்பார். உலகத்தில் ஜனங்கள் ஒருவரை ஒருவர் அடக்க வேண்டுமென முயல்வது சரியல்ல; எல்லாம் வல்ல இறைவன் ஸர்வபூத சாக்ஷியா யிருப்பவனாதலால், அவனை ஒளித்து ஒன்றும் செய்ய இயலாது. ஆகையால் நீ இந்தத் தொழிலை மேற்கொண்டது தவறு. இனியேனும் இவ்வாறு செய்யாமலிரு. போனது போகட்டும்; நீ இந்த மலையிலுள்ள வரையில் நான் சொல்லுகிறபடி செய்துவந்தால், உன் மகா பாபம் உன்னைவிட்டகலும்.

† "பெருத்திடு செல்வமாம் பிணிவந் துற்றிடில்
உருத்தெரி யாமலே யொளிம ழுங்கிடும்
மருத்துள தோவெனில் வாக டத்திலை
தரித்திர மென்னுமோர் மருந்திற் றீருமால்'' (விவேகசிந்தாமணி)

உனக்கு இப்பெரும் பாதகம், உலகத்துக்கு ஹிதஞ் செய்ய வேண்டுமென்னும் எண்ணத்தின் பயனாக விளைந்தமையால் நீ பகவானைக் குறித்துத் தவஞ் செய்வாயேயாயின் இது தீர்ந்து போகும்'' என்றனர். வீரசிங்கன், "சுவாமி! நிர்மூடனான நான் சகலலோக சரண்யனைக் குறித்துத் தவம் செய்யும் விதத்தை எப்படி யறிவேன்? அதையும் தாமே தெரிவித்தல் வேண்டும்'' என்று கூறி, நமஸ்கரித்தான். ஜடாவல்லவர் சற்றுச் சிந்தித்து, "அப்பா வீரசிங்கா! நீ நாளை முதல் திருட்டுத்தொழிலை ஒழித்து விட்டு முன் எங்கள் வீட்டில் இருந்தபொழுது நாங்கள் உன்னை யழைத்துவந்த பெயரை (நமசிவாயம்) வேறொன்றிலும் உன் சிந்தையைச் செலுத்தாமல், ஈசுவரனிடத்திலேயே நிறுத்தி, ஒரு நாளைக்குக் குறைந்தது லட்ச உரு ஜபித்துவா; இப்படி ஜபித்து வருவாயேயாயின், உன் பாபமகலும்! நான் கூறிய இந்த உபதேசம் மகாமகிமையுள்ளது! உன்னுடைய நாமம் பகவானுக்குரியது. அது சகல சாம்ராஜ்யமுந்தரத்தக்கது. அதற்கு மிஞ்சியதொன்றில்லை. நான் சொன்னதைத் தெரிந்து கொண்டாயா?'' என்று வான்மீகி மகரிஷி வேடனா யிருந்தபொழுது வனத்தில் வஸிஷ்டர் அவர்க்கு ராம நாம உபதேசம் செய்த முறைப்படி உபதேசித்தருளினார். இவ்வாறு இவர் உபதேசித்ததும் வீரசிங்கனை யழைத்து, "வான்மீகி ராம நாம உபதேசம் பெற்றது போல நீயும் பெற்றாய்; ஆதலின் நீ பாக்யவானே'' என்றார்.

வீரசிங்கன், "சுவாமி! வந்தனம்; தாம் கூறியபடி நாளை முதல் இந்தத் திருட்டுத்தொழிலை நான் விட்டுவிடுகின்றேன்; நான் மாத்திரமல்ல; என்னுடன் சேர்ந்த இவர்களையும் விட்டுவிடும்படி செய்கின்றேன்; இது ஸத்தியம்! தவறமாட்டேன்; நேரமாகிறது; இன்னும் சில விஷயங்களுண்டு சொல்கிறேன். உத்தரவு தர வேண்டும்''—என்றனன். ஜடாவல்லவர், "சரி, அப்படியாயின் விரைவிலே தெரிவிப்பாய்''—என்றார். வீரசிங்கன், "சுவாமி! இவ்விடமிருந்து ஒரு கூப்பாடு தூரத்தில் எங்கள் பொக்கிஷம் இருக்கின்றது. அங்கே தாமும் மற்றவர்களும் வரவேண்டும்'' எனப் பிரார்த்தித்தான். அதற்கிணங்கி யாவரும் அங்குச் சென்றனர்.

அவ்விடமானது சிறிய கொடி, செடி, புல் பூண்டு முதலியவைகளடர்ந்து காணப்பட்டதே யல்லது மனிதனுடைய பாதஸ்பரிசம் பெற்றதாகக் காணப்படவில்லை. அது, சுமார் முப்பது

நாற்பது சதுர அடி விஸ்தீரண மிருந்தது. இதைச் சுற்றி மதில் சூழ்ந்ததுபோல மேகமண்டலத்தை யளாவும் மூங்கிற் புதர்களும் சில காட்டு மரங்களும் அடர்ந்திருந்தன. நடுவில் ஒரு பெரிய வேப்பமர மிருந்தது. அம்மரத்தைச் சுற்றிலும் நான்கடி விஸ்தீரணத்திற்குப் புல் பூண்டு முதலியன ஒன்றும் காணப்படவில்லை. மரத்தடியில் இரண்டடி உயரமுள்ள ஒரு காளி தேவியின் சிலா விக்ரகம் விளங்கியது. அதன் முன்னிலையில் தேங்காய்களும், பழங்களும் நிறைந்த பெருங் கூடைகள் சில வைக்கப் பட்டிருந்தன. சாராயமும் கள்ளும் நிறைந்த ஜாடிகள் பல வைக்கப்பட்டிருந்தன. சிறிய மண்கூண்டில் ஒரு சிறிய விளக்கேற்றி வைத்திருந்தது. இவர்கள் யாவரும் இவ்விடத்திற்கு வந்ததும், இங்கே தரைமட்டத்திற்கு ஓர் அடி உயரமும் பதினைந்து சதுர அடி விஸ்தீரணமுமுள்ள ஒரு பாறையில் எல்லோரையும் வீரசிங்கன் உட்கார வைத்தான். பிறகு அங்கிருந்த வீரர்களில் ஒருவன் காளிதேவிக்குத் தேங்காயுடைத்து வைத்துத் தூபதீபங் கொடுத்துப் பூஜை செய்தான். வீரர்கள் அநேகந் தேங்காய்களைச் சூறையிட்டனர். பிறகு வீரசிங்கன் முதலிய அறுபது பேர்கள் எழுந்து கைகுவித்துக் காளிதேவியின் முன் நின்றுகொண்டு துதிபாடி வணங்கினர்; பாடித் தொழுதபின் வீரசிங்கன் உத்தரவின்படி வீரர்கள் அதற்குப் பக்கத்தில் பூமியை வெட்டி ஒரு சலவைக்கல்லைத் திறந்து ஒரு பெரிய செப்புத் தவலையைத் தூக்கிக்கொண்டு வந்து ஜடாவல்லவர் முன்னிலையில் வைத்து, அதனைத் திறந்து கவிழ்த்தனர். அதிலிருந்து விதவிதமான நகைகளும் பவுன்களும் மோகராக்களும் ரூபாக்களும் விழுந்தன. உடனே ஒரு வெள்ளித் தட்டு கொண்டுவரச் சொல்லி அதில் காளிதேவியின் பிரசாதமாகிய தேங்காய், பழம், வெற்றிலைபாக்குகளை வைத்து அவற்றுடன் சுமார் இருபதினாயிரம் ரூபா பெறும்படியான நகைகளையும், இருகைகொண்ட ரூபாக்களையும் பவுன்களையும் வாரிவாரி வைத்து அத்தட்டை வீரசிங்கன் ஜடாவல்லவரிடங் கொடுத்தான். ஜடாவல்லவர் அதிலுள்ள காளிதேவியின் பிரசாதமாகிய தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு இவைகளை மாத்திரம் எடுத்துக்கொண்டு, "அப்பா வீரசிங்கா, இந்தத் திரவியங்களும் நகைகளும் எந்தப் பாபியினுடைய சொத்துக்களோ தெரியவில்லை! இவற்றைக் கொள்வது சிறிதுந் தகுதியன்றாம்.

என்னைக் கட்டாயப்படுத்தாதே" என்று கூறி, நகைகளையும், நாணயங்களையும் எடுத்துக்கொள்ள மறுத்துவிட்டார். இப்பொழுது வீரசிங்கன் "என்ன ஆச்சரியம்! திருட்டுச் சொத்தினால் மகா பாதகம் நேரிடுமென்பதை உள்ளபடி அறிந்தவராதலாலேதான் இவர் மறுத்தனர்" என்று தன் மனத்திற்குள் நினைத்துக்கொண்டு திருட்டுத் தொழிலின் இழிவையுமுணர்ந்து ஜடாவல்லவரைப் பார்த்து, "சுவாமி! தங்கள் சித்தம்" என்று சொல்லிவிட்டு, முன்போலவே தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு முதலியவைகளைத் தட்டில் வைத்து முதலியாரிடம் நீட்டினான். அவரும் ஜடாவல்லவர், கூறிய நியாயமே கூறி நகைகளையும் நாணயங்களையும் எடுத்துக்கொள்ள மறுத்தார். வண்டிக்காரத் தேக்கனிடங் கொடுக்க, அவனும் மறுத்தான். பின்னர் தன் மருமகனிடமும் அவ்வாறே தந்தான். அவனும் மற்றவர்கள் மறுத்ததன் காரணமாகவோ அல்லது திருட்டுச் சொத்து கூடாதென்னும் காரணத்தாலோ மறுத்துவிட்டான். இதை வீரசிங்கன் கண்டு பெருவியப்புற்று, "சுவாமி! நீங்கள் எல்லோரும் நான் கொடுத்த இந்தத் திரவியங்களை பேற்றுக்கொள்ளாமைக்கு நான் வருந்தவில்லை. இப்பொழுது தாங்கள் எனக்கு ஆசிரியரானதுபோல், முதலியார் முதலிய மற்றவர்களும் ஆசிரியராயினர். இன்றே என் பிறவி பயனடைந்தது" என்று கூறி வணக்கத்துடன் அவர்களை யழைத்துக்கொண்டு புறப்பட்டு முன்னிருந்த இடத்திற்கு வந்தான்.

இப்போது மணி நான்கடித்தது. உடனே வீரசிங்கன் பல்லக்குக் கொண்டு வரும்படி பல்லக்குப் போகிகளுக்கு ஆஞ்ஞாபித்தான். எப்பொழுது வீரசிங்கன் வாயிலிருந்து உத்தரவு புறப்படுமோ என்று காத்திருக்கும் போகிகள், உடனே பல்லக்கைத் தீவட்டி சகிதமாய்க்கொண்டு வந்தார்கள். அதில் ஜடாவல்லவரையும் முதலியாரையும் ஸ்திரீகள் இருவரையும் ஏறிக்கொள்ளும்படி வீரசிங்கன் சொன்னான். அவர்கள் அவ்வாறே ஏறிக்கொண்டதும் பல்லக்குப் போகிகளுக்குப் பல்லக்கைச் செலுத்தும்படி ஆஞ்ஞாபித்துவிட்டு, அதன் இருமருங்கிலும் தன் மாப்பிள்ளை, முதலியார், வண்டிக்காரத் தேக்கன் ஆக மூவருடன் நடந்து சென்றான்.

பிறகு அரைமணி நேரத்திற்கெல்லாம் பல்லக்கு ரோட்டிற்கு வந்து சேர்ந்தது. இங்கு ஜடாவல்லவர் முதலியவர்கள் பல்லக்கி

லிருந்து இறங்கினார்கள். பிறகு எல்லோரும் விடைகொண்டு பிரியமாட்டாமல் பிரிந்து தத்தம் வழியே சென்றனர்.



## அத்தியாயம்—23

"அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

நல்லூரிலே முதலியார் ஒரு பெரிய தனவந்தரே யெனினும் இடம்பட வீடிடேல் என்பதற்கிணங்கத் தம்முடைய வீட்டைச் சிறிய அளவில் சகல லக்ஷணங்களு மமையக் கண்களைக் கவரும் வனப்பினதாய்க் கட்டியிருக்கின்றமையால் அவ்வீடிருக்கும் வீதி வழியே செல்லும் எவரும் அதனை ஒருமுறை நின்று பாராமல் அப்பாற் செல்லார். அவ்வீட்டு வீதியின் முன்வாயிலிலே ஒரு நாள் ஜடாவல்லவரும் முதலியாரும் வந்து அங்கு கூடாரம் போட்டது போல் நிழல் தரும் ஒரு மகிழமரத்தடியில் அமைக்கப்பட்டிருந்த சலவைக்கல் மேடையில் அமர்ந்தார்கள். ஜடாவல்லவர் வீற்றிருப்பதையும் முதலியார் வீற்றிருப்பதையும் இப்போது பார்ப்பவன் நல்ல மதியூகியாயின், முதலியார் ஜடாவல்லவரிடம் குருத்வம் பாராட்டுகின்றார் என்பதை நன்குணர்வான்; இருவரும் ஒருவர்மீது ஒருவர் பாராட்டு மன்பு, கண்ணப்பனுக்கும் கண்ணுதலுக்கும் வாய்ந்த அன்பினை யொக்குமென்பதை இனிது அறிந்தானந்திப்பான்; பிராமணரும் இதரவருணத்தவரும் உயிரும் உடலும் போலிருந்துலகத்திலே செய்வன செய்வதே கடனென்பதை மிக எளிதிலுணர்ந்து வருணபேதத்தின் தத்துவங்கண்டு களிப்பான்.

இவர்கள் இவ்வாறு அமர்ந்திருக்கையில் முதலியார், "சுவாமி! தானென்று நினைக்கத் தெய்வமொன்று நினைப்பது சகஜந்தானே—என்னும் பழமொழியை யுணர்ந்தேன்" என்றார். ஜடாவல்லவர், "எப்படி?" என முதலியார், "இன்று நானிந் நேரம் நாமக்கல்லிலே யிருக்கவேண்டியவன் என் தீர்மானப்படி! தமது சந்திப்பு, எனக்கு என்னைப் பாபமடுவிலிருந்து கரையேற்றத்தக்க தெப்பம்போ லேற்பட்டமையின் அது, இங்குக் கொணர்ந்து சேர்த்து என்றுமடையாத பரமானந்தத்தோடு

சம்பாஷணை செய்யும் பாக்கியத்தைத் தந்தது. இது எல்லாம் வல்ல இறைவன் செயலேயன்றோ''? என்று கூறிக் கண்களி லிருந்து முத்துப்போல் நீர்த்துளிகளை மளமளவென் றுகுத்தார். இதைக்கண்ட ஜடாவல்லவர், "இஃதென்ன? வசனித்ததற்கு மாறாக விசனிக்கின்றாரே!" என்றெண்ணி, "விசனமேன்? காரணமென்ன?" என்று கேட்க, முதலியார், "சுவாமி! கூறு கின்றேன்; என் மனத்திலுள்ளவைகளையெல்லாம் தம்மிடங்கூறிக் கடைத்தேற வேண்டுமென்னும் எண்ணங்கொண்டுதான் தம்மை நான் இங்கு அழைத்து வந்தது. வீரசிங்கன் கதைகேட்டதும் தம்மையவன் அறிந்து ஆட்பட்டதும் என்னை முற்றும் என் வழியிலிருந்து மாற்றிவிட்டன. சுவாமி! பாவியாகிய என்னுடைய சம்பாத்தியமும் உழைப்பும் காட்டுக்கே எறித்த நிலாவையும் கானலுக்கே பெய்த மழையையும்போல் வீணாயின:—என்கதி சாங்காலத்தில் சங்காரசங்கரா வெனில் வருமோ தருமம்—என்ப தற்கிலக்காகும்போலிருக்கிறது?

சுவாமி! நானும் உத்தியோகத்திலிருந்த காலத்தில் வீர சிங்கனைப்போல் கெட்ட நடவடிக்கைக்காளாய் சுமார் பதினாயிரம் ரூபா செலவிட்டிருக்கின்றேன். வீரசிங்கனுக்குப் பந்துமித்ரர்கள் பகைவரானதுபோல், எனக்கும் என்மனைவி, மாமி, மாமன் முதலிய யாவரும் பகையாயினர். என்மனைவி அவள் தாய் வீட்டுக் குப்போய் எட்டு வருஷ காலமாகிறது. நான் அவளைத் தள்ளிய பின் இன்னும் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை

நான் சொத்தை யிழந்ததைப்பற்றி இப்போது சிந்திக்க வில்லை. மனைவியை யிழந்து, இகபரநன்மை தரத்தக்க மக்கட்பேற் றைத்துறந்தேன் பாவி! அதுதான் என்னை வருத்துகின்றது. நான் இறப்பினும் அந்த வருத்தம் தீராதுபோலிருக்கின்றதே! சுவாமி அஞ்ஞானமென்னும் பேரிருளினிடையே அகப்பட்டு நல்வழி கண்டுய்யுந்துறையின்றி, நிலைதடுமாறி நின்ற என்முன் ஞான பானுவாகத் தோன்றி அவ்விருளினின்றும் மீட்டருளிய தமது பெருமையைப்பற்றி நான் என்ன சொல்லப்போகின்றேன். "சுவாமி, நான் தங்களையே இந்த ஜன்மத்தில் எனக்குப் பந்து மித்திரர் தாய் தந்தை குரு தெய்வம் எல்லோருமாகக்கொண்டு; என் வரலாறு முழுமையும் சிறிதேனும் மறைக்காமல் தெரிவித் தேன். தாம் தமது குடும்ப சகிதமாய் இவ்வூருக்கு வந்து என்னு டைய சொத்து வீடுவாசல் யாவும் தம்முடையன வாகவே

கொண்டு என்னுயுளுள்ள மட்டும் என்னேடு கூடவே தாமும் வசித்துவர வேண்டும். இதைத்தாம் மறுப்பது கூடாது. தமக்கு ஓர் அழகான வீடு குடியிருப்புக்கும் குடும்ப காலக்ஷேபத்துக்குக் குறைவில்லாத நிலங்களும் கொடுத்து விடுகின்றேன். என் சொத்தை நல்ல மார்க்கத்தில் செலவிட்டு, எனக்குப் பரத்திலேனும் சுகமுண்டாகும்படி செய்யவேண்டியது தமது கடமை. வீரசிங்கனையும் அவன் நாட்டகத்தே வந்தபிறகு நம்மூரிலேயே நம் கூடவே வைத்துக்கொள்ள நான் பிரியப்படுகிறேன். இந்த யோசனை, வீரசிங்கன் தன் கதையைச் சொல்லி வரும்போதே என் மனத்திலுதித்தது. பிள்ளையார்புத்தூரைவிட நம்மூர் வசித்தற்குச் சௌகரியமான ஊரல்லவா? ஸ்நானஞ் செய்யக் காவிரி நதியும் சுவாமி தரிசனஞ் செய்ய அருகே ஜம்புகேசுவரமும் இருக்கின்றனவன்றே?—சித்தந் தெளிவுறுமாயின், உத்தமகுண மேலிடு மன்றே? ஊழ்வினைப்பயன் நல்லதாமாயின் யாவும் தாமாகவே வந்தடையுமென்பது ஸத்தியமன்றே?—என்று சொன்னர்.

இப்படி முதலியார் பேசிமுடிக்க, அப்போது தபாற்காரன் ஒரு கடிதங் கொண்டுவந்து சந்திரசேகர ஜடாவல்லவரெனப் பேர் வாசித்துக் கொடுத்தான். அதை ஜடாவல்லவர் வாங்கிப் படித்தார்; அதில், முதல் நாள் இரவு மூன்று மணிக்குத் திரிபுர சுந்தரிக்குப் புருஷப்ரஜை பிறந்து குழந்தையும் தாயும் சௌக்கியமாயிருப்பதாக எழுதியிருக்கக்கண்டு மகிழ்ந்து முதலியாரிடம் அவர் அக்கடிதத்தைக் காட்டினர். முதலியார் “சுவாமி! தாங்கள் எனது கிருகத்தில் கால்வைத்தவேளை நல்லவேளைதான்; சுபகரமான செய்தி கேட்டேன். உங்களுக்கும் பரம ஸந்தோஷந் தரத்தக்க செய்தி. இதுபோல் எனது வேண்டுகோட்கும் மன முவந்திரங்க வேண்டும்” என்றார். ஜடாவல்லவர், “சரி அப்படியே செய்வோம்! இதனை இறைவன் கட்டளையாகக் கொள்கின்றேன். நான் நாளையதினங் காலை ரயிலிலே ஊர்போக வேண்டும்; தாம் புண்யாகவாசனத்துக்கு அவசியம் வரவேண்டும்” என்றழைத்தார். முதலியார் ஒப்புக்கொண்டு, “சுவாமி, இன்னும் ஒரு மாதத்தில் இவ்வூருக்கு வரமுடியாதா? தங்களுக்கு அவ்விடம் ஆகவேண்டிய காரியம் என்ன! அது எதுவாயிருந்தாலும் நான் முடித்துக்கொடுக்கின்றேன்”—என்றார்.

ஜடாவல்லவர்.—“ஒன்றுமில்லை. கொஞ்சம் நிலமிருக்கின்றது. அதை விற்றுவிட்டோ அல்லது குத்தகைக்கு அடைத்து

விட்டோ வரவேண்டும். இஃதன்றி விதந்துவான என் தங்கை ஊரிலேயே யிருக்கின்றாள். அவளுக்குக் கொஞ்சம் வட்டி நடந்துவருகிறது. அது என் மூலமாகவே இருக்கின்றது. அந்தக் குடும்பத்துக்கும் தகுந்த ஏற்பாடு செய்தல்வேண்டும். பிறகு இவ்விடம் வருகிறேன். அதைப்பற்றி யாதொரு ஆக்ஷேபணையு மில்லை'' என்றார். பின்னர் இருவரும் இது ஸம்பந்தமாகவே நெடு நேரம் பேசிக்கொண்டிருந்து பிரிந்தனர்.



## அத்தியாயம்—24.

"உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்"

மறுநாள் காலையில் ஜடாவல்லவர் முதலியாரிடம் அன்போடு விடைகொண்டு புறப்பட்டுப் பிள்ளையார் புத்தூர் வந்து சேர்ந்தார்; அன்று பகல் தமது மாப்பிள்ளை ராமாமிருதத்துக்கும், சிவசுவாமி ஐயருக்கும் கடித மெழுதினார்; தேக்கனை யழைத்து அவனிடம் முதலியாருக்கும் தமக்கும் நடந்த சம்பாஷணைகளைக் கூறிப் பெரியார், எல்லோரிடமும் அன்பும் அருளுமுடையவரா யிருப்பர் என்பது விளங்க அவனையும் அவ்வூருக்குக் குடிவந்து விடும்படி வற்புறுத்திச் சம்மதிக்கும்படி செய்தார்; பிறகு தமது தங்கை ஸ்ரீமதியிடம் தாம் நல்லூருக்குப் போவதைப்பற்றித் தெரிவித்து அவளுடைய காலக்ஷேபத்திற்குத் தக்க சௌகர்யங்களை யேற்படுத்திக் கொடுத்து அவளை அவ்வூரிலேயே குடியிருக்கும்படி செய்தார்.

இதன் பின் புண்ணியாகவாசனத்துக்கு முதல் நாள் மாலை முதலியார், ராமாமிருதம், சிவசுவாமி ஐயர் முதலியவர்கள் வந்து சேர்ந்தார்கள். ஜடாவல்லவர் தொட்டியத்திலிருந்த வீரசிங்கனுடைய மாப்பிள்ளைக்குக் கடிதமெழுதி யிருந்தாராதலால் அவனும் மங்கையர்க்கரசி முதலானவர்களோடு வந்து சேர்ந்தான். மறுநாள் புண்ணியாகவாசனம் ஒரு பெரிய விவாகம்போல் வெகு விமரிசையாக நடந்தது. இதுகண்டு அவ்வூரிலே விளங்கிய லோபிகள் மனமாழ்கினர். முதலியார் அவ்வூரில் ஜடாவல்லவருடைய வேண்டுகோளுக்கிணங்கி இரண்டுநாள் தங்கிப் பின் ஊருக்குச் சென்றார். சிவசுவாமி ஐயரும் இரண்டுநாளிருந்துவிட்டுச்

சென்றார். இந்த இரண்டுநாளும் ஜடாவல்லவர் ராமாமிருதத்தி னிடமும் சிவசுவாமி ஐயரிடமும் தாம் முதலியார் அவர்களுடைய ஆதீனத்தில் ஜம்புகேசுவரத்திற்கு அருகாமையில் நல்லூரில் வசிக்க நிச்சயித்திருப்பதைத் தெரிவித்து அவர்கள் சம்மதத்தைப் பெற்றார். பிள்ளையார் புத்தூரில் இரண்டு வார மிருந்தார்; அப்பால் அவர் இரண்டு வாரமும் அவ்வூரில் தமது நண்பர்களைப் பார்ப்பதும் அவர்களிடம் தாம் நல்லூர் போவதைத் தெரிவிப்பதும், போகவேண்டாமென்று தடுப்பவர்களுக்குச் சமாதானஞ் சொல்வதுமாகவே யிருந்தார். திரிபுரசுந்தரியும் இவ்வாறே தன்னுடைய தோழிமார்களிடம் விடை பெற்றுக்கொண்டு அவர்களுக்குத் தக்க சமாதானங் கூறிப் பிரிந்தாள். பிறகு ஜடாவல்லவர் ஒரு நல்ல நாளில் குடும்பத்துடன் புறப்பட்டு நல்லூர் போய்ச் சேர்ந்தார். தேக்கனும் குடும்பத்துடன் அவ்வூர்போய்ச் சேர்ந்தான். முதலியார் இவனுக்குச் சில நிலங்களைக் கொடுத்துத் தமது பண்ணை பார்த்து வரும்படி திட்டப்படுத்தினார். இப்பொழுது தேக்கன், தான் பரம ஜீவகாருண்யரான ஜடாவல்லவரை யடுத்து அவர்க்குழைத்து வந்ததின் பயனை யறிந்து என்று மடையாத மகிழ்ச்சியை யடைந்து சுகமாக வாழ்ந்துவந்தான். ஜடாவல்லவர் நாடோறும் வழக்கம்போல் அதிகாலையில் காவிரி ஸ்நானஞ் செய்வதும் மாலையில் ஆலயஞ்சென்று கருணாநிதியைத் தரிசிப்பதுமாயிருந்து சந்துஷ்டியாய்க் காலங்கழித்து வந்தார்; தர்ம நியாயங்களையும் சாஸ்திர விதியையும் ஈசுவர பக்தியையும் முதலியாருக்கு போதித்து அவரை அவ்வழியிலேயே செல்லும்படி செய்துவந்தார். இரண்டு மாதகாலமும் ராமாமிருதம் முதலியார் அவர்களின் பிரார்த்தனைப்படி அங்கேயே இருந்து அவர் மகிழ்ச்சிபெறுமாறு ஒவ்வொருநாளும் பாடி, பசு, பட்சியாதி ஜீவராசிகளையும் ஈடுபடுத்தும் ஸங்கீதத்தினருமையைத் தெரிவித்தான். முதலியார் அவன் பேரில் மிகப் பிரியங்கொண்டு அவனுக்குத் தக்க வெகுமதி அளித்தார். பிறகு அவன் சிலநாளிருந்துவிட்டுப் பவானி சென்றான்.

இப்படி யிருந்து வருகையில் ஒருநாள் ஜடாவல்லவர், தேக்கன், முதலியார் மூவரும் வீரசிங்கனைப் பார்க்கச் சென்றார்கள். இவர்களைக் கண்டதும் வீரசிங்கன் தக்க மரியாதையுடன் உபசரித்துச் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து பின் ஜடாவல்லவரைப்பார்த்து "சுவாமி, நான் தாங்கள் கூறியபடியே சிவநாம

உச்சாரணஞ்செய்து அவர் திருவடித் தியானத்திலேயே யிருந்து வருகின்றேன். தங்களுடன் சேர்ந்து வசிக்க என் மனம் நாடுகிறது. ஆண்டவனுக்குக் கிருபை வரவேண்டும்'' என்முன். ஜடாவல்லவர் “அப்பா வீரசிங்கா! வருந்தாதே! ஆண்டவன் திருவருள் கிடைக்கும்'' என்று சொல்லித் தாம் வீரசிங்கனை விட்டுப் பிரிந்தது முதல் சென்ற சில மாதகாலமாக நடந்த விஷயங்கள் முழுவதையுங்கூறி, அவனையும் நல்லூரில் வந்து வசிப்பதற்கு இணங்கும்படி செய்தார். விரசிங்கன் பரமானந்தமடைந்து, கவலைகள் யாவு மொழிந்து, “சுவாமி! நான் இந்தக்காட்டி லிருக்க வேண்டிய இன்னும் சில மாத காலத்தை எவ்வாறு கழிப்பேன்?'' என, ஜடாவல்லவர் “இங்கு நீ இருக்கவேண்டிய காலம் முழுவதையும் ஆண்டவன் தவத்திற் செலவிடு; இதுதான் தவத்திற்கு யோக்கியமான இடம்' என்றார். வீரசிங்கன் அதுகேட்டு மகிழ்ந்தான். பிறகு மூவரும் அவனிடம் விடைபெற்றுக்கொண்டு ஊர் வந்து சேர்ந்தனர்.

இப்படி யாவரும் மனோகரமாய்க் கவலையற்று வாழும் நாளில் ராமாமிருதம் சிவசுவாமி ஐயருடைய உத்தரவுப்படி மங்கள வல்லியை ஒரு சுபதினத்தில் தன் வீட்டிற்கழைத்துக்கொண்டு இல்லற மென்னும் நல்லறத்தை நடத்தி வந்தான். ஜடாவல்லவரும் திரிபுரசுந்தரியும் பரமாநந்த பரிதரானார்கள். வீரசிங்கனும் சில மாதகாலமானபின் தன்னைச்சேர்ந்த சில வீரர்களுடன் தான் இந்நாள்வரையில் சேர்த்து வைத்திருந்த திரவியங்களையு மெடுத்துக்கொண்டு நல்லூர் வந்து சேர்ந்தான். முதலியார் அவனை வரவேற்றுத் தம்முடனேயே வசிக்கும்படி செய்தார்; அவனோடு வந்த வீரர்களையும் தமக்கு வேலையாட்களாக வைத்துக்கொண்டார். வீரசிங்கன் தான் கொண்டுவந்த பொருளை ஜடாவல்லவர் கூறியபடி அநேக தான தர்மங்களுக்கும் தேசப் போது நன்மைகளுக்கும் கொடுத்துதவினான்; தனக்கென்று சிறிதும் வைத்துக் கொள்ளவில்லை. இவ்வாறு அனைவரும் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

முற்றிற்று.

